

# கல்கி
## பொருளடக்கம்

விசுவாவசு தை 10 ✲ ஜனவரி 23





பாரத தேசமும் பாகிஸ்தானும் பொதுவானதொரு சரித்திரத்தாலும் மரபாலும் பிணைக்கப்பட்ட இரு மகத்தான நாடுகள். இவை இரண்டும் நட்புப் பூண்டு, பல துறைகளில் நெருக்கமாக ஒத்துழைக்க வேண்டியதே இவ்விரு நாடுகளின் இயற்கை விதி. இவற்றிடை நல்லெண்ணமும், நட்பும், பரஸ்பரக் கூட்டுறவும் நிலவுவதால் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் மகத்தான நலன்கள் கிட்டும் என்பதோடு ஆசியக் கண்டம் முழுவதிலுமே சமாதானமும் சுபிட்சமும் வளர இது பேருதவி புரியும்.

— அமரர் லால்பஹாதூர் சாஸ்திரி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா [- பாரதியார்





மலர் 25 ● இதழ் 26

# உயிர்த் தியாகம் செய்த உத்தமர்

**பா**கிஸ்தானுடன் நாம் சமாதானமும் சிநேக பாவமும் கொள்வதற்குத் தாஷ்கெண்டில் வழி கண்ட சாந்தி வீரர் லால் பஹாதுர் சாஸ்திரியை மகிழ்ச்சியுடன் தாய் நாட்டில் வரவேற்பதற்குப் பதிலாக அவரது சடலத்தின் வரவைக் கண்ணும் கண்ணீருமாகக் காண வேண்டிய துர்ப்பாக்கியம் நமக்கு நேர்ந்து விட்டது.

தெய்வ சங்கற்பம் நமது அறிவுக்குப் பூரணமாக எட்டாவிடினும் இதிலும் சில உட்பொருள்களை உணர முடிகிறது. தாஷ்கெண்டில் இந்தியாவும் பாகிஸ்தானும் பிரகடனப்படுத்திய சமாதான சாஸனம் பூரண சக்தி பெறுவதற்கே ஓர் அரிய உயிர் பணயமாக வேண்டுமென ஆண்டவன் கருதி நமது அருமைப் பிரதமரைத் தன்னிடம் சேர்த்துக்கொண்டான் போலும்! ஏனெனில் தியாகத்தினாலன்றி எந்த உத்தமப் பணியும் நிறைவு பெறுவதில்லை. காந்தியடிகளும், லிங்கனும், கென்னடியும் பிராணத் தியாகம் செய்ததாலேயே, அதிசயமான முறையில் துவேஷங்கள் மறைந்து ஒற்றுமை உருவானதைச் சரித்திரத்தில் கண்டோம். இறுதிவரை சமாதானத்துக்காக அயராது உழைத்த ஸ்ரீ லால் பஹாதுரின் மறைவு வீண் போகாது. இந்தியா — பாகிஸ்தான் ஒற்றுமைக்கு அதுவே அஸ்திவாரமாக அமையும்.

உயிரோடு இருந்தபோது மட்டுமின்றி, அநாயாசமாக உயிரை நீத்ததிலும் தாய்த் திருநாட்டுக்கு நலன் கூட்டி வைத்த ஸ்ரீ லால் பஹாதுர் பாக்கியசாலி. அவரைப் போல, அரசியல் வாழ்வில் விரோதிகளைக் கண்டிராதவர் வெகு சிலரே. ஊழல், நேர்மையின்மை முதலிய குற்றச்சாட்டுகளுக்கு இம்மியும் இலக்காகாத நல்ல சரித்திரத்தைப் பெற்ற அபூர்வப் பிறவிகளில் அவர் ஒருவர். மனத்தில் உறுதியிருந்த போதிலும் செயலில் படபடப்புக் காட்டாத உயர் குணமும் எளிமையும் அவரிடம் இயற்கையாக அமைந்திருந்தன.

அவர் பிரதமர் பதவி ஏற்றபின் அலை அலையாக வந்து மோதிய பிரச்னைகள் அனந்தம். அவற்றில் பேரலையாகப் பாகிஸ்தான் ஆக்கிரமிப்பு நிகழ்த்திய போது நமது நாட்டு மக்களுக்கும் ராணுவத்துக்கும் உத்வேகம் ஊட்டி, தனிப் புகழ் கொண்டார் ஸ்ரீ லால் பஹாதுர்.

போர் முனையில் வாகை சூடியபோதிலும் அவரது உள் மனம் சமாதானத்தையே விரும்பியது. தேசத்தில் யுத்த சிந்தனை மிகுந்திருந்த சமயத்தில் சென்னைக்கு விஜயம் செய்த அவர் கட்சிக் கூட்டமொன்றில் பேசும்போது 'பாகிஸ்தானும் இந்தியாவும் நிரந்தரமாகப் போர் புரிவது அசாத்தியம். நாம் கௌரவமான முறையில் சமாதானத்துக்கு வழி காணவே முயல வேண்டும்' என்றார். அந்தரங்கசுத்தமான அம்முயற்சிக்கு உருவம் தருவதற்கே ருஷியப் பிரதமரின் அழைப்பை ஏற்றார். கோஸிஜின் அவர்களின் மனப்பூர்வமான பேருதவியாலும், பாகிஸ்தான் அதிபர் அயூப் அவர்களின் நல்லிணக்கத்தாலும் இந்தியா — பாகிஸ்தான் ஒற்றுமைக்கு அடிகோலும் சாஸனத்தில் தமது ஒப்பத்தையும் பொறித்தார். எடுத்த காரியத்தை முடித்த பின்பே, பழத்தைத் தருவதற்காக மலர் உதிர்வது போல, சாஸனம் பழுத்துப் பலனளிப்பதற்காகத் தமது உயிராகிய மலரை உகுத்து விட்டார். போரில் காணும் வெற்றியை விடப் புனிதமான சமாதான வெற்றி கண்ட ஸ்ரீ லால் பஹாதுர், அந்தச் சிகரமான செயலுக்குப் பிறகு வேறெந்தச் செயலும் தேவையில்லாதது போல் நிறைவு பெற்று, அமர வாழ்வை எய்திவிட்டார்.

அவரைப் பிரிந்து வருந்தும் அருமை மனைவி மக்கள், மற்றும் இந்தக் குடும்பத் துயரை அவர்களோடு இதயம் கலந்து பகிர்ந்து கொள்ளும் நம் அனைவருடைய துர்ப்பாக்கியத்தையும் நீக்கி, நமக்கு அடக்கத்தையும் ஒற்றுமை உணர்வையும் அருள ஆண்டவனை வேண்டுவோம்.

# ராஜாஜியின் கருத்துக்கள்



கீதாசாரியன் கூறியபடி நிகழ்ச்சிகளை இயக்குவிக்கும் காரணங்களுக்கு அப்பாற்பட்ட மகத்தான சக்தியானது நாம் கற்பனையும் செய்திராத பெரும் கொடுமையை விளைவித்துவிட்டது. ஸ்ரீ லால் பஹாதூர் அவர்கள் மகத்தான பெ.ாதி தரும் முறையில் மரணம் எய்திவிட்டார். எந்த அரசாங்கமும் அளிக்க முடியாத பெரும் கௌரவத்தைச் சமாதான களத்தில் அவர் அடைந்த திடீர் மரணம் அவருக்குச் சூட்டிவிட்டது. வெறும் அன்னம் மந்திரத்தினால் பலி பிண்டமாகிப் பொருள் பெறுவது போல, அவரது மறைவினால் தாஷ்கெண்ட் பிரகடனத்தின் வாசகம் புதுச் சக்தியும், பொருளும் பெற்றுவிட்டன. அவர் தாமே பலிப் பொருளாகித் தாஷ்கெண்ட் பேச்சு வார்த்தையை ஒரு யக்ஞமாக்கி விட்டார். அவரது மரணத்தின் முத்திரை பெற்றுவிட்ட சமாதான ஒப்பந்தம் ஓர் ஆன்மிக சக்தி பெற்று விட்டது.

பெரியோர்களில் ஒருவரோடொருவரை ஒப்பிடுவதில் பொருளில்லை. அரபு நாட்டுக் குதிரை ஒரு காரியத்துக்குப் பயனாகுமெனில் பாரத தேசத்துப் பசு மற்றொரு காரியத்துக்குப் பயனாகும். ஸ்ரீ நேருஜி அந்நிய நாட்டுப் பண்புகளில் தேர்ந்திருந்தவர். ஸ்ரீ லால் பஹாதூர் பாரத தேசத்துப் பசு போன்றவர். முற்றிலும் நம் நாட்டுப் பண்பிலேயே உருவானவர் அவர். பொது அறிவை உபயோகிப்பதில் விசேஷ ஆற்றல் பெற்றிருந்தவர். உடுத்துக் கொள்ளக் கூடிய சாதாரண ஆடைகளுக்கு இடமின்றிப் பெட்டி நிறையப் பட்டாடைகளைத் திணிப்பது போல் சிலர் தங்கள் அறிவில் நுட்பமான விஷயங்களுக்கே இடம் தந்து, சாமானியமாகத் தேவைப்படும் பகுத்தறிவுக்கு இடம் தராமலிருந்து விடுவார்கள். ஸ்ரீ லால்பஹாதூர் அவர்களோ இவ்வாறின்றிப் பொது அறிவுக்கே பெரும் இடம் தந்தவர். அதிகம் பேசாதவர். விரைவில் தீர்மானமாக முடிவு எடுக்கும் திறமை பெற்றவர். எல்லாவற்றுக்கும் மேலாக அடக்கம் என்ற குணத்தைப் பெற்று அதனால் உயர்ந்து விளங்கியவர். காற்றிலே தீபம் அணையாது அடக்கமாகக் காப்பது போல் தம்மை அடக்கத்தினால் காத்துக் கொண்டவர்.

தாஷ்கெண்டில் உடல் என்ற கூட்டை உதறிச் சென்ற அபூர்வ ஆன்மாவுக்கு நாம் எழுப்பக் கூடிய நினைவுச் சின்னம் இந்தியா — பாகிஸ்தான் ஒற்றுமைக்கு வழி காண்பதுதான். சொற்ப நாட்களுக்கு மனத்தில் நின்று மறையும் தபால் தலையும், நிக்கல் நாணயமும் போலன்றி ஸ்ரீ லால் பஹாதூரின் நினைவுக்கு இதுவே நிரந்தரச் சின்னமாக அமையும். நம்மிரு நாடுகளின் நட்புறவு காச்மீரப் பிரச்னையைச் சார்ந்ததல்ல. இப்பிரச்னையை மறந்து, பொதுவான பொருளாதார நோக்கங்களுக்காக இணைந்து செயலாற்றினால்தான் உண்மையான சுதந்திரத்தைக் காத்துக் கொள்ள முடியும். போட்டியும், பூசலும், விரயமுமின்றி இரு நாடுகளுக்காகவும் வேண்டிய பொருட்களைச் சேர்ந்து உற்பத்தி செய்து பொதுவாக விநியோகம் செய்து கொள்வோம். சுங்க வரியும், வியாபாரத் தடைகளுமின்றி நம் இரு நாடுகளும் ஒன்றுபட்டு உற்பத்தியும், தொழிலும் செய்ய வேண்டும் என்பதை ஸ்ரீ ராம் மனோகர் லோஹியாவும் ஆதரித்துப் பேசியுள்ளார். இதனால் துவேஷமும் போர்ச் சிந்தனையும் மறையும். இரு நாடுகளிலும் சுபிட்சம் ஏற்படும். போட்டியை விட ஒத்துழைப்பே நன்மை தர வல்லது எனக் காண்போம். இதனால் நம்மிரு நாடுகளின் கௌரவமும் சர்வதேச வட்டத்தில் அமோகமாக உயரும். நாம் விரோதிகளாகக் கருதும் வல்லரசுகளும் நம் நண்பர்களாகி, நாம் பிச்சை கேட்காமலே தாமாக உதவுவார்கள். தனித் தனியாகவும் சேர்ந்தும், நம்மிரு நாடுகளும் ஆசியாவின் பெரும் சக்தியாக விளங்க முடியும். இரு நாடுகளும் பொருளாதாரத்தில் ஒத்துழைத்து முன்னேறினால், 'காச்மீரம் என்ற சிறிய விஷயத்துக்காகவா பேதப்பட்டு நின்றோம்?' என நாமே பிற்பாடு அதிசயிப்போம். தூங்கி எழுந்தவன் துர்சொப்பனத்தை மறப்பதுபோல் சென்று போனதையெல்லாம் மறப்போம்.







சோவியத் பிரதம மந்திரி கோஸிஜினும், பாகிஸ்தான் அதிபர் அயூப்கானும் தாஷ்கெண்டில் ஸ்ரீ சாஸ்திரியின் இறுதி யாத்திரை ஊர்வலத்தில் கலந்து கொண்டு சடலத்தை ஏந்தி நடந்தவர்களுள் முதல்வர்களாக விளங்கிய பண்பு சரித்திர முக்கியத்துவம் பெற்று விட்டது.

சோவியத் பிரதமர் கோஸிஜின் அமரத்துவம் அடைந்த பாரதப் பிரதமர் சாஸ்திரிக்கு மலர் வளையம் சாத்தி மரியாதை செலுத்துகிறார்.

அமரராகி விட்ட லால்பஹாதூருக்கு ராஷ்டிரபதியும் இடைக்காலப் பிரதமர் நந்தாவும் அஞ்சலி செலுத்துகின்றனர்.

புது தில்லி ராம் லீலா மைதானத்தில் பாரத ராஷ்டிரபதி தலைமையில் நடந்த அநுதாபக் கூட்டத்தில் அமெரிக்க உதவி ஜனாதிபதி ஹம்ப்ரே பேசுகிறார். மவுண்ட்பாட்டனையும் படத்தில் காணலாம்.













1. நேருஜியின் மறைவுக்குப் பிறகு லால் பகதூர் சாஸ்திரி பாரதப் பிரதமராகப் பதவி ஏற்கிறார். 2. இன்றைய அலுவல்களைக் கவனிக்கத் தயார் என்பது போல் இல்லத்தின் வாசலுக்கு உற்சாகமாக வருகிறார் ஸ்ரீ சாஸ்திரி. 3. ராஷ்டிரபதியுடன் இரு பாரதப் பிரதமர்களும். 4. நேருஜியும் லாலும். 5. உப ராஷ்டிரபதியுடன் பாரதப் பிரதமர்.



சாஸ்திரிஜி காமன்வெல்த் பிரதமர் மகாநாட்டுக்காக லண்டனுக்கு விஜயம் செய்த போது பி.பி.ஸியில் பேட்டி நடக்கிறது.





இந்தியப் பிரதமர் பிரிட்டிஷ் பிரதமர் ஹெரால்ட் வில்ஸனுடன் பேச்சு முடிந்து கை குலுக்குகிறார்.

ஸ்ரீமதி லலிதா சாஸ்திரி உற்று நோக்கக் கணவர் காட்மண்டு அரண்மனையிலுள்ள பார்வையாளர் புத்தகத்தில் கையெழுத்திடுகிறார்.

நிக்கோபாரில் இளநீர் சுவைத்து மகிழ்ந்த பிரதமர் அத் தீவுக் குழந்தைகளுடன் களித்து மகிழ்கிறார்.

சென்னை விஜயத்தின்போது சாஸ்திரி தம்பதியினர்.







# என்ன சேதி?

○ தமிழ் எழுத்துலகின் இழப்பு
○ காட்கில் மறைந்தார்
○ பஞ்சாபில் ஒரு நஷ்டம்
○ பிமல்ராய் பிரிவு

சிக்கலான அரசியல் பிரச்னைகளை யெல்லாம் சிடுக்கெடுத்துத் தெளிவான தமிழில் எழுதுவதில் தனித் திறமை பெற்றிருந்தவர் திரு டி. எஸ். சொக்கலிங்கம் பிள்ளை. செய்திகளுக்காக அன்றி அவருடைய தலையங்கங்களைப் படிப்பதற்காகவே அவர் ஆசிரியராக இருந்த பத்திரிகைகளை வாங்கும் வழக்கம் இருந்தது. இப்படி அவர் திறமை பெற்றதற்குக் காரணம் அவர் ஏதோ விசேஷமாகத் தமிழ் பயின்று விட்டிருந்ததோ என்றால் இல்லை என்றுதான் கூற வேண்டும். மனத்தில் தோன்றியதைத் தெளிவாகவும், அழுத்தமாகவும் எழுதியதாலேயே அவர் பெயர் பெற்றார்.

1920ல் சுதந்திரப் போராட்டத்தில் சேர்ந்தார். பின்னர் சேலம் வரதராஜுலு நாயுடு நடத்தி வந்த "தமிழ் நாடு" என்ற பத்திரிகையில் உதவி ஆசிரியராகப் பணியாற்றினார். அதை விட்டுக் 'காந்தி' என்ற காலணா பத்திரிகை நடத்தினார். அதுதான் அவருடைய பேனா முனையைக் கூர்படுத்தியது. தமிழ் நாட்டில் அப்பத்திரிகை கடச்சட விற்பனையாயிற்று. தினமணி தொடங்கப்பட்டபோது, அதன் முதல் ஆசிரியராகப் பதவி ஏற்று அரும் பணியாற்றினார். அவருடைய காலத்தில்தான் தினமணி தமிழ் மக்கள் வாழ்வில் இன்றியமையாத அம்சமாகிவிட்டது. பிறகு தமது சொந்த முயற்சியால் "தினசரி" என்ற பத்திரிகையைத் தொடங்கினார். அது நீடிக்கவில்லை. சமீபகாலத்தில் 'நவசக்தி'யின் ஆசிரியராகவும் கௌரவ ஆசிரியராகவும் இருந்து மறைந்துவிட்டார். திரு டி. எஸ். சொக்கலிங்கம் பிள்ளையின் மறைவினால் வருந்தும் அவருடைய உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் அநுதாபம் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

ஃ ஃ ஃ

மகாராஷ்டிரத் தலைவர் திரு என். வி. காட்கில் ஒருவகையில் புரட்சிகரமான மனிதர். காங்கிரசுக்குள் இருந்து கொண்டே அதைப் பன்முறை கண்டித்த பெரியார். ஆதியில் காங்கிரஸ் இயக்கம் படித்தவர்களிடையே மட்டும் செல்வாக்குப் பெற்றிருந்தபோது, தமது சக்திவாய்ந்த பிரசங்கங்களால் பம்பாய்ப் பொதுமக்களையும் அதில் ஈடுபடச் செய்த பெரியார்களில் ஒருவர். மத்திய சர்க்காரில் தொழில் மந்திரியாகப் பணியாற்றியிருக்கிறார். பிம்பிரியில் உருவாகியுள்ள பரும் மருந்து நிலையம் அவரது முயற்சிக்கு ஒரு சான்று. பஞ்சாப் ராஜ்யத்தின் கவர்னராக இருந்திருக்கிறார். எப்பதவியிலிருந்தாலும், மனத்தில் பட்டதை உள்ளது உள்ளபடி கூறும் அசாத்திய தைரியம் பெற்ற அசாதாரண காங்கிரஸ்காரர் அவர். சமீப காலத்தில் காங்கிரஸின் போக்கைக் கண்டு வெறுப்படைந்து, ராஜாஜி நடத்தி வரும் இயக்கத்தைப் பாராட்டிப் புகழ்ந்திருக்கிறார். கடைசியாக அவர் புனா சர்வ கலாசாலையின் உப அத்தியட்சகராகப் பணியாற்றி வந்தபோது சிறிது நோயுற்றிருந்து காலமானார். அவரது மறைவு மகாராஷ்டிரத்துக்கும், சுதந்திரச் சிந்தனை உலகுக்கும் பெரும் நஷ்டமாகும்.

ஃ ஃ ஃ

பஞ்சாப் ராஜ்ய சுதந்திரக் கட்சியின் பெருந் தலைவர் ஜத்தேதார் உத்தம்சிங் நாகோகி மறைந்து விட்டார். ஆஜானுபாகுவாய், பிராயம் முதிர்ந்த அப் பெரியவர் சுதந்திரக் கட்சியின் மூலகர்த்தாக்களில் ஒருவராக விளங்கினார். அவர் பலகாலம் தேசப் பணியில் ஈடுபட்டு காங்கிரஸில் செயலாற்றி வந்தவர். காங்கிரஸின் விவசாயக் கொள்கை, கூட்டுப்பண்ணைமுறை, நில உச்சவரம்பு ஆகியவை விவசாயப் பெருங்குடி மக்களான பஞ்சாபியரை நசுக்கிவிடும் என்று முதன் முதல் குரல்கொடுத்தவர். ராஜாஜி சுதந்திரக் கட்சி தொடங்கியவுடன் மனமகிழ்ச்சியுடன் அதில் சேர்ந்து அரும் பணி புரிந்து வந்தார். அவர் மறைவினால் கட்சி நஷ்டமுற்றது என்பது வாஸ்தவமாயினும், அவரது உத்வேகத்தை உன்னிப் பார்க்கும் பல இளைஞர்கள் கட்சியில் சேர்ந்து பஞ்சாப் விவசாயிகளின் சுதந்திர வாழ்க்கை முறையைக் காப்பாற்ற முன்வருவார்கள் என்பதில் ஐயமில்லை!

ஃ ஃ ஃ

அரசியலிலும், எழுத்துலகிலும் பெரு நஷ்டங்களுக்கு ஆளான இந்தியா, திரைப்பட உலகிலும் ஒரு பேரிழப்புக்கு ஆளாகியுள்ளது. புகழ்பெற்ற படாதிபதியும் டைரக்டருமான பிமல்ராய் சமீபத்தில் மறைந்தது விசனிக்கத் தக்கதாகும். கல்கத்தா நியூ தியேட்டர் ஸ்தாபனத்தில் ஒளிப்பதிவாளராகப் பணி தொடங்கிய பிமல்ராய் தமது திறமையாலும், உழைப்பினாலும் பிரசித்தி பெற்ற டைரக்டர்களில் ஒருவரானார். அவரது 'தோ பிகா ஜமீன்' என்ற படம் இந்தியாவில் பரிசு பெற்றதோடு, கான்ஸ் அகில உலகத் திரைப்பட விழாவிலும் பாராட்டுப் பத்திரம் பெற்றது. பிமல்ராய் தயாரித்தளித்த 'கௌதம புத்தர்' என்ற செய்திப் படம் ராஷ்டிரபதியின் தங்கப் பதக்கம் அடைந்தது அவரது திறமைக்குச் சான்றாகும். வெறும் கவர்ச்சிப் படங்களாக மட்டுமின்றி, கலை நுணுக்கம் கொண்ட படைப்புக்களை அளித்த ஸ்ரீ பிமல்ராய் ஐம்பத்தாறு வயதில் பம்பாயில் அகால மரண மடைந்தது ரசிகர்களுக்கெல்லாம் ஈடுசெய்ய இயலாத நஷ்டம்.

ஏ.எஸ்.ராகவன்

எழுதும்

புதிய தொடர்கதை

# யாத்திரை



# கல்கி

பிப்ரவரி 13

விசேஷ மலரில்

ஆரம்பமாகிறது

ஜே.யார்

# வெற்றித் திருநகர்

அகிலன்

## அத்தியாயம் இருபத்தைந்து

## சாம்ராஜ்யத்தின் முதுகெலும்பு

கிருஷ்ணதேவராயர் விபத்துக்குள்ளாகிச் சில தினங்கள் சென்றவுடனேயே, அமைச்சர் சாளுவ நரசிம்மரின் போக்கில் ஒரு புதிய மாறுதலைக் கண்டான் விசுவநாதன். சக்கரவர்த்தியின் நிலைக்காக ஒரு புறம் அவர் வருந்தினாரென்றாலும், மறுபுறம் அவருடைய அதிகாரப்



போக்கு வளர்ந்து கொண்டே வந்தது. பொறுப்புக்களும் கடமைகளும் வளர்ந்ததை ஒட்டி, அவருடைய செருக்கும் வளரத் தொடங்கி விட்டது. அப்பாஜி எவ்வாறு தம்மை உருவாக்கிக் கொண்டு வந்தாரோ, அவ்வாறேசாளுவ நரசிம்மரும் தம்மை யறியாமலே அதிகார ஆசையில் பற்றுதல் கொள்ளலானுர்.

அதே சமயம் அமைச்சரின் ஆட்சித் திறமையும் விசுவநாதனை வியப்படையச் செய்தது. ''சக்கரவர்த்திகளுக்கு உடல் நலமில்லை என்பதால், சாம்ராஜ்யத்தில் எந்தக் குறையும் தலை காட்டிவிடக் கூடாது; வெளிப் பகைவர்களுக்கு அது இடம் கொடுப்பதுபோல் ஆகிவிடும்'' என்று விசுவநாதனிடம் கூறிய அமைச்சர், அவ்வாறே முழுச் சுமையையும் தாமே ஏற்றுக் கொண்டு செயலில் இறங்கி விட்டார்.

அவருடைய செயல் திறன், சுறுசுறுப்பு, உழைப்பார்வம், கடமை உணர்ச்சி இவ்வளவும் விசுவநாதனை மிகவும் கவர்ந்தன. ஏனே, இவ்வளவுக்கும் பின்பே இருந்த அவரது செருக்கையும் அகந்தை உணர்வையும்தான் அவனுல் புரிந்து கொள்ள முடியவில்லை. சக்கரவர்த்திக்குப் பதிலாகத் தாமே அப்போது சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்தில் அமர்ந்து விட்டதுபோல் அவர் அவ்வப்போது நடந்து கொண்டார்.



ஆனால் அவர் விசுவநாதனிடம் மட்டிலும் மறந்தும் தம் அதிகாரத்தைக் காட்டவில்லை. தம்மோடு சரிசமமாக அவனையும் இருக்கச் செய்து, தம்மைப் போலவே அவனும் செருக்குடன் நடந்து கொள்ள வேண்டுமென்று அவனைத் தூண்டி வரலானார்.

''வயதில் இளைஞன் என்பதால் உன்னுடைய ஆணைகளைத் தட்டிக் கழிப்பதற்கு இங்கே உள்ளவர்கள் முயல்வார்கள். அதற்கு மட்டிலும் இடம் கொடுத்து விடாதே. நீ தளநிகாரியாக இருப்பதோடு, இப்போது நிர்வாகப் பொறுப்பையும் என்னோடு பகிர்ந்து கொண்டிருக்கிறாய். யாராவது கட்டளையை மீறினால் உடனடியாக என் கவனத்துக்குக் கொண்டு வா. தண்டனை வளிப்பதில் தயக்கம் காட்டக் கூடாது!'' என்று அவனுக்கு ஆலோசனை கூறினார்.

விசுவநாதனுக்கு யாரைப் பற்றியும் குறைகூற வேண்டிய அவசியமே அங்கு ஏற்படவில்லை. கிருஷ்ணதேவராயரிடம் சிறு பிராயம் முதல் அவன் பழகியவனாதலால், கட்டளைகளை எளிதாக நிறைவேற்றச் செய்வதற்கான வழிவகைகளை அவன் அவரிடமிருந்து கற்று வைத்திருந்தான். அமைச்சர் சாளுவநரசிம்மரையே அன்போடு, ''செல்லப்பா !'' என்று அழைத்து, அன்பின் வாயிலாக அவரை இயக்கி வைத்துக் கொண்டிருந்தார் சக்கரவர்த்தி. விசுவநாதனும் தன்னுடைய அதிகாரத்தை அன்பின் வழியாகச் செயல்பட வைத்ததால், அவனுடைய குறிப்பை உணர்ந்து கொண்டே அவனுக்காகப் பலரும் கடமைகளை ஆவலோடு நிறைவேற்றி வைத்தனர்.

சாளுவநரசிம்மரின் ஏவல்களோ அவரிடம் கொண்ட அச்சத்தால் நிறைவேற்றப்பட்டன. அவரை நேரில் கண்டு பேசுவதற்கோ, அவரோடு பழகுவதற்கோ, அவரிடம் தங்கள் கருத்தை வெளியிடுவதற்கோ பலரும் அஞ்சினார்கள். அவரும் அப்படி மற்றவர்கள் தம்மைக் கண்டு அஞ்சி விலக வேண்டும் என்பது போலவே நடந்து கொண்டார்.

மற்றவர்களின் அச்சத்துக் குரியவராக அரண்மனையில் நடந்து கொண்ட அமைச்சர், அன்று ராமபத்திர நாயக்கரிடம் மட்டும் மிகவும் நெருக்கமாக இருந்து ரகசியமாகப் பேசிக் கொண்டிருந்தது விசுவநாதனுக்கு என்னவோ போலிருந்தது. அவனுடைய தந்தையிடம் பணியாற்றும் அதிகாரி என்பதால் ராமபத்திர நாயக்கரிடம் அவ்வளவு நெருங்கிப் பழகுகிறாரா அமைச்சர்?

சிறிது நேரம் சென்று அமைச்சர் மட்டிலும் போய்ச் சக்கரவர்த்தியைத் திருமலா தேவியாரின் மாளிகையில் கண்டு பேசி விட்டு வந்தார். சக்கரவர்த்தியின் உடல் நலனை விசாரிப்பதற்காகவும், அரசியல் ஆலோசனைகளுக்காகவும் அவர் அப்படிச் சென்று வருவது வழக்கம். அவ்வாறே இன்றும் அவரைக் கண்டு பேசிவிட்டுத் திரும்பினார்.

பிறகு வெகுநேரம் அவர் அரண்மனை அலுவலகத்தில் தங்கியிருக்க வில்லை. தம்முடைய மாளிகையிலிருந்து எழுதிக் கொண்டு வந்திருந்த அன்றைய வேலைக் குறிப்பை விசுவநாதனிடம் கொடுத்து, 'இந்த வேலைகளை நீயே முடித்துவிடு; நான் ராமபத்திர நாயக்கரோடு வெளியே புறப்படுகிறேன்'' என்றார்.

ஓலையைப் பெற்றுக் கொண்டான் விசுவநாதன். ராமபத்திர நாயக்கரிடம் அவருக்கு என்ன வேலை என்பதை அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை.

''மாலையில் நேரடியாக என் மாளிகைக்கு வந்து விடு; அங்கேயே சாப்பாடு வைத்துக் கொள்ளலாம்'' என்று கூறிவிட்டு, நாயக்கரையும் அழைத்துக் கொண்டு கிளம்பினார் அமைச்சர்.

அவர் கொடுத்துச் சென்ற ஓலைக் குறிப்பின் எழுத்துக்களைக் கவனித்தான் விசுவநாதன். லட்சுமியின் மென்தளிர்க் கரத்தால் எழுதப்பெற்ற எழுத்துக்கள் அதில் முத்து முத்தாகக் காட்சியளித்தன. அவருடைய நினைவுக்காக அன்றையக் கடமைகளை அவள் வரிசைப்படுத்தி எழுதியிருந்தாள். அதையே மெய்ம்மறந்து சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்தான் விசுவநாதன்.

பொதுவாக அவன் விஜயநகரத்துப் பெண்களிடம் கண்டிராத ஒரு தனிச் சிறப்பு லட்சுமியிடம் இருப்பது போல் அவனுக்குத் தோன்றியது. பிற பெண்களைப் போலவே அவள் அழகுக் கலைகளில் நன்கு தேர்ச்சியுற்றிருந்தாள் என்றாலும் அதோடு அவள் நின்றுவிடவில்லை. அமைச்சரின் நம்பிக்கைக்குப் பாத்திரமான அவருடைய சொந்த அமைச்சராகவும் விளங்கினாள். தந்தையாரின் குறிப்பறிந்து அவருடைய அரசியல் கடமைகளிலும் அவள் பங்கு கொண்டாள். அவளுடைய இந்தப் பண்புதான் அவனுக்குப் பெரு வியப்பைத் தந்தது.

விசுவநாதனுக்கு அருகில் அமர்ந்திருந்த அரியநாத முதலியார் அவன் கனவுகளில் மூழ்கி விட்டதைத் தமது ஓரக் கண்களால் கவனித்துப் புன்முறுவல் பூத்தார்.

''விரைவில் தங்களுக்கே இப்படி லட்சுமி தேவியார் ஓலை எழுதிக் கொடுக்கும் காலம் வரப் போகிறது; அப்போது அமைச்சருக்குத்தான் கை ஒடிந்தது போலாகி விடும்..... பாவம்!'' என்று கூறிச் சிரித்தார் அவர்.

விசுவநாதனின் முகம் நாணத்தால் சிவந்தது. ''இல்லை..... நான் இதில் குறிப்பிட்டிருந்த வேலைகள் என்னவென்று கவனித்தேன்........'' என்று மழுப்ப முயன்றான் அவன். ஆனால் அரியநாத முதலியார் கூறியது அவனுக்குப் பெருமையாகவே இருந்தது. பல்வேறு இரகசியங்கள் நிறைந்த அரசியல் வாழ்வில், அதை உணர்ந்து கொண்டு உதவி செய்யக் கூடிய மனைவி கிடைப்பது பெரும் பாக்கியமல்லவா ?

லட்சுமியும் அப்போது அவள் மாளிகையில் அவளுடைய தந்தையாரின் இரகசியப் பேச்சுக்குத்தான் அவரை அறியாமல் உதவி செய்து கொண்டிருந்தாள். இராமபத்திர நாயக்கரை அமைச்சருடன் ஒன்றாகக் கண்டவுடனேயே அவளுக்கு ஆனந்தம் பொங்கியது. நாகம நாயக்கரிடமிருந்து நற்செய்தியுடன் அவர் வந்திருக்க வேண்டும் என்பதை அவர் முகத்திலிருந்தே அவள் கண்டு கொண்டாள். நேரிலும் அவரிடம் கேட்டு, நாகம நாயக்கர் வீரசோழனை வென்றுவிட்டு

மதுரைக்குச் சென்றிருக்கிறார் என்பதை அறிந்து கொண்டாள்.

அவளுக்கு உடனடியாக அந்தச் செய்தியைக் கமலாதேவியாரிடம் கூற வேண்டுமென்ற துடிப்பு. "அப்பா! நான் அத்தையாரிடம் போய் இதைத் தெரிவித்து விட்டு வருகிறேன்" என்று விசுவநாதனின் மாளிகைக்குக் கிளம்பினாள் அவள்.

"அப்படியே அவர்களையும் இங்கு அழைத்துக் கொண்டு வந்து ஒரு விருந்துக்கு ஏற்பாடு செய்; விசுவநாதனும் அரண்மனையிலிருந்து நேரே இங்கு திரும்பி விடுவான்."

மகிழ்ச்சியோடு கமலாதேவியைக் காண்பதற்காகப் புறப்பட்டாள் லட்சுமி. அப்போது அவள் அங்கு இல்லாமலிருந்ததே சாளுவ நரசிம்மருக்குப் பெரிய உதவியாக இருந்தது. ஒரு கவலை நீங்கப்பெற்றவர் போல் நிம்மதியாக ராமபத்திரநாயக்கரிடம் பேசத் தொடங்கினார்.

"சக்கரவர்த்திகளுக்கு முதுகெலும்புகளில் ஒன்று முறிந்து போய் விட்டது. அவர்களுடைய உயிருக்கு ஒன்றும் ஆபத்தில்லை என்றாலும் அவர்களால் முன்போல் தீவிரமாக எதையும் கவனிக்க முடியாது. அரண்மனைக்குள் அவர்கள் எழுந்து நடமாடும் அளவுக்கு, விழாக் காலங்களில் மட்டும் அவர்கள் ஊர்வலங்களில் கலந்து கொள்ளும் அளவுக்கு, இனி நாம் அவர்களை நம்ப முடியும்" என்றார் அமைச்சர்.

ராமபத்திரநாயக்கர் வெலவெலத்துப் போனார். உடல் நலம் ஓரிரு மாதங்களில் தேறிவிடும் என்று நினைத்துக் கொண்டிருந்த அவருக்கு இது ஒரு பேரிடியாகவே இருந்தது.

"முதுகெலும்புமுறிந்துவிட்டதென்றால்.."

"நம்முடைய சாம்ராஜ்யத்தின் முதுகெலும்பே முறிந்து நிற்கிறது என்ற இரகசியத்தைத்தான் இப்போது உங்களிடம் சொல்கிறேன். அதனால்தான் அவர்கள் எழுந்து நடமாடும் வரையிலாவது தம்மை யாரும் காண வேண்டாம் என்று கட்டளையிட்டிருக்கிறார்கள். நடமாடத் தொடங்கிவிட்டால், பிறகு அவர்கள் முன்போலவே தம்முடைய நோயை மறைத்துக் கொண்டு அன்றாட அலுவல்களைக் கவனிப்பார்கள்."

அந்த இரகசியத்தைத் தெரிந்து கொண்டவுடனேயே ராமபத்திரநாயக்கரை ஒருவகை அச்சம் சூழ்ந்து கொண்டது. மிகவும் கவனமாகப் பாதுகாக்க வேண்டிய இரகசியம் என்று மட்டிலும் அவர் தெரிந்து கொண்டார். சாம்ராஜ்யத்தின் எதிர்காலத்தைப் பற்றிய கவலை அதே கணத்துக்குள் அவரிடம் சூழ்ந்து கொண்டது.

"சக்கரவர்த்திகளின் குமாரர் திருமலைதேவரும் அப்பாஜி குடும்பத்தாரின் வஞ்சனைக்குப் பலியாகி விட்டார். அடுத்தாற் போல் சக்கரவர்த்திகளின் தம்பி அச்சுதராயர் இருக்கிறார்; அவரை விட்டால் மருமகன் ராமராயர் இருக்கிறார். ராமராயரும் இப்போது வடக்கே போயிருக்கிறாரென்று தெரிகிறது."

"அச்சுதராயருக்கு ஆற்றல் இல்லை; உரிமை இருக்கிறது. ராமராயருக்கு ஆற்றல் இருக்கிறது ஆனால் உரிமை இல்லை. இவர்களுக்குள் இப்போதிருந்தே நாம் மறைமுகமான போட்டியை எதிர்பார்க்கலாம். ஆனால் சக்கரவர்த்திகள் உயிரோடு உள்ள வரையில் எதையும் வெடித்துக் கிளம்பாதபடி பார்த்துக் கொள்வார்."

"எதிர்காலம்?" என்று கேட்டார் ராமபத்திரநாயக்கர்.

"அச்சுதராயரின் எதிர்காலம் பற்றியோ ராமராயரின் எதிர்காலம் பற்றியோ நாம் இப்போதிருந்தே கவலைப்பட வேண்டிய அவசியம் இல்லை. உங்களுடைய எதிர்காலம் என்ன? இந்தக் கவலைகள் உங்களுக்கு இருந்தால் போதும். மற்ற விஷயங்களை நான் கவனித்துக் கொள்கிறேன்."

சாம்ராஜ்யத்தின் எதிர்காலத்தைப்பற்றிப் பேசுவதற்குப் பதிலாகச் சாளுவநரசிம்மர் நாகம நாயக்கர் பற்றியும் ராமபத்திரநாயக்கர் பற்றியுமே பேசினார்.

"இனி நீங்களும் நாகமரும் இரண்டு உடல்களும் ஓருயிருமாக இருந்து கொண்டு, தமிழ் நாட்டில் உறுதியான ஆட்சியை ஏற்படுத்திவிட வேண்டும். நம்முடைய எதிர்கால நம்பிக்கை இனித் தமிழ் நாட்டில்தான் இருக்கிறது" என்றார் அமைச்சர்.

ராமபத்திரநாயக்கருக்கு ஏதும் தெளிவாக விளங்கவில்லை. அமைச்சரே தொடர்ந்து பேசினார்.

"நீங்கள் தெற்கே புறப்படும் போது நான் உங்களிடம் நாகமருக்கு ஓர் ஓலை கொடுத்து அனுப்புகிறேன். அதை அவரிடம் சேர்ப்பித்துவிட்டு, அவருடைய கட்டளைகளை நிறைவேற்றி வாருங்கள். அது ஒன்றுதான் இனி உங்களுடைய எதிர்காலத்துக்கு வழி!"

ராமபத்திர நாயக்கர் எப்போதுமே தாமாகச் சிந்தித்துப் பழகாதவர். நாகம நாயக்கர் அமைச்சரிடம் கொண்டிருந்த அதே நம்பிக்கை அவருடைய அதிகாரியான ராமபத்திரருக்கும் இருந்தது. தம்முடைய எதிர்காலத்துக்கு வழிகாட்டிய அமைச்சருக்கு அவர் தமக்குள் நன்றி செலுத்தினார்.

அந்த எதிர்காலம் எப்படியிருக்குமென்ற யோசனை அவருக்கில்லை.

## அத்தியாயம் இருபத்தாறு

# விசுவநாதன் எதிர்காலம்?

அரண்மனையிலிருந்து திரும்பிய விசுவநாதன் அமைச்சரின் மாளிகைக்குள் நுழைந்த போது அங்கு ஒரே கலகலப்பாக இருந்தது. அவனுடைய அன்னையார் கமலாதேவியும் லட்சுமியும் கூடத்தின் ஓர் ஓரத்தில் அமர்ந்து கூடத்துக்குள் நடப்பதை ஆவலோடு வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர். அமைச்சர் சாளுவநரசிம்மர் குதூகலத்தோடு அங்கு யாருடனோ பேசிக் கொண்டிருந்தார். ராமபத்திரநாயக்கரும் உடனிருப்



"படவா! வீணு ஊரைச் சுத்தாதேடா. அஞ்சிலே வளையாதது அம்பதுலே வளையாது! தெரியுமா?'

"அப்போ உன் முதுகு அஞ்சு வயசிலேயே வளைஞ்சு போச்சா பாட்டி?"

பதைக் கண்ட விசுவநாதன், அரண்மனையிலிருந்து அவர்கள் இருவரும் நேரே அங்குதான் வந்திருப்பார்கள் என்பதைப் புரிந்துகொண்டான்.

அங்கிருந்த மூன்றாவது மனிதர் வயது சென்ற ஓர் ஏழைக் கிழவர். அவர் அப்போது ராமபத்திரநாயக்கரின் வலதுகரத்தைப் பார்த்து அவருடைய எதிர்காலம் பற்றிக் குறி சொல்லிக் கொண்டிருந்தார்.

சகுனம் குறி, சாஸ்திரம், அசரீரி இவற்றிலெல்லாம் விஜயநகரம் அதிகமான நம்பிக்கை வைத்திருந்த காலம் அது. ஏதாவது ஒரு நற்செயல் தொடங்க வேண்டுமானால், சகுனம் பார்த்தே அதை அங்கு தொடங்குவார்கள். அவர்களுடைய சகுனத்தில் ஒன்று 'அசரீரி' என்பது. அவர்கள் ஒரு செயலை நினைத்துச் சகுனம் பார்க்கச் சொல்லும் போது, அவர்களுடன் தொடர்பில்லாத யாரோ இருவர் அவர்களுக்குக் கேட்கும்படியாக நல்ல சொற்களைப் பேசிக் கொண்டிருந்தால் அதையே சுபசகுனமாக எடுத்துக் கொள்வார்கள்.

சாளுவநரசிம்மர் இவற்றிலெல்லாம் அளவுக்கு மீறிய நம்பிக்கை கொண்டிருந்தார். அவரைத் தேடி அவரது எதிர்காலத்தைச் சொல்ல வந்தவர்கள் யாருமே வெறுங்கையோடு திரும்பியதில்லை. இப்போது எங்கிருந்தோ தொலைதூரத்துக் கிராமத்திலிருந்த ஒரு வயோதிகர் வந்திருந்தார். அவருடைய திறமையைப் பரிசோதிப்பதற்காக முதலில் அவரிடம் ராமபத்திரநாயக்கரைக் கரம் காட்டச் செய்தார் அமைச்சர். எதிர்காலத்தைப் பற்றி அவர்கள் இருவரும் பேசிக் கொண்டிருந்த சமயம் பார்த்து இப்படி ஒருவர் வந்து சேர்ந்தது அவருக்குச் சுபசகுனமாகவே தோன்றியது. ராமபத்திர நாயக்கரைப் பற்றிய விவரங்களை அவர் ஓரளவுக்குச் சரியாகக் கூறி விட்டதால் அவர் சொல்லில் நம்பிக்கை விழுந்துவிட்டது அமைச்சருக்கு.

அப்போதுதான் விசுவநாதனும் அங்கு வந்து சேர்ந்தான். அவனைக் கண்டவுடன் பெருமகிழ்ச்சியோடு வரவேற்றுவிட்டு, அவனிடம் அந்தப் பெரியவரைப் பற்றிக் குறிப்பிட்டார் அமைச்சர். ஏற்ற சமயத்தில் அவன் வந்து விட்டதாகவும் அவனுடைய கரத்தையும் பெரியவரிடம் நீட்ட வேண்டுமென்றும் அவர் வற்புறுத்தினார்.

லட்சுமியும் விசுவநாதனின் தாயாரும் இந்த விஷயத்தில் அமைச்சரோடு சேர்ந்து கொண்டனர். விசுவநாதன் மறுத்துப் பார்த்தான். யாரும் அவனை விடுவதாக இல்லை. மற்றவர்களுடைய மன மகிழ்ச்சிக்காகவும் லட்சுமியின் பிடிவாதத்துக்காகவும் தயங்கியவாறே தன் வலது கரத்தை நீட்டினான்.

குறி சொல்லும் பெரியவர் முதலில் அவனுடைய அங்க லட்சணங்களைக் கூர்ந்து நோக்கிக் கொண்டார். பின்னர் அவனுடைய கைரேகைகளில் அவர் நாட்டம் சென்றது. வியப்போடு ஒவ்வொன்றாகப் பார்த்துவிட்டு, பெருமை பொங்கச் சுற்றிலுமிருப்பவர்களை நோக்கினார். 'என்ன சொல்லப் போகிறார்?' என்ற ஆவல் அங்கிருந்த ஒவ்வொருவர் முகத்திலும் துடித்தது.

"ஆயிரத்தில் ஒருவர் கைகூட எனக்கு இப்படிக் கிடைப்பதில்லை!" என்று பூரிப்போடு ஆரம்பித்தார் அவர். "இது இராஜயோகமுள்ள கை; பெருநெறி கொண்டு வாழக்கூடிய ஓர் உத்தமனின் கை; இந்தக் கரத்தால் இவர் தமது குடிமக்களுக்கு வாரி வாரி வழங்கப் போகிறார்."

சாளுவநரசிம்மரின் விழிகளில் சட்டென்று புத்தொளி மின்னியது. "இராஜயோகமுள்ள கை என்றால், அது எப்போது எங்கே என்று சொல்லுங்கள்."

"இப்போதே இவருக்கு அந்த யோகம் வந்து கொண்டிருக்கிறது. தாமாக அதைத் தேடி இவர் போக வேண்டியதில்லை. அதுவே இவரைத் தேடி விரைவில் வந்து சேரும். தெற்குத் திசையில் பெரிய சாம்ராஜ்யத்தையே நிலைநாட்டப் போகிறார் இவர். இவருக்கு முன்னால் இருந்ததைவிட, இவருக்குப் பின்னால் வரப் போவதைவிட, இவருடைய ஆட்சி மிகச் சிறந்ததாக இருக்கும். இப்படி ஒருவரை அரசராகப் பெறும் நாடு பாக்கியம் செய்த நாடு!"

விசுவநாதனுக்கு இந்தப் புகழ்மொழிகளைக் கேட்டுக் கொள்வதற்கே பிடிக்கவில்லை. நாணித் தலைகவிழ்ந்தான். குறி சொல்பவர் தொடர்ந்து கூறலானார்.

"குளங்கள் வெட்டிக் குடிமக்களுடைய வாழ்க்கைக்கு வசதிகள் செய்வார். கோவில்களைப் புதுப்பித்து அவர்களுடைய உள் வாழ்வை உயரச் செய்வார். இவருடைய ஆட்சியில் கள்வர் பயமும் இருக்காது; பகைவர்களின் படையெடுப்பும் நடக்காது. வலிமையான படைகள் திரட்டி, கோட்டைகள் எழுப்பி, பகைவர்கள் அஞ்சும்படியாக நாட்டை ஆள்வார். நம்முடைய சக்கரவர்த்திகள் கிருஷ்ண தேவராயருடைய ஆட்சியைத்தான் இவர் ஆட்சிக்கு ஒப்பிட்டுச் சொல்ல முடியும்."

இப்போது விசுவநாதன் அந்தப் பெரியவர் கூறிய ஒவ்வொரு சொல்லையும் தன் மனத்தில் பதித்துக் கொண்டான். நல்லாட்சிக்கு அவர் விளக்கம் கூறுவதுபோல் அவனுக்குத் தோன்றியது. கிருஷ்ணதேவராயரைப் பற்றி அவர் குறிப்பிட்டதால் அவனுக்கு அவரிடம் பற்றுதல் ஏற்பட்டு விட்டது.

லட்சுமியும் கமலாதேவியும் அவனுடைய திருமணத்தைப் பற்றி அறிந்து கொள்ள விரும்பினார்கள். லட்சுமியால் அதை வாய் விட்டுக் கேட்க முடியவில்லை. கமலாதேவி கேட்டு விட்டார்.

''ஆமாம்; அதைச் சொல்லுங்கள்!'' என்று தம் குமாரத்தியைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே கேட்டார் சாளுவநரசிம்மர்.

''இவரை மணந்து கொள்ளப் போகும் பெண் கொடுத்து வைத்தவள்; அவளும் இதே விஜயநகரத்தில்தான் வளர்ந்து கொண்டிருக்கிறாள்'' என்று அவர் கூறியவுடனேயே, தன் அடக்கத்தையும் மீறிக் கொண்டு விசுவநாதன் லட்சுமியை நோக்கினான். அவளும் தன் விழி வீச்சால் அவனுடைய விழிகளை நோக்கிவிட்டுச் சரேலென்று உள்ளே பாய்ந்தோடினாள். அதற்குப் பிறகும் அவளுக்கு அங்கே நிற்கச் சிறிதும் துணிவில்லை.

''எப்போது ஆகும்?'' என்று வினவினார் அமைச்சர்.

''காலம் இன்னும் வரவில்லை. இராஜ யோகம் வந்த பிறகு, அதை நிலைநாட்டிக் கொண்டவுடன்தான் இவருக்குத் திருமண யோகம் இருக்கிறது.''

அமைச்சரின் நெற்றி சுருங்கியது. சற்று நேரம் எதையோ ஆழ்ந்து யோசித்தார். பிறகு ராமபத்திரநாயக்கரை நோக்கினார். ராமபத்திர நாயக்கருக்கும் விசுவநாதனைப் பற்றித் தெரிந்து கொள்ள முடிந்ததில் எல்லையற்ற ஆனந்தம். அவருடைய தலைவரான நாகம நாயக்கர் இந்தச் செய்திகளைக் கேட்டால் எவ்வளவு பூரிப்படைவார்!

கைபார்த்த முதியவர் கடைசியாகச் சில விஷயங்களையும் குறிப்பிட்டார்.

''இராஜயோகம் என்றால் ஜனகமகாராஜாவுடைய இராஜயோகத்தைப் போல் இருக்கக் கூடியதென்றும் சொல்லலாம். இராஜ போகத்தில் வாழ்ந்தும் அவர் ஒரு யோகியைப் போலவும் நடந்து கொண்டார். இவரும் அப்படித்தான் பற்றற்ற யோகி போல் இருந்து அதை ஓர் ஊழியமாகச் செய்வார். இராஜரீகம் நடத்துவது இவருக்குச் சாதாரண ஊழியம் செய்வது போலத்தான். முடிசூடிக் கொள்வது, சிம்மாசனத்தில் அமர்ந்து செருக்கோடு வாழ்வது, பெருமைக்காக ஆசைப்படுவது இவைகளை ஒரு பொருட்டாகவே நினைக்க மாட்டார். ஆனால் நினைப்பதைச் செய்து முடிக்கும் ஆற்றல் மட்டும் இவருக்கு உண்டு.''

சாளுவநரசிம்மருக்கு முதியவர் கடைசியாகக் கூறிய சொற்கள் ஓர் எச்சரிக்கையாகவும் இருந்தன. அதிகாரம், பதவி, சொந்த வாழ்க்கையின் முன்னேற்றம் எதையும் பொருட்படுத்தாத லட்சியப் பற்றுதல் ஒன்று அவனுள்ளே இருப்பதை அவர் கண்டிருக்கிறார். இளமைப் பருவம் கழிந்துவிட்டால் அந்தப் போக்கும் மாறிவிடும் என்ற நம்பிக்கை அவருக்கு ஏற்பட்டது.



''உங்க மாமியார் ரொம்ப ஆசாரந்தான் போலிருக்கு. காப்பியைச் சூப்பிச் சாப்பிடாமல் தூக்கிக் குடிக்கிறாங்களே?''

''ஊம்... லிப்ஸ்டிக் விணாகாமல் இருக்கத்தான் அப்படி!''

குறி சொல்ல வந்த ஏழைக் கிழவருக்கு அவர் எதிர்பாராத அளவுக்கு அங்கே வெகுமதிகள் கிடைத்தன. அமைச்சர் கொடுத்தது போதாதென்று, லட்சுமியும் அவரிடம் பொற்காசுகள் நிறைந்த ஒரு பட்டுப் புடவையை இரகசியமாகக் கொடுத்து அனுப்பினாள்.

விருந்து முடிந்தது. விசுவநாதனும் அவன் தாயாரும் விடைபெற்றுச் சென்ற பிறகு, அமைச்சரும் ராமபத்திரநாயக்கரும் மீண்டும் தனித்திருந்தனர்.

''நாகம நாயக்கருக்கு நான் எல்லாவற்றையும் விவரமாக ஓலையில் எழுத முடியாது. மேலும் ஓலையில் எழுதும் செய்திகளை மற்றவர்கள் பார்த்து விடுவதற்கும் ஏதுவுண்டு. ஆகவே நீங்கள்தாம் இங்கு கண்டது கேட்டது எல்லாவற்றையும் நாகமருக்கு எடுத்துச் சொல்ல வேண்டும்.''

''கட்டாயம் சொல்கிறேன். அவருடைய குமாரரின் யோகத்தைப் பற்றிக் கூறினால் அவருக்கு இந்தப் பெருமையைத் தாங்கவே முடியாது.''

''யோகம் இருப்பதாகத் தெரிகிறது; அது இன்னும் வந்துவிட வில்லை; அதை நாமெல்லோரும் சேர்ந்துதான் வரச் செய்ய வேண்டும்!'' என்றார் சாளுவநரசிம்மர்.

பிறகு அவர் ஓர் ஓலையில் சில வரிகளை எழுதினார். அந்த ஓலையை ஒரு பேழையில் வைத்து மூடி ராமபத்திர நாயக்கரிடம் கொடுத்தார். பேழையில் வைக்காமல் அவரிடம் கொடுத்திருந்தால்கூட ராமபத்திர நாயக்கரால் அதன் உட்பொருளைப் புரிந்து கொண்டிருக்க முடியாது. அதைப் புரிந்து கொள்ளக்கூடிய நாகமநாயக்கர் அப்போது மதுரையில் இருந்தார். (தொடரும்)



# சேவைக்கு ஒரு சகோதரி

மோனிகா ஃபெல்டன் - அநுத்தமா

மிஸ் லின்ச் எப்பொழுதுமே முழு மனத்துடன் தோல்வியை ஒப்புக்கொண்டதில்லை. இப்போதும் அவ்வாறு செய்ய அவள் மனம் துணியவில்லை. சென்னைக்குத் திரும்பியதும் அவள் சுப்புலக்ஷ்மிக்குச் சொல்லி அனுப்புவாள். சுப்புலக்ஷ்மியும் அவளைப் பொறுமையாக இருக்கும்படி கூறுவாள். நாளடைவில் ஆதிகாட்டேஜில் இருந்த பெண்களே விதவை இல்லத்துக்குப் போதிய விளம்பரமாக இருப்பார்கள் என்று சுப்புலக்ஷ்மி எடுத்துரைத்தாள். கோடை விடுமுறைக்குத் தங்கள் கிராமங்களுக்குச் செல்லும் போதும், பிறகு அவர்கள் படிப்பெல்லாம் முடிந்து விதவை இல்லத்தை விட்டுக் கிளம்பி வெளி உலகில் அடியெடுத்து வைக்கும் போதும், அவர்கள் நடையுடை பாவனையே அவர்கள் எவ்வளவு ஆசாரத்தில் வளர்ந்து வந்திருக்கிறார்கள் என்பதை எடுத்துக் காட்டும். இதன் பயனாக எதிர்ப்புக்கள் எல்லாம் தாமாக மறைந்து விடும்.

இதற்கெல்லாம் வெகு காலம் பிடிக்கும். மிஸ் லின்சுக்கோ தன் சுபாவத்துக்கேற்ற அவசரம்.

சகோதரி சுப்புலக்ஷ்மி இன்று என்னிடம் சொன்னார்கள்: ''அப்போது தான் மிஸ் லின்சுக்கு எழும்பூர் பலரக மனிதர்கள் வாழும் இடமென்றும், இதைவிட இன்னும் வைதீகமான சூழ்நிலைக்கு இந்த இல்லத்தைக் கொண்டு போவது நல்லது என்றும் தோன்றி விட்டது.''

பி. டி. ஸ்கூல் இருந்த இடமாகிய எழும்பூர்தான் இல்லம் தொடங்குவதற்குச் சிறந்த இடமாக இருந்தது. நகரத்திலேயே மிகவும் நாகரீகமான பகுதி அது. பல பிராமணக் குடும்பங்கள் அங்கு வசித்தனர். அதே போல் பல ஐரோப்பியர்களும் அங்கு இருந்தனர். மிஸ் லின்ச் குறிப்பிட்ட வைதீகப் பகுதிகள் மயிலாப்பூரும், திருவல்லிக்கேணியுமாகும்.

சென்னை நகரம் நாளடைவில் பெரிதாக வளர்ந்து அவற்றை விழுங்கித் தன்னுடன் ஐக்கியப்படுத்திக் கொள்வதற்கு முன்னால் தனிச் சிறப்புடன் திகழ்ந்த மயிலாப்பூரிலும் திருவல்லிக்கேணியிலும் பெரிய கோயில்கள் பல நூறு ஆண்டுகளாகவே வேத சாஸ்திர கல்விக் கேந்திரங்களாக விளங்கின.

இடமாறுதல் செய்யக் காலம் கடந்துவிட வில்லை. ஆதிகாட்டேஜ் சிறியதாக இருந்தது. புதிதாக இன்னும் இரண்டு மூன்று பேர்களுக்கு மேல் சேர அது இடம் அளித்திராது. கான்வெண்டைத் தவிர பி. டி.ஸ்கூல் மட்டும்தான் சென்னை முழுவதற்கும் பெண்களுக்குண்டான ஒரே உயர்தரப் பள்ளி. ரொம்ப நாட்களாக இந்நிலையில் மாறுதலே இல்லை. மற்றொரு பள்ளி வெகு அவசரமாகத் தேவைப் பட்டது. ஒரு புதிய பள்ளிக்கூடம் தொடங்கப்பட்டால் பி. டி. ஸ்கூலின் ஒரு பகுதியை — தமிழில் பாடங்கள் நடத்தும் ஆசிரியைகள் பயிற்சிப் பகுதியை — அதனுடன் இணைக்கலாம். மாணவ ஆசிரியைகள் பயிலுவதற்கென்று ஒரு புதிய, 'மாதிரி ஆரம்பப் பள்ளி'யும் தொடங்கப்படலாம். அந்த வட்டாரத்திலேயே விதவைகள் இல்லமும் ஒரு பெரிய கட்டடத்தில் நிறுவப் பட்டால் சென்னை நகரத்துப் பெண்கள் துரிதமாகக் கல்வியில் முன்னேற்றம் காண்பது சாத்தியமாகும். பெரிய திட்டங்களைக் கொண்டு போனால் சர்க்கார் யோசிப்பார்கள். ஆனால் ஒரு கட்டடத்தைக் கண்டுபிடித்துச் சிறிய முறையில் ஆரம்பித்து விட்டால் வருங்காலம் தானாகச் சரிப்பட்டுவிடும் என்று நியாயமாக நம்ப இடம் இருந்தது.

இச்சமயத்தில் விஜயநகரத்து மகாராஜா ஸ்தாபித்து வைத்த பெண்களுக்கான ஒரு தர்மப் பள்ளிக்கூடத்தை நிர்வகித்து வந்த இருவர் திருவல்லிக்கேணியிலிருந்து வந்து மிஸ் லிஞ்சை அணுகினார்கள். அப்பள்ளிக்கூடத்தை உயர்நிலைப்பள்ளியாக உயர்த்திவிடும் பட்சத்தில் மகாராஜா தம் பள்ளிக்கூடத்தைச் சர்க்காரிடம் ஒப்படைக்க முன்வருவார் என்றும், அதற்குத் தேவைப்படக் கூடிய பெரிய இடத்தைத் தேடித் தரத் தாங்களே தங்களால் இயன்ற உதவிகளைப் புரிவதாகவும் கூறினர்.

இந்த உதவி ஏற்கப்பட்டது. குறுகிய தெருக்களும், இடைவெளியின்றிக் கட்டப்பட்ட ஏராளமான சிறு வீடுகளும் நிறைந்து எங்கேனும் ஒரு மரமோ புல்பூண்டோகூடத் தென்படாமல் இருந்த திருவல்லிக்கேணி கவர்ச்சிகரமான வட்டாரமல்ல. ஜன நெரிசலும் அங்கு மிகுதி. ஆனால் அதில் இரண்டு அநுகூலங்கள் இருந்தன. திருவல்லிக்கேணி பிராமணர்களின் வைதிகப் பற்று தென்னிந்தியா முழுவதும் பிரசித்தி பெற்றிருந்தது. அவர்களுடைய நன்மதிப்பைப் பெற்றுவிட முடியுமாயின், விதவை இல்லத்தின் பிற்காலத்தைப் பற்றிக் கவலையே இல்லை.

இரண்டாவது அநுகூலம் கடற்கரை அருகிலேயே இருந்ததுதான். பெண்கள் மிகவும் நெருக்கமான சூழ்நிலையில் வசிக்கவும் வேலை செய்யவும் வேண்டியிருந்தாலும் அவர்களுக்குத் தேகப் பயிற்சியும் நல்ல சுத்தமான காற்றும் கிடைப்பதற்கு வசதி செய்யலாம்.

அழகான எழும்பூரை விட்டு, குடும்பத்தினரைப் பிரிந்து, வெகு தூரத்தில் வசிக்க வேண்டியிருப்பதில் தனக்கேற்பட்ட வருத்தத்தைச் சுப்புலக்ஷ்மி வெளிக் காட்டிக் கொள்ளவில்லை. திருவல்லிக்கேணி வெகு தொலைவில் இருந்தபடியால் அன்றாடம் வீட்டுக்குப் போய் வர இயலாது. தன் இளைய தங்கைகளின் படிப்பை இனி பார்வையிட முடியாது. ஞாயிற்றுக்கிழமையிலும் விடுமுறை நாட்களிலும் தாயாருடனும், தங்கைகளுடனும் சில மணி நேரம் கழிக்கலாம் என்பதொன்றுதான் அவள் எதிர்பார்க்கக் கூடியது.

பி. டி. பள்ளிக்கூடத்தை விட்டு விட வேண்டுமே என்று வேறு அவளுக்கு வருத்தமாக இருந்தது. ஆனால் அதற்கு ஈடு கட்டச் சில வசதிகள் ஏற்பட்டன. சுப்புலக்ஷ்மிக்கு வேலை உயர்வு கிடைக்க விருந்தது. புதிய விதவைகள் ஹாஸ்டலுக்கு அவள் சூப்பரின்டென்டெண்டாக இருப்பதுமல்லாமல் தமிழைப் போதனமொழியாகக் கொண்டுள்ள ஆசிரியைகளின் பயிற்சிப் பகுதியையும் அவள் நடத்த வேண்டும். எல்லாவற்றுக்கும் மேலாக மிஸ் பிரேகர் (Miss Prager) அப்புதிய கல்வி நிறுவனத்துக்கு சூப்பரின்டென்டெண்டாக இருக்கப் போகிறாள் என்பது சுப்புலக்ஷ்மிக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது.

மிஸ் பிரேகர் நீலகிரியில் ஒரு கான்வெண்டில் உபாத்தியாயினியாக இருந்து வந்தாள். மிஸ் லிஞ்ச் அவளைக் கட்டிப் பிடித்துக் கொண்டு வந்து சென்னை கல்வி இலாக்காவில் ஜூனியர் இன்ஸ்பெக்டராக நியமித்தாள். சுப்புலக்ஷ்மியைவிட அவள் சிறிதே மூத்தவள். சுப்புலக்ஷ்மிக்குச் சர்க்கார் உத்தியோகம் கிடைத்ததைப் பாராட்ட பி. டி. பள்ளியில் கொடுக்கப்பட்ட விருந்தில்தான் இரு பெண்களும் முதன் முதலில் சந்தித்துக் கொண்டனர். மிஸ்ட்ரஸ் பிரேகரைக் கண்டவுடனேயே சுப்புலக்ஷ்மிக்குப் பிடித்து விட்டது. அதே போல் சுப்புலக்ஷ்மியை அதற்குமுன் மிஸ்ட்ரஸ்டுக்குத் தெரியாதென்றாலும் அவ

ளுடைய அழகும், கம்பீரமும் அவள் தான் மேற்கொண்டுள்ள உயர்ந்த நோக்கங்களுடன் கூடிய பயனுள்ள காரியத்தில் வைத்துள்ள பற்றுதலும் எல்லாம் மில்ட்ரட்டைக் கவர்ந்திழுத்தன. அநேக வருஷங்களுக்குப் பிறகு அவள் எழுதுகையில் சகோதரியைப் பற்றி இவ்வாறு குறிப்பிட்டிருக்கிறாள்: "இங்கே வேகமாகப் பரவும் ஒரு மலர்ச்சி, புதுமையான ஒரு நோக்கம், கால வரம்பற்ற தொன்மையான இந்தியாவின் வரலாற்றில் ஒரு புதிய திருப்பம், புதிய முறைகள் இவற்றைக் கண்டேன். இளம் விதவைகளுக்கும், பெண்மைக்கும், மனித குலத்துக்கும் தன்னலமற்ற ஈடுபாட்டுடன் புரியும் சேவைக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டவளின் தோற்றம் இது. ராஜதானியில் உள்ள குழந்தை விதவைகளின் புனர்வாழ்வுக்காகத் தான் உழைக்கப் போவதையும் அதற்காகும் பொருட் செலவு பற்றியோ சிரமங்கள் பற்றியோ எண்ணிப் பார்க்கப் போவதில்லை என்றும் சகோதரி விவரித்தபோது வேதகால வரலாற்றுப் பகுதி ஒன்றே உயிர் பெற்று எழுந்து என் முன் நிற்பது போல் எனக்குத் தோன்றியது."

அவர்கள் இருவரும் சீக்கிரமே நண்பர்களாகி விட்டனர். ரொம்பவும் அநுசரணையாக நடந்து கொள்பவளும் தன் வேலையில் சிரத்தை உடையவளும், அதே சமயம் சந்தோஷமும் தமாஷும் நிறைந்தவளுமாயிருந்த ஒருத்தியுடன் சேர்ந்து தான் வேலை செய்ய வேண்டும் என்று அறிந்தவுடன் சகோதரிக்கு மிகவும் நிம்மதியாக இருந்தது.

1913ம் வருடம் மார்ச் மாதம் புதிய பள்ளிக்கூடம் தொடங்கப்பட்டது. அடுத்த அக்டோபர் மாதத்தில்தான் சகோதரியும் அந்த இளம் விதவைகளும் திருவல்லிக்கேணிக்கு ஜாகை மாறினார்கள்.










சகோதரி இப்போது நினைவுகூர்ந்து கூறினார்: "பி. டி. பள்ளிக்கூடத்துப் பெண்கள் எனக்குச் சிறப்பாகப் பிரிவுபசாரம் செய்தார்கள். நான் அவர்களை விட்டுச் செல்கிறேனே என்று அழுதே விட்டார்கள்!" ஓரிரண்டு நிமிஷங்கள் நிறுத்தி நிதானித்துவிட்டு வறண்ட குரலில் சகோதரி தொடர்ந்து பேசினார்: "அவர்கள் அவ்வளவு ஆத்மார்த்தமாக இருக்கவில்லை என்பதைப் பின்னால் நான் அறிந்து கொண்டேன். எனக்கு இன்னும் கொஞ்சம் அநுபவம் ஏற்பட்ட பிறகு ஒரு விஷயத்தைத் தெரிந்து கொண்டேன். தங்களை விட்டுப் பிரிந்து ஓர் ஆசிரியை செல்லும்போதெல்லாம் அழுவதுதான் முறை என்று மாணவிகள் நினைத்தனர். இந்தக் கண்ணீர்ப் பெருக்குக்கெல்லாம் அர்த்தமே கிடையாது!"

சகோதரியின் அன்றைய மாணவிகள், இது விஷயத்தில் அவர் சொல்வது தவறு என்கிறார்கள். அன்று அவள் பாடம் போதிக்கையிலேயே உயர்வான எண்ணங்களையூட்டி உற்சாகப் படுத்தினாள் என்பது மட்டுமல்ல,

அந்த மாணவிகளுள் பெரியவர்களான பலர் லட்சிய நோக்கங்கள் கொள்ளவும் ஒரு தூண்டுகோலாயிருந்தாள். தங்கள் ஆசிரியையைப் போலவே தாங்களும் இருக்க வேண்டும் என்று சிலர் ஏற்கனவே தீர்மானித்துவிட்டிருந்தனர். அவ்விதமிருக்கச் சகோதரியின் உதவியின்றித் தங்களால் எப்படி முன்னேற முடியும் என்று அவர்கள் திகைத்தார்கள்.

ஆயினும் அவர்கள் முன்னேறத்தான் செய்தார்கள். சகோதரி திருவல்லிக்கேணிக்குச் சென்றுவிட்ட சில மாதங்களுக்குப் பிறகு பி. டி.ஸ்கூலின் ஆறும் படிவத்து மாணவிகள் 'இந்தியப் பெண் கல்வியின் அடுத்த கட்டம் என்ன?' என்பதைப் பற்றிக் கட்டுரை எழுத நேர்ந்தது. பலர் இன்னும் நிறைய உயர்நிலைப் பள்ளிகள் தேவைப்படும் என்று குறிப்பிட்டிருந்தனர். நல்லமுத்து ராமமூர்த்தி மட்டும் (இதை அவரே என்னிடம் சொன்னார்) தனியானதொரு புதிய அபிப்பிராயத்தைக் கூறியிருந்தாள். சென்னையில் ஒரு பெண்கள் கல்லூரி இருக்க வேண்டும் என்று அவள் விரும்பினாள்.

அவள் கட்டுரைக்குப் பரிசு கிடைத்தது. ஒரு நாள் கவர்னரின் செயற்குழு அங்கத்தினர் ஒருவர் பள்ளிக்கு விஜயம் செய்திருந்தபோது அவள் தன் கட்டுரையைப் படிக்குமாறு கேட்டுக்கொள்ளப்பட்டாள்.

''மிகவும் சுவாரசியமான, துணிகரமான அபிப்பிராயம்தான். ஆனால் பெண்களுக்கென்று ஒரு கல்லூரி ஆரம்பிப்பதற்குச் செலவு அதிகம் ஆகும். அத்தனை செலவு செய்வது நியாயம் என்று எண்ணும்படி போதிய பெண்கள் கல்லூரியில் சேருவார்களா என்பதே எனக்குச் சந்தேகம்'' என்று பள்ளிக்கு விஜயம் செய்திருந்தவர் கூறினார்.

மாணவிகள் இதனை மறுத்து முணுமுணுத்தனர். வந்தவர், ''இந்தக் கோடையுடன் இந்தப் பள்ளியில் படிப்பை முடித்துக் கொண்டு செல்லும் பெண்களில் அடுத்த மூன்று நான்கு ஆண்டுகள் பட்டப் படிப்புக்காக உழைக்க விரும்புகிறவர்கள் தயை செய்து கையைத் தூக்குகிறீர்களா?'' என்று கேட்டார்.

நல்லமுத்துவின் வகுப்பில் பதினேழு பெண்கள் இருந்தனர். ஒவ்வொருத்தியும் தன் கையைத் தூக்கினாள்.

''அந்தச் சமயத்தில் சர்க்கார் ஏற்கனவே பெண்கள் கல்லூரி தொடங்குவது என்று தீர்மானித்திருந்தார்களா, அல்லது பள்ளி மாணவிகளாகிய நாங்கள் காட்டிய உற்சாகம்தான் அவர்களைத் தூண்டியதா என்பது எனக்குத் தெரியாது. முயன்று பார்த்தும் அதைக் கண்டுகொள்ள என்னால் முடியவில்லை. எப்படியானால் என்ன? 1914ம் வருஷம் கோடைக் காலத்தில், உலக மகா யுத்தம் ஆரம்பிப்பதற்குச் சில தினங்கள் முன்பு ராணி மேரி கல்லூரி திறக்கப்பட்டது. நானும் என்னுடைய வகுப்பில் படித்த பெரும்பாலான பெண்களும் அதில் சேர்ந்தோம்'' என்று ஸ்ரீமதி ராமமூர்த்தி என்னிடம் கூறினார்.

அது ஒன்றும் பிரமாதமான இடமாக அன்று இருக்கவில்லை. மாநிலக் கல்லூரிக்கு அண்மையிலேயே, கடற்புறத்தைப் பார்த்தபடி ஒரு பிரும்மாண்டமான இடத்தைச் சர்க்கார் வாங்கி வைத்திருந்தனர். அங்கே கட்டடம் கட்டுவதற்கு அவர்கள் இன்னும் ஆயத்தமாகவில்லை. மாணவிகள் தங்குவதற்கான ஒரு ஹாஸ்டலாக அதுவரை இருந்த ஒரு பழைய வீட்டில் பெண்கள் தங்கிப் படித்து வந்தனர். ஆயினும் ஏதோ தொடக்கம் என்று ஏற்பட்டு விட்டது. 'பி. டி. பள்ளிக்கூடத்தில் உள்ள தன்னுடைய மாணவிகளும், தேவையான அளவு தேர்ச்சி பெற்ற பிறகு இந்த இளம் விதவைகளும், தன் தங்கைகளான சொர்ணமும் நித்யாவும் வருங்காலத்தில் அங்கு படிக்கலாம்; மாநிலக் கல்லூரியில் தனக்கு நேர்ந்த கஷ்டங்களும் இடைஞ்சல்களும் இல்லாமல் அவர்கள் தப்பலாம்.' —இதை எண்ணிச் சகோதரி மிகவும் ஆனந்தப்பட்டாள். (தொடரும்)

---

''அட! நீ கூட மனைக வந்து தங்க பத்திரம் வாங்க, தங்க நகைகளைக் கொடுத்திருக்கிறாயே!''





''நான் கொடுத்தது உங்க அம்மா நகைகளைத்தானே!''

— கிட்டு

ஒரு நிமிஷத்தில் 300 வார்த்தைகள் பேசுவது கடினமான காரியமாகும். ஆனால் சுமார் 327 வார்த்தைகள் வீதம் பொழிந்து தள்ளி உலக ரிகார்டைப் பெற்றிருப்பவர் காலம் சென்ற கென்னடிதான். 1961ம் ஆண்டு டிசம்பரில் பேசிய இச் சொற்பொழிவைக் குறிப்பெடுப்பதற்குள் பத்திரிகை நிருபர்கள் திணறிப் போய் விட்டார்களாம்!

—நந்தி

# கந்தன் கருணை



திருமுருக கிருபானந்தவாரியார்

## 64. வேடனாய், வேங்கையாய், விருத்தனாய்

தன்னையன்றி வள்ளியின் மனம் மற்ற ஆடவரிடம் இம்மியும் செல்லாது என்று உலகுக்குக் காட்டவும் ஐயன் இவ்வாறு வேடமிட்டுச் சென்றார். மேலும் தந்தை வழி ஒழுகுவது தனயன் முறையன்றோ! பார்வதி அம்மையிடம் சிவபிரான் முதலில் விருத்த உருவில் மாறுவேடத்தில்தானே சென்றார்.

முருகப் பெருமான் அனலிற் பட்ட மெழுகு போல் உருகிப் பலவாறு வள்ளி நாயகியாரிடம் அன்பு மொழி பகர்ந்து கொண்டிருந்தபோது வேட்டுவர் தலைவனாகிய நம்பி ராஜன் தன் பரிசனங்கள் சூழ அங்கு வந்தான்.

உடனே, முருகப் பெருமான் அடி வேதங்களாகவும், நடு சிவாகமங்களாகவும், கிளைகள் யாவும் பல கலைகளாகவும் தாம் ஒரு வேங்கை மரமாகி நின்றார்.

ஆங்கது காலை தன்னில்
அடிமுதன் மறைகளாக
ஓங்கிய நடுவணெல்லா
முயர்சிவ நூலதாகப்
பாங்கமர் கவடு முற்றும்
பல்கலை யாகத் தானோர்
வேங்கையி னுருவ மாகி
வேற்படை வீரன் நின்றான்

நம்பிராசன் தன் மகளுக்குத் தேனும் தினைமாவும் கிழங்குகளும் தந்து ஆங்

குள்ள வேங்கை மரத்தைக் கண்டான். அவனோடு வந்த வேட்டுவர்கள், ''இது முன்பு இருந்த மரமன்று; புதிதாக இப்படி ஒரு மரம் இங்கு ஏற்பட்டிருக்கிறது. திடீரென்று தோன்றிய இந்த மரத்தினால் நிச்சயம் தீங்கு வரும். ஆதலால் இதனை வெட்டி எறிய வேண்டும்'' என்றனர். மரத்தை வெட்டவும் அவர்கள் முயன்றனர்.

மரத்தை வெட்ட முயன்ற அவர்களை விலக்கிய நம்பிராசன், தன் மகளை நோக்கி, ''குழந்தாய் வள்ளி! இம்மரம் இங்கு எவ்வாறு உண்டாயிற்று?'' என்று வினவினான்.

''அப்பா! இதன் வரலாறு நான் அறியேன். இது இப்போதுதான் இங்கு தோன்றியது'' என்று வள்ளி கூறினாள். உள்ளூற வள்ளி வேடனாக வந்தவன் தன் இதயமுகந்த கந்த நாயகனே என அறிந்திருப்பாளோ? அன்பு எதைத்தான் காட்டிக் கொடுக்காது?

''அம்மா; அஞ்சாதே! இம்மரம் உனக்கு நிழல் தந்து உதவும்'' எனச் சொல்லிவிட்டுத் தன் குழாத்துடன் சிற்றூர் சென்றான் நம்பிராசன். தரு நிழலில் வீணையின் நாதமும் மாலை நிலவும் இளவேனில் தென்றலும்போல் இன்பம் தரும் இறைவன் திருவடி நிழலை அனுபவித்தானோ?

ஓங்கி நின்ற மரத்தைக் கண்டான் நம்பி. கோடையில் இளைப்பாற்றிக் கொள்ள உதவும் குளிர்தரு என்று இறைவனைப் பாடுவார் வள்ளலார். இயற்கையோடு இயைந்து வாழ்ந்த நம்பிராஜனும் அம்மரத்தில் என்ன கண்டானோ? வெட்ட மனம் கொள்ளவில்லை.

**மாசில் வீணையும் மாலை மதியமும்**
**வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்**
**மூசு வண்டறை பொய்கையும் போன்றதே**
**ஈசன் எந்தை இணையடி நிழலே**

என்று இறைவன் திருவடி நிழல் இன்பத்தைத் திருநாவுக்கரசர் அநுபவித்துப் பாடியிருக்கிறார் அல்லவா?

நம்பிராசன் தன் பரிசனங்களுடன் திரும்பிச் சென்றதும் குமாரக் கடவுள் வேங்கை மர வடிவம் நீங்கி முன்போல் மானிட வடிவம் கொண்டார். பருவ மடந்தையை மயக்குவது கட்டிளங் காளையாகிய பரம புருஷனுடைய எழிலன்றோ? கன்னிக் கவரும் கட்டிளங்காளையாக வந்து முருகன் வள்ளியிடம் பேச்சுக் கொடுத்தார். ''மாதரசே! உன்னையே புகலாக வந்தடைந்தேன்! இனி உன்னைப் பிரிந்து வாழேன். உன் கண்ணாகிய வலையில் அகப்பட்ட எனக்கு அருள் புரிவாயாக! என்னை மணந்து இன்பத்தைத் தருவாயாக! உன்மீது மையல் கொண்ட என்னை மறுக்காமல் ஏற்றுக்கொள்! உலகமெல்லாம் உன்னை வணங்கும் உயர் பதவியை உனக்குத் தந்தருள்வேன்!'' என்று கூறியருளினார்.

வள்ளி நாயகியாரை முருகவேள் பணிந்தார் என்று அருணகிரிநாதரும் பல இடங்களில் கூறுகிறார். தாய் தன் குழந்தைக்கு மிக மிகக் கருணையுடன் பால் ஊட்டுகிறாள்; அக்குழவி பாலுண்ண மறுக்கும்போது ''அன்புள்ள கண்ணு! உன்னைக் கும்பிடுகிறேன்; பால் குடித்துவிட்டு விளையாடு'' என்று வேண்டுவாள். அது போல் எவ்வுயிர்க்கும் தாயாகிய தயாபரன் வள்ளிக்கு அருள் புரியும் பொருட்டு அவளை வணங்கியும் அருள் புரிந்ததையே அருணகிரிநாதர் இவ்வாறு கூறுகிறார்.

முருகப்பெருமானின் மனக் கருத்தை அறிந்த வள்ளி நாயகி நாணங் கொண்டாள். ''ஐயா! நீங்கள் உலகம் புரக்கும் உயர்குலச் செம்மல். நான் தினைப் புனம் காக்கும் இழி குலமாகிய வேட்டுவச் சாதிப் பெண். தாங்கள் கேவலம் குறத்தியை விரும்புவது தகாது. புலி பசித்தால் புல்லைத் தின்னுமோ?'' என்று கூறினாள். சுவாமியை அறிந்த போதே அவரை அறியாதவள் போலவும் பேசினாளோ? அவள் பேசிக் கொண்டிருக்கும்போதே வேடர் பரிவாரம் சூழ உடுக்கை முதலிய ஒலியுடன் அங்கு மீண்டும் வந்தான் நம்பிராசன். படை ஒன்று பேரொலியுடன் வருவது போன்றிருந்தது அக் காட்சி. அருணகிரிநாதர் வருணனை செய்யும் அழகே அழகு!

**தனந்த னத்தன தனதன தனதன**
**திமித்தி மித்திமி திமிதிமி திமிதிமி**
**தகுத்த குத்தகு தகுதகு தகுதகு**
**தகுதிதோ**
**தரித்த ரித்தரி தரிரிரி ரிரிரிரி**
**தடுட்டு டுட்டுடு டுடுடுடு டுடுடுடு**
**தமித்த மத்தள தமருக விருதொலி**
**கடல்போல**

(திருப்புகழ் — ''சினத்தி லத்தினை'')

நம்பிராசன் தன் பரிவாரங்களுடன் வருவதைக் கண்ட வள்ளிநாயகியார் அஞ்சி நடுங்கிக் குமாரக் கடவுளை நோக்கி ''ஐயா! என் பிதா வருகிறார். வேடர்கள் மிகவும் வலிமை உடையவர்கள்; தீயவர்கள். நீங்கள் பிழைக்க நினைத்தால் இங்கிருந்து ஓடிப்போய் விடுங்கள்'' என்றாள். வள்ளி நாயகியார் தம்மீது கொண்ட அன்பை எண்ணி வேற் பரமன் வேடர் எதிரில் விருத்த தவ வேடங் கொண்டார்.

தன் பரிசனங்களுடன் ஆங்கு வந்த நம்பி ராசன் அந்தவக் கிழவரைக் கண்டு வியந்து நின்றான்.

பெருமான் அவனை நோக்கி, ''உனக்கு வெற்றி உண்டாகுக; நின் குலம் தழைத்து ஓங்குக; சிறந்த வளம் பெற்று வாழ்க'' என்று வாழ்த்தித் திருநீறு தந்தருளினார்.

நம்பிராசன் அவர் திருவடிகளை வணங்கி, ''சுவாமி! இந்த மலைக்குத் தாங்கள் வந்த காரணம் யாது? தங்களுக்கு வேண்டியது யாது? கூறும்'' என்று கேட்டான். ''நம்பி! இந்தக் கிழப் பருவம் நீங்கி இளமை வரவும் உள்ளத்தில் உள்ள மயக்கம் நீங்கவும் இங்குள்ள குமரியில் ஆட வந்தேன்'' என்று அருளிச் செய்தார் எம்பிரான். குமரி என்பது தீர்த்தத்தைக் குறிப்பிடுமாறு இப்படிப் பேசினார்.

''சுவாமீ! தாங்கள் கூறிய தீர்த்தத்தில் முழுகிச் சுகமே இருப்பீராக! எனது புதல்வியும் இங்கு தனித்திருக்கிறாள். தாங்களும் அவளுக்குத் துணையாயிருப்பீராக'' என்றான் நம்பிராசன்.

அறுமுகங் கரந்த அண்ணலும், ''அழகிதாம்'' என்றனர் குறும்பாக.

வள்ளி நாயகியிடம் அப்பெரியவரை அழைத்துச் சென்ற நம்பி, ''அம்மா! இக்கிழ முனிவர் உனக்குத் துணையாக இருப்பார்'' என்றான். காயும் கனியும் தேனும் தினைமாவும் தந்து விட்டு வேடுவர்களுடன் ஊர் திரும்பிச் சென்றான்.

நம்பிராசன் ஊர் திரும்பிச் சென்றதும் பெரியவர் வள்ளியின் முருக பக்தியைச் சோதித்தார். வள்ளியும் தன் பக்தியைப் பாடலாகப் பாடினாள். முருக நாமத்தின் பெருமைகளைப் பாடினாள்.

**முடியாப் பிறவிக் கடலிற்**
**புகார் முழுதும் கெடுக்கும்**
**மிடியாற் படியில் விதனப்**
**படார் வெற்றி வேற்பெருமான்**
**அடியார்க்கு நல்ல பெருமான்**
**அவுணர் குலமடங்கப்**
**பொடியாக்கிய பெருமான்**
**திருநாமம் புகல்பவரே**

முருகப்பெருமானுடைய நாமத்தைச் சொல்லுகிறவர்கள் பிறவி என்னும் கடலில் அழுந்த மாட்டார்கள். வறுமையால் வாட மாட்டார்கள். ஏனெனில் முருகன் அடியார்க்கு நல்லவன். தீமை செய்யும் அசுரர் குலத்தை அழித்தவன்.

முருகப் பெருமான் வேங்கை மரமானது, ஒருவன் ஒருத்தி மீது மோகங் கொண்டால் மரம் போலாவான் என்பதையே உணர்த்துகிறது. பெண்ணாசை கொண்டோன் விரைவில் கிழவனாவான் என்பதைக் குறிக்கவே கிழவனாக மாறினார்.

வள்ளி நாயகியாரிடம் சோதனை முடிந்தது. கிழவருக்குப் பசி உண்டாயிற்று. அவ்வருந் தபசி, வள்ளி நாயகியாரிடம், 'அருந்த பசி' என்றார்.

வள்ளியம்மையார் தேனும் தினைமாவும் நற்கனிகளும் கொடுத்தாள். அதனை வாங்கி உண்ட பெரியவருக்கு நீர் வேட்கை மிகுந்தது. ''தண்ணீர், தண்ணீர்'' என்று கேட்டார்.

வள்ளியம்மையார் அதனைக் கேட்டு, ''சுவாமி! இங்குள்ள ஆறு மலை தாண்டிச் சென்றால் ஏழாவது மலையில் சுனை இருக்கிறது. அங்கே போய்த் தண்ணீர் பருகி வாருங்கள்'' என்றாள்.

**பூட்டுவார் சிலைக்கை வேடர்**
**பூவையே! புலர்ந்த தெண்ணீர்**
**வேட்டனன் விருத்தன் வேற்றில்**
**வியநெறி சிறிதுந் தேரேன்**
**தாட்டுணை வருந்துமென்று**
**தாழ்த்திடா தொல்லையேகிக்**
**காட்டுதி சுனை நீரென்றான்**
**அறுமுகங் கரந்த கள்வன்**

''பெண்ணே! நான் புதியவன். மலை வழி அறியேன். நீ வந்து வழி காட்டு'' என்றார் முதியவர். பெருமாட்டியார் விருத்தரை வித்தியாசமின்றிக் கைப் பிடித்து அழைத்துச் சென்று சுனையில் நீர் பருகச் செய்தாள். ஆறு மலை தாண்டியுள்ள அச் சுனை ஆறு பத்மங்களுக்கு அப்பாலுள்ள சகஸ்ராரம். மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற சக்கரங்கள் தாண்டியுள்ள அமிருதப் பொழிலும் யோகி அடையும் இறுதி ஸ்தானமுமாகிய சகஸ்ராரத்தில்தானே ஜீவனும் பரமனும் கூட வேண்டும்? ஆறு பத்மங்களை உடலில் உயிர்நிலை தொடங்கி முறையே உடலின் மேல் பகுதிகளில் உள்ளவை. அந்த ஏழாவது இடத்தில் இறைவனுக்கு ஆன்மா தன்னை அர்ப்பணம் செய்து வழிபட வேண்டும் என்பது தத்துவம்.

பசித் துன்பம் நீங்கிய முனிவருக்கு அருட் பசி எடுத்தது; அதனைக் காதலாக வெளிப்படுத்தினார். ''பெண்ணமுதே! எனக்குப் பசியும் நீங்கிற்று; தாகமும் நீங்கிற்று. உன் மீது வைத்த மோகம் நீங்கியதில்லை. பசியையும், தாகத்தையும் தணியச் செய்தது போலவே மோகத்தையும் தணியச் செய்வாய்'' என்று கூறினார்.

சினமறியாத மதுரக் குற வள்ளியாரும் அப்போது சினம் கொண்டு சீறினாள். கற்புச் செல்வம் அல்லவா? (தொடரும்)



# செய்திப் படங்கள்

பாரதி இளைஞர் சங்கத்தின் முயற்சியால் திருவல்லிக்கேணியில் பாரதியார் வசித்த வீட்டில் 'பாரதி வாழ்ந்த இல்லம்' என்று எழுதப் பட்ட ஒரு சலவைக் கல் பதிக்கப்பட் டுள்ளது. இதனை மந்திரி பூவராகன் டிசம்பர் மாதம் 11-ந் தேதி திறந்து வைத்தார்.



வாணிமஹாலில் நடைபெற்ற எயன் ஆர்ட்ஸ் சங்கீத விழாவை மந்திரி மன்றாடியார் ஆரம்பித்து வைத்தார். சங்கீத மகாநாட்டுக்குத் தலைமை வகித்த சித்தூர் சுப்பிர மணியபிள்ளை பேசுகிறார்.

பாரதீய வித்யாபவனின் பத் தொன்பதாவது பட்டமளிப்பு விழா வில் பம்பாய் பிரதம நீதிபதி தம்பே உரையாற்றுகிறார்.



திருவஹீந்திரபுரம் ஸ்ரீதேசிகன் திரு மாளிகைக்கு மூவாயிரம் ரூபாய் செலவில் திரு எம். சுதர்ஸனம் அய்யங்கார் அழகான கதவுகளை நிர்மாணிக்கச் செய்து, அதன் திறப்பு விழா சமீபத்தில் நடந்தது. திருவஹீந்திரபுரம் தேவஸ்தானத் தினர் ஸ்ரீ சுதர்ஸனம் அய்யங்கா ருக்குப் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தனர்.



## ஊடல் இன்பம்

நச்சி தன் அன்றைய வேலையைச் சபேசனுக்கு விளக்கினான்:

''ஒரணா கொடுத்து இந்த முள்வாங்கிக் கொத்தை வாங்கினேன். இதிலே ரெண்டு முள்வாங்கி, காது குடையற குறும்பி வாங்கி ஒண்ணு இருக்கும்.. இதை வெச்சுக்கிட்டு வேலையை ஆரம்பிச்சேன். இந்த ஊரிலே காதிலே அழுக்கு எடுத்து விடறதுகூட ஒரு தொழில். அதுக்கும் சில ஆட்கள் வருவான்கள்; துட்டைக் கொடுத்துக் காதைக் காட்டிக்கிட்டு நிற்பான்கள்; வெக்கங்கெட்ட சோமாறிகள்! நிஜம்மா அவனுங்க காதில் அழுக்கே இருக்காது. ஆனால் காதைக் குடையறவன் கட்டி கட்டியா அழுக்கை எடுத்துக் காட்டுவான். அது மெய்தான்னு அந்த ஏமாந்த சோணகிரிகளும் நம்பிடுவாங்க. விஷயம் இன்னான்னா, இங்கே பார்! இது மாதிரி மெழுகு இல்லே, மெழுகு. அதை லேசா உருக்கிப் புறங்கையிலே பூசிக்க வேண்டியது. அப்புறம் குறும்பி வாங்கியால் காதைக் குடையறப்பலே இந்த மெழுகில் கொஞ்சம் கொஞ்சம் நோண்டி எடுத்து, 'இதோ பாருய்யா, உன் காதிலே எவ்வளவு அடாசு இருக்குதுன்னு' காட்ட வேண்டியது. இன்னா கமால் பார்த்தியா? பொழைக்கிறத்துக்கு இப்படி யெல்லாம் எத்தனையோ வழிகள் இருக்குது பிரதர்! இதிலே இன்னைக்கு நம்பளுக்கு ரெண்டு ரூபா வரும்படி. இன்னையப் பொழுது ஒழிஞ்சது.'' இவ்வாறு கூறித் தன் புறங்கையில் — அது இருந்த நிறத்தைப் போலவே — படையாக ஒட்டி வைத்திருந்த மெழுகைச் சுரண்டி எடுத்தான்.

## ஜீவ கீதம்

ஜெகசிற்பியன்

மந்திரத்தால் கட்டுண்டவன் போல் அவனையே இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தான் சபேசன்.

''அது போவட்டும். இப்ப நீ எங்கே இருக்கிறே? இன்னா பண்றே?'' என்று கேட்டுக் கொண்டே ஹோட்டல் ஒன்றை நோக்கி நடந்தான் நச்சி.

ஏழுமலையான் அச்சக முதலாளியின் உதவியால் தான் பழைய ஜல்லி வாங்கி விற்கும் தொழிலை மேற்கொண்டிருப்பதையும், அவரது வீட்டில் ஒரு சிறிய அறையை வாடகைக்கு எடுத்திருப்பதைப் பற்றியும் மகிழ்ச்சியுடன் கூறிய சபேசன், ''அம்மா எப்படி இருக்கிறாங்க, அண்ணே? அவங்களைப் பார்க்கணுமின்னு எனக்கு ஆசை...'' என்றான் இழுத்தாற்போல.

''என் அம்மாதானே? உன்னைக்கூட அது கேட்டது'' என்று சிரித்தான் நச்சி.

''நீயும் வா, அண்ணே! போவோம்.''

''நானா ?'' என்று தயங்கி விட்டு, ''இன்னைக்கு ஓர் இடத்துக்குப் போகணும்னு இருக்கிறேன். அங்கே போய் ரொம்ப நாளாயிடுச்சு'' என்றான் நச்சி தன் ஜேபியைத் தட்டிப் பார்த்துக் கொண்டே.

இருவரும் ஹோட்டலில் வயிறு நிறைய சாப்பிட்டனர். சபேசன் முந்திக்கொண்டும் அவனை விடாமல் நச்சியே 'பில்'லைக் கொடுத்தான். காது குடைந்து சம்பாதித்த இரண்டு ரூபாயும் காலி. அதைப் பற்றி அவன் கவலைப்பட்டதாகவே தெரியவில்லை. சிகரெட் பற்ற வைத்துக்கொண்டு மௌனமாக நடந்த அவன் சட்டென்று ஒரு டாக்சியை நிறுத்தி அதில் ஏறிக் கொண்டு, ''அப்ப நான் வரட்டுமா, பிரதர் ! நாளைக்கு வந்து கண்டுக்கிறேன்'' என்று கூறியவாறு போயே போய் விட்டான்.

சபேசனுக்கு இது புது அநுபவமல்ல; ஆயினும் நச்சியின் இந்தப் போக்கை நினைத்து அவனால் வியப்புறாமல் இருக்க முடியவில்லை. இதைவிட இன்னொரு விஷயத்தை எண்ணியே பெரிதும் வியந்தான். அதாவது, அவன் ஊருக்குப் போய்த் திரும்பி விட்டது பற்றியோ, வேதாவை மீட்டுக் கொண்டு வந்த விவரம் பற்றியோ நச்சி அவனிடம் ஒன்றுமே கேட்கவில்லை. ஆனாலும் அவனுக்கு அவ்விவரங்கள் அனைத்தும் தெரியும் — வேதா சொல்லியிருப்பாள் — அப்படியிருந்தாலும் சும்மா சம்பிரதாயத்துக்காக இரண்டொரு வார்த்தைகளாவது கேட்டிருக்கலாம்; ஆனால் கேட்கவில்லை. என்ன அழுத்தமான மனிதன் அவன் !

தன் அறைக்குத் திரும்பிப் போய்விடலாமா என்று நினைத்தான் சபேசன். உடனே அவனையும் மீறிக்கொண்டு, வேதாவைப் போய்ப் பார்க்க வேண்டுமென்ற ஓர் ஆவல் உந்தவே, முன்னேறி நடக்க ஆரம்பித்தான்.

ஃ ஃ ஃ

''ஏ, பாய்! கம் ஹியர்!''

''எஸ், சார்!'' என்றவாறு ஓடி வந்தான் பட்லர்.

''மிஸிஸிட்டே மணி வாங்கிக்கிட்டுப் போய் டாக்ஸிக்காரனுக்கு மீட்டர் பார்த்துக் கொடு, மேன்!''

பட்லர் தயங்கி நின்றான்.

''இன்னு மேன், நிற்கிறே?''

''நீ வந்தா ஹவுஸுக்குள்ளே அல்லோவ் பண்ணுதேன்னு மிஸி ஆர்டர் போட்டிருக்கிறாங்க சார்!''

''அடங்க இஸ்கி! இதென்னுடாது, சஸ்பென்சு? இல்லே, சஸ்பென்டா?'' என்று அசட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொண்ட நச்சி அலட்சியமாக ஜேபியில் கைவிட்டு ஏதோ ஒரு மடித்த காகிதத்தை எடுத்துப் பார்த்து மீண்டும் ஜேபிக்குள் திணித்துக் கொண்டு, ''ஆல்ரைட்! உன்கிட்டே ஹண்டரட் ருப்பீஸுக்குச் சேஞ்ச் இருக்குதா மேன்? இருக்காது! பரவாயில்லே; குக்கிங் செலவுக்கு மிஸி பணம் கொடுக்கல்லே? அதில் மீதியிருந்தா டாக்சிக்காரனுக்குக் கொடுத்து அனுப்பு! நான் போவும்போது மாத்திக் கொடுக்கிறேன், வித் பக்ஷீஸோட இன்னு?'' என்றவாறு வெகு அமர்த்தலாக விசில் அடித்துக்கொண்டே வீட்டுக்குள் நுழைந்தான்.



என்றுமே அழகாகவும் சுத்தமாகவும் விளங்கும் அந்த வரவேற்பு அறை இன்று பாழடைந்தாற் போல் வெறிச்சோடிக் காணப்பட்டது. சோபாக்களும், மேசை நாற்காலிகளும் தூசு படிந்து கிடந்தன. பூந்தொட்டிகளில் எப்போதோ செருகப்பட்ட மலர்க் கொத்துக்கள் வாடிக் கருகியிருந்தன. உள்ளார்ந்த திகிலுடன் சுற்றுமுற்றும் பார்த்தவாறு வந்த நச்சி, ''ஹப்பாடா!'' என்று சற்று உரக்கவே குரல் எழுப்பிக் கொண்டு சோபாவில் சாய்ந்தான்.

'ரோஸி எங்கே, உள்ளே இருக்கிறாளா? அல்லது வெளியில் எங்காவது போயிருப்பாளா?' — சோபாவில் சாய்ந்துகொண்டே தன் பார்வையை அங்குமிங்குமாக ஓடவிட்டான் நச்சி. 'அவள் இல்லையானால் அவளுடைய தாயார்க்காரியான கிழவி மினியாவது இந்நேரம் குசலம் விசாரித்துக்கொண்டு வந்து விடுவாளே? அவளுக்கு ரொம்ப நாட்களாகவே என்னோடு சேர்ந்து ஒரு முறையாவது டான்ஸ் ஆடிவிட வேண்டும் என்று ஆசை; அதற்காகக்கூட அவள் இன்னும் வரவில்லையே! அவளையும் என்னை வந்து பார்க்க விடாமல் உள்ளே மடக்கிப் போட்டு வைத்திருக்கிறாளோ ரோஸி?'

நச்சிக்கு மிகவும் தர்மசங்கடமாகிவிட்டது. என்ன செய்வதென்றே அவனுக்குத் தோன்றவில்லை. ரோஸியின் இந்தக் கோபக் கெடுபிடிகளுக்குரிய காரணத்தை அவன் உடனே புரிந்து கொண்டான். அன்றொரு நாள் மருதமுத்துவின் பங்களாவைத் தன்னுடையதென்று அவளுக்குக் காட்டிவிட்டுப் போக, அதை அவள் உண்மையென நம்பிக் கொண்டு அவனைப் பார்ப்பதற்காக அவ்விடம் செல்ல, அச்சமயம் அங்கே கன்னியம்மாளைச் சந்தித்து அவளிடமே விவரம் கேட்க, அதனால் இத்தனை காலம் அவன் அளந்து வந்த அளப்பெல்லாம் அம்பலமாகி விட்டதை — அவனுடைய தாயார், 'ஆமாம்; இவரு பெரிய தொரை! ஊரை ஏமாத்தறப்பலே என்னையும் ஏமாத்தப் பார்க்கிறான்' என்று ஒரு குறிப்புக் காட்டிக் குத்திப் பேசிய அன்றே — புரிந்து கொண்டு விட்டதால்தான் இத்தனை நாட்களாக அவன் இந்தப் பக்கமே தலைகாட்டாமல் இருந்தான். இப்போது என்ன செய்வது? 'விட்டதடா உன் ஆசை, விளாம்பழத்து ஓட்டுடனே' என்றிருக்கும் அவளை நேருக்கு நேர் பார்த்து, 'கெட் அவுட், ப்ளீஸ்' என்று ஆத்திரத்தோடு அவள் கத்துவதைக் கேட்டு விட்டுப் போவதா? அல்லது அவளைப் பார்க்காமலே சந்தடியின்றி வெளியேறி விடுவதா?

சிகரெட்டைப் பற்ற வைத்து முழுதுமாகப் புகைத்துப் போட்டுவிட்டு, ''சரி; போக வேண்டியதுதான்'' என்று முனகியவாறு எழுந்த நச்சி, தொண்டையைப் பெரிதாகக் கனைத்து விட்டுக்கொண்டு அங்கிருந்து செல்லக் காலெடுத்தவன், ''மிஸ்டர் நாச்! வெய்ட் ஏ மினிட், ப்ளீஸ்! என்ன, நீகூட என்னை விட்டுட்டுப் போறே? எல்லாரும்தான் போயிட்டாங்கோ; நீயும் போறயா? சரி; 'போய்க்கோ, போய்க்கோ. நான் ஆர்ஃபன் கேர்ளாவே இருந்துடுறேன்!'' என்று அழுகை கலந்த கீச்சுக் குரல் கேட்டுச் சட்டென்று நின்றான். பக்கத்து அறையிலிருந்து வெகு வேகமாக வந்த ரோஸி அவனைத் தடுப்பதுபோல் எதிரே ஓடி நின்று ஒரு கணம் ஏறிட்டுப் பார்த்துவிட்டு அதே வேகத்தில் திரும்பிப் போய்ச் சோபாவிலே 'தொம்'மென்று உட்கார்ந்து தலையை ஓர் அசைப்பு அசைத்து முகத்தில் கூந்தலைச் சரித்து மறைத்துக் கொண்டு விம்மி விம்மி அழலானாள்.

திருதிருவென விழித்த நச்சி சிறிது நேரத் தின்றலுக்குப் பின் தயங்கித் தயங்கிச் சென்று அவளது முகத்தை மூடிக் கொண்டிருந்த கூந்தலை மெல்ல விலக்கி விட்டுக் குனிந்து நோக்கினான். ரோஸி நிஜமாகவே தான் அழுது கொண்டிருக்கிறாள் என்பதற்கு அறிகுறியாக அவளது அழகிய சிறிய மூக்கு காரட் கிழங்கு போல் சிவந்து புடைத்துக் கொண்டிருந்தது. ''இன்னா, மினி, எதுக்கு இப்படிக் 'கிரை' பண்றே?'' என்று அசட்டுச் சிரிப்புடன் கேட்டுக் கொண்டே அவளருகில் அமர்த்தலாக உட்கார்ந்தான்.

உடனே ரோஸி, ''மிஸ்டர் நாச்! ப்ளீஸ்! டோண்ட் டச் மீ!'' என்று ஒரு கூச்சல் போட்டாளே பார்க்கலாம்; நச்சியே அதைக் கேட்டு நடுநடுங்கி விட்டான்.

''போ, அந்தாண்டைப் போய்க்கோ! என்னைத் தொட்டுக்காதே!''

நச்சிக்கு எரிச்சல் மூண்டது. ''வாட்டு மினி? இன்னா இதெல்லாம் டிராமா? என்னை உனக்குப் பிடிக்கலையா, சொல்லிப்பிடு! இப்பவே நான் போயிடறேன்! சும்மா இந்தக் கமால் எல்லாம் நம்மகிட்டே காட்டாதே!'' என்று கோபமாகக் கரகரத்தான்.

''போய்க்கோ, எனக்கு ஒண்ணும் லாஸ் இல்லே! பட், நீ போறதுக்கு முன்னாடி ஒரு ஸாட் நியூஸைக் கேட்டுக்கோ!..... போன வீக் என் மதர் டைடு ஆயிடுச்சு!''

''இன்னாது, கெய்வி மினி செத்துப் போச்சா?'' என்று அதிர்ச்சியுடன் ஒரு துள்ளுத் துள்ளிக் கேட்டான் நச்சி.

''எஸ் டார்லிங்!'' என்று அழுது கொண்டே பாய்ந்து வந்த ரோஸி அவனைச் சேர்த்து அணைத்துக் கொண்டாள்.

நச்சியின் மனம் மிகவும் சங்கடப்பட்டு விட்டது. ஆனால் அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், ''இப்ப வரும்போதுகூட நினைச்சேன், அந்தக் கெய்வி மினிக்கு த்ரீ பைவ் கேய்ங், த்ரீ பைவ் வேர்க்கன்னே வாங்கியாறலாம்னு! அப்புறம், அடுத்த தபா பார்த்துக்கலாம்னு வந்துட்டேன். இங்கே வந்தா, கெய்வியே வேர்க்கடலே நோண்டப் போய்விட்டிருக்குது'' என்று சிரித்தான். ''அது சரி; இந்த விஷயத்தை நீ ஏன் அண்ணைக்கே எனக்குச் சொல்லி அனுப்பலே?''

ரோஸி அவனை முறைத்துப் பார்த்து விட்டு மௌனமாயிருந்தாள்.

''அடடா! எனக்கு மட்டும் தெரிஞ்சிருந்தா, இன்னா பண்ணியிருப்பேன் தெரியுமா? பாண்டு, மேளம் எல்லாம் வைச்சு, நம்ம தோஸ்துகளைத் தெருவிலே விசிலடிச்

கக்கிட்டுக் கூத்தாடப் பண்ணி, சும்மா ஊரே கிடுகிடாஞ்சிப் போறாப்பலே பொணத்தைத் தூக்கிக்கிட்டுப் போய்ப் பொதைச்சிருப்பேனே!'' என்று அங்கலாய்த்தான் நச்சி.

''நோ, நோ! மிஸ்டர் நாச்! அந்த மாதிரி பீஸ்ட், புரொஸெஷனெல்லாம் எங்களுக்குப் புடிக்காது.''

''பிடிக்காதா? சரி; உன் சாவுக்கே அப்படிச் செய்யறேனா, இல்லையா பார்! நானே விசிலடிச்சுக்கிட்டுக் கூத்தாடப் போறேன்! அப்ப இன்னா பண்ணுவே?''

ரோஸிக்குச் சிரிப்பு வந்து விட்டது. துயரம் கலந்து இளநகை புரிந்தாள். அவளது சிரித்த முகத்தைப் பார்த்ததுமே நச்சி கொஞ்சம் விறைப்பாக நிமிர்ந்து, ''ஆமாம்; நான் வந்தா உள்ளே விட வேண்டாம்னு உன் பொட்லர்கிட்டே சொன்னியாமே, அது நிஜம்தானா?'' என்று கேட்டான்.

''எஸ், தட் ஈஸ் ட்ரூ!'' என்று ரோஸியும் சற்று முறைப்பாகப் பதிலிறுத்தாள்.

நச்சியின் விறைப்பு உடனே தளர்ந்து விட்டது. ''எதுக்கு டியர் அப்படிச் சொன்னே?'' என்று குழைந்தான் அவன்.

சற்று நேரம் அவனையே வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்த ரோஸி, ''அது சரி; இப்ப நீ இன்னா வொர்க் பண்றே, மேன்? அதைச் சொல்லு!'' என்றாள் அழுத்தமான குரலில்.

''இப்பவா?...... வந்து.......'' என்று தன் வழக்கமான கோணல் சிரிப்புடன் தலையைச் சொறிந்தான் நச்சி.

''முதல்லே அஸிஸ்டென்ட் மியூஸிக் டைரக்டர், அப்புறம் ஸினி ஸாங் கம்போஸர், இப்ப பிக்சரே டைரக்ட் பண்றியா? இல்லே, புரொடியூஸ் பண்றியா?''

''அதை ஏன் கேட்கிறே போ, ஸிஸி! ரொம்பப் பேஜார் புடிச்ச வேலையாப் போச்சு!.......'' என்று ஏதோ சொல்ல வாயெடுத்த நச்சியை, ''மிஸ்டர் நாச்!'' என்ற ரோஸியின் கீச்சுக் குரல் அடைத்தது.

கோபமும் அழுகையுமாக அவள் மீண்டும் படபடவெனப் பேசினாள்: ''ப்ளீஸ்! நீ ஒண்ணும் 'லவ்' பேச ஆரம்பிக்காதே! இது வரை சொன்ன லவ்களையெல்லாம் கேட்டுக் கேட்டு எனக்கு அலுத்துப் போச்சு. இனி மேலும் கேட்டால் என் மைண்டே கொலாப்ஸாகி, மேட் ஆயிடுவேன். உன்னைப் பத்தி எனக்கு எல்லாம் தெரியும். உன் மதரையும் நான் மீட் பண்ணினேன். உன்னோட காட்டேஜ் இருக்கிற இடத்தையும் தெரிஞ்சுக்கிட்டேன். பட், அதுக்காக நான் வொர்ரி பண்ணிக்கல்லே. வொய்? இதுக்கெல்லாம் முன்னாடியே நீ யாரு, எங்கே இருக்கிறே, என்ன வொர்க் பண்றேன்னு தெரிஞ்சுதான் வைச்சிருந்தேன். ஒன்—டே, உன்னை சென்ட்ரல் ஸ்டேஷன்லே போர்ட்டராக்கூடப் பார்த்தேன். அதனால் என்ன? அது ஒண்ணும் இர்ரெஸ்பெக்டான வேலை இல்லே. சீட் பண்றது, ராபரி பண்றது, பெக் பண்றது — இதெல்லாம்தான் அண்டிஸர்விங் ஓர்க்ஸ். மத்தபடி எந்த மேனும் எந்த



''எதிர் வீட்டு சுரேஷுக்கும் நம்ம உஷாவுக்கும் பண்ணுகிற திருமணத்தன்றே நம்ம வீட்டு வேலைக்காரி வேலாயிக்கும் எதிர் வீட்டு வேலப்பனுக்கும் கல்யாணம் பண்ணணுமாம்.''

''இதிலே என்ன ஆச்சரியம்? எல்லோரும் சினிமாப் பார்க்கிறாங்களா இல்லையோ?''

''வாஸ்தவம்தான். ஆனா... நம்ம வீட்டு ஜிம்மிக்கும் எதிர் வீட்டு டாமிக்கும் லவ் ஆரம்பமாயிருந்தே! அதுக்கு என்ன சொல்றேள்?''



''டேய், உண்மையைச் சொல்லிடு! துணிமணிகளை எல்லாம் யார் துவைக்கிறது, நீயா? உன் பெண்டாட்டியா?''

''உண்மையா சொல்றேன், அவதான் துவைப்பா, நான் உலர்த்திடத்தான் போடுவேன்!''

''அவ துணி மாத்திரமில்லே, உன்னேயும் சேர்த்துத் துவைக்கிறா போலிருக்கு. உன் முகம் இப்படி வெளுத்துப் போச்சே!''



''இன்னும் நேரு ஆகவில்லே. அதற்குள் சம்பளமா தரச் சொன்னார் உங்கப்பா?''

''இல்லே சார்! இன்று புதுசா ஒரு படம் வந்திருக்கிறதே, அதைப் போய்ப் பார்த்து விட்டு, அதில் வரும் பாட்டை எனக்குச் சொல்லித் தரச் சொன்னார்!''

ஓர்க்கும் செய்யலாம். ப்ரொபஷனை வைச்சு எவனையும் ஸ்கேல் பண்ணிவிடக் கூடாதுன்னு எனக்குத் தெரியும். என் ஹஸ்பெண்ட் ரயில் இன்ஜின் டிரைவராயிருந்தார்; என்னோட கஸின் பிரதர் ஆர்மியிலே பெரிய ஆபீஸராயிருக்கிறார்; என் அங்கிள் ஒருத்தன் ராயபுரத்திலே புட்சராயிருக்கிறான். அவுங்க அத்தனை பேரும் ஒரே டேபிள்ளே சேர்ந்து உட்கார்ந்து சாப்பிடுவாங்கோ; ஒரே ஸ்டேஜிலே டான்ஸ் ஆடுவாங்கோ! எதுக்கு இதைச் சொல்றேன்னு, உன் ஸ்டேடஸைப் பார்த்தோ, உன் எஜுகேஷனைக் கண்டோ, உன்னோட ஏர்னிங் கெப்பாஸிட்டிக்கு ஆசைப்பட்டோ, உன் பர்ஸனாலிடிக்கு மயங்கியோ உன்னை லவ் பண்ணலேங்கிறதை நீ அண்டர்ஸ்டாண்ட் செய்துக்கணும்னுதான்! நான் லவ் பண்ணணும்னு நினைச்சா, இந்த ஸ்ட்ரீட்லே ஒருத்தன்கூடப் பாக்கி நிற்கமாட்டான். பட், எனக்கும் ஹார்ட் இருக்குது, கான்ஷியன்ஸ் இருக்குது. இதை நீ புரிஞ்சுக்கலே. என்னைத் தரௌளி ராங்காவே மீன் செய்துக்கிட்டிருக்கிறே. அதனால்தான் அளவுக்கு மீறி என்கிட்ட லவ் பேசறே; என்னை ப்ளஃப் பண்றே, சீட் பண்றே! என்னை ரொம்ப ஃபூலா நினைக்கிறே! இதை யெல்லாம் நான் எவ்வளவுதான் அட்மிட் பண்ணிக்க முடியும்? என்னாலே பொறுக்க முடியாமல் போச்சு. அதான் உன்னை இங்கே அல்லோவ் பண்ணாதேன்னு என் பட்லர்கிட்டே சும்மா சொல்லி வைச்சேன். அதுவும் ஒரு டெஸ்டுக்காகத்தான். பட், நீ பெரிய ரோக் ஆச்சே? இப்ப என்னையே டெஸ்ட் பண்ணிப்பிட்டே!''

நச்சியை என்றுமே இத்தனை அமைதியாகவும், பிறர் பேசுவதைக் காது கொடுத்துக் கேட்பவனாகவும் பார்த்திருக்க முடியாது. சோபாவில் ஒருக்களித்துச் சாய்ந்து மோவாயைத் தாங்கிக்கொண்டு உட்கார்ந்திருந்த அவன் மெல்லத் திரும்பி ரோஸியைப் பார்த்தான். விறைப்பும் முறைப்புமாக வேறு பக்கம் சாய்ந்து அமர்ந்திருந்த அவளும் அவனைக் கடைக் கண்ணால் நோக்கினாள். நச்சி அவளருகில் தயங்கித் தயங்கி நகர்ந்து போய் முகத்தருகே குனிந்து முதுகை அன்புடன் வருடியவாறு, ''இங்கே பார், மிஸி! இன்னைக்குத்தான் உன்னை நல்லா புரிஞ்சுக்கிட்டேன். இனி மேல் நீ எங்கேயும் போகலாம்; யார்கூடவும் டான்ஸ் ஆடலாம். நான் ஒண்ணும் கேட்டுக்க மாட்டேன். ஏன்னு, நீ பார்க்கிறதுக்குச் சாம்பல் மாதிரி இருந்தாலும் உள்ளே நெருப்பா இருக்கிறேன்னு எனக்குத் தெரிஞ்சு போச்சு. ஐ பிலீவ் யூ! ஐ லவ் யூ!'' என்று கரகரத்தான்.

''நான்சென்ஸ்!'' என்றாள் ரோஸி ஒரு விதப் பொய்யான சீறலுடன். ''நான் என்ன சொன்னேன், நீ என்ன சொல்றே மேன்? என்னை நீ நம்பறே, நம்பலே; அதையா கேட்டேன்? எனக்கு எப்பவுமே அந்த வொர்ரி கிடையாது. என்னைக்காவது ஒன்–டே என்னை நீ ஃபுல் ஷேப்பிலே அண்டர்ஸ்டாண்ட் பண்ணிக்குவேன்னு, ஐ நோ! லீவ் இட் ஸில்லி மேட்டர்! நான் சொன்னது இன்னான்னு, நீ எப்பப் பார்த்தாலும் லவ் பேசறே; ஸ்கைக்கும் எர்த்துக்குமா டுப் அடிக்கிறே! அதுதான் எனக்குப் பிடிக்கலே!''

''அடங்க இஸ்கி! இன்னாடாவ, என்னென்னமோ பேசறு!'' என்று அசட்டுச் சிரிப்புச் சிரித்தான் நச்சி. ''அதில்லே, மிஸி! உன் அம்மா செத்துப் போச்சேன்னு கவலைப் படாதே. என் மதரை ஒரு நாளைக்கு மீட் பண்ணி நம்ப விஷயத்தைச் சொல்லிப்பிடு. அது ஒரு மாதிரி டைப்பு. முதல்லே கொஞ்சம் சிடாய்க்கும். அப்புறம் ஒரேயடியா குழைஞ்சுப் போயிடும். இங்கே, டேடைம்லே வந்து உனக்கு ஹெல்ப் பண்ணினாலும் பண்ணும்.''

''எஸ்! நானும் அப்படித்தான் நினைச்சிருக்கிறேன். உன் மதரை எப்போ மீட் பண்ணலாம், டீயர்?''

''எவரி மார்னிங் எய்ட்டோ–க்ளாக்கிலிருந்து டூவோ க்ளாக் வரை பார்க்கலாம்.''

''அப்புறம்?''

''காரை எடுத்துக்கிட்டு லேடீஸ் கிளப்புக்கு டென்னிஸ் ஆடப் போயிடும்.''

''பார்த்தியா மேன்! பழைய ஸ்டோரியை ஆரம்பிச்சுட்டியே? இதான் எனக்குப் பிடிக்கிறதில்லே. லவ் பேசறது உனக்கு ஒரு ஹாபியாப் போச்சு.''

ரோஸியால் சிரிப்பை அடக்க முடியவில்லை. நச்சியும் சிரித்துக்கொண்டே அவள் கரத்தைப் பற்றி மேலே தூக்கினான். பிறகு அவளையே கூர்ந்து பார்த்தவாறு பின்னால் நகர்ந்து இடுப்பை வளைத்து நடனம் ஆடுவது போல் தாள லயத்தோடு அப்படியும் இப்படியுமாக அசைத்தான். ரோஸிக்குக் குஷியாகி விட்டது. அடுத்த கணம், கிராமபோனில் ஓர் ஆங்கில இசைத்தட்டு கீதம் முழங்கியது. சமையலறையில் சோம்பு, லவங்கம், பட்டை வாசனை கமகமத்தது. (தொடரும்)




ஏயர்-இந்தியா

பி.ஓ.ஏ.ஸி. மற்றும் கன்டாஸுடன்
சேர்ந்து செயலாற்றுகிறது

JWT-AI-4/98

# பந்தயக் கலியாணம்

துமிலன்

அந்தப் பங்களாவுக்குள் தன் கிரணங்களைப் பிரவேசிக்கச்செய்ய முயலலாமா வேண்டாமா என்று காலைக் கதிரவன் யோசனை செய்து கொண்டிருந்தான். ஏனென்றால், அதன் வாசலில் ஒரு கூர்க்காவும், ஓர் அல்ஸேஷியன் நாயும் காவல் புரிந்து கொண்டிருந்தனர்.

அதே சமயத்தில் அந்த வீட்டுக்காரரின் பெண்ணான சித்ரா தன் பெற்றோர்களுடன் உட்கார்ந்து காப்பி சாப்பிட்டுக் கொண்டிருந்தாள். சாப்பிட்டு முடிந்ததும் எழுந்திருந்து நின்றுகொண்டு, தொண்டையைக் கனைத்துக் கொண்டு சொன்னாள்:

''அப்பா, அம்மா இரண்டு பேருக்கும் அவர்கள் ஒரே பெண்ணான சித்ராவான நான் இதனால் தெரிவித்துக் கொள்வதென்னவென்றால்: இன்று காலைப் பத்திரிகைகளில் பி. ஏ., பி. எஸ்ஸி. பரீட்சை ரிஸல்ட்கள் வெளிவரப் போவதால் அவர்கள் இருவரும் நானாகச் சொல்லும்வரை அவற்றைப் பிரித்துப் பார்க்கக்கூடாது என்று அறியவும்!''

அவள் இப்படி வேடிக்கையாகச் சொல்லி விட்டு எதிரிலிருந்த மேஜையின்மீது தமுக்கு அடிப்பது போல் கையால் அடித்துவிட்டு உட்கார்ந்து கொண்டாள்.

''ஏன், உனக்குப் பாஸாகிவிட்டது என்று முன்னமேயே தெரியும் போலிருக்கிறது'' என்றார் அவள் தந்தை சுப்பையா.

''அவளுக்குத் தனக்குப் பாஸாகிவிடும் என்ற தைரியம். அவள் பிள்ளையாருக்குத் தேங்காய் உடைக்கிறேனென்றுகூட வேண்டிக் கொள்ளவில்லையென்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்'' என்று தாயார் சரஸ்வதி சொன்னாள்.

''இல்லை, அப்பா! நான் வேண்டிக்கொண்டிருக்கிறேன்; ஆனால், அது புதுமாதிரியான வேண்டுதல். பரீட்சை தேறிவிட்டால், தேங்காய் ஒன்று பத்துப் பைசாவுக்குக் கிடைத்தால் உடைப்பதாக வேண்டிக்கொண்டிருக்கிறேன்'' என்றாள் சித்ரா.

அப்போது கூர்க்கா அன்றையப் பத்திரிகைகளை எடுத்து வரவே, சித்ரா எழுந்து சென்று அவற்றை வாங்கிக் கொண்டாள்.

பத்திரிகையை அவள் பிரித்துப் பார்ப்பதற்கு முன்பாகவே, தோட்டத்துக்குள் ஒரு மோட்டார் சைக்கிள் வேகமாகப் படபட வென்று அலறிக் கொண்டு வரும் சத்தம் கேட்டது.

''அப்பா! எனக்குப் பரீட்சை தேறிவிட்டதே!'' என்று மிகுந்த மன வருத்தத்தோடு கூறினாள் அவள்.

அடுத்த விநாடி ஒரு மோட்டார் வண்டியின் ஊதுகுழல் சப்தம் கேட்டது. அது ஸ ரி க ம வாசிப்பது போலிருந்தது.

''அம்மா! எனக்குப் பரீட்சை முதல் வகுப்பில் தேறிவிட்டது. நான் என்ன செய்வேன்!'' என்று அவள் பரிதவித்தாள்.

''இதென்ன கூத்தாயிருக்கிறது! பரீக்ஷை தேறியதற்காக இப்படி ஒரு பெண் துக்கப்படுமா!'' என்று சரஸ்வதி கடிந்தாள்.

அப்போது ஒரு ஸ்கூட்டர் வண்டி வரும் சப்தம் கேட்டது.



''ஆமாம், உனக்குப் பரீட்சை தேறிவிட்டது, முதல் வகுப்பில் தேறிவிட்டது என்றெல்லாம் எப்படித் தெரிந்தது?'' என்று தந்தை கேட்டார்.

''மோட்டார் ஸைக்கிளில் வருவது அத்தை பிள்ளை குமார். என்னைப் பாராட்டுவதற்காகத்தான் வருகிறான். கார் சப்தம் உங்கள் சிநேகிதர் தண்டபாணியின் பிள்ளை பரதனுடையது. நான் முதல் வகுப்பில் தேறினால் அப்படி ஹாரன் அடித்துக் கொண்டு வரப்போவதாகப் பயமுறுத்தி யிருந்தார். ஸ்கூட்டரில் வருவது மாமா பிள்ளை அப்புசாமி'' என்று சித்ரா தெரிவித்தாள்.

அடுத்த நிமிடம் வாலிபர்கள் மூவரும் வீட்டுக்குள் வந்தனர். அப்புவைப் பார்த்துப் புன்னகை புரிந்தாள் சித்ரா. ''அப்பு! நீ நேற்று இரவு முழுவதும் தூங்கியே இருக்க மாட்டாயே. புரொபஸராயிற்றே. நான் பரீட்சையில் தேறினால் அதைப் பாராட்டிக் கூற என்ன வாக்கியத்தை உபயோகிக்கலாமென்று யோசனை செய்து கொண்டிருந்திருப்பாய்! நீ சொல்லப் போகும் பாராட்டுதலுக்கு முன்கூட்டியே என் வந்தனங்கள்!'' என்றாள். பிறகு குமாரைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே, ''நீ பெரிய ஸேல்ஸ்மேன் ஆயிற்றே. உனக்கு ஆளுக்குத் தகுந்தாற் போல் சமயோசிதமாகப் பேச வரும். நீ சொல்லப் போகும் பாராட்டுதல்களுக்கு என் அட்வான்ஸ் வந்தனங்கள்!'' என்றாள்.

பரதனைப் பார்த்து இலேசாகப் புன்னகை புரிந்தாள். ''ஓ! நீங்களும் வந்திருக்கிறீர்களா? நான் என் அத்தானையும், அம்மாஞ்சியையுந்தான் எதிர்பார்த்திருந்தேன். நீங்கள் தெரிவிக்கப் போகும்.....'' என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தாள்.

பரதன் இடைமறித்து, ''தாங்கள் தயவு செய்து ஏமாந்து போகாதீர்கள். நான் தாங்கள் பரீட்சையில் தேறியதைப் பாராட்டுவதற்காக வரவேயில்லை. இவர்களிரண்டு பேரும் மோட்டார் சைக்கிளிலும், ஸ்கூட்டரிலும் நெருப்பணைக்கப் போகும் எஞ்சின்களைப் போல் வேகமாக வந்து கொண்டிருந்ததைப் பார்த்தேன். இத்தனை வேகமாகப் போகிறார்களே, யாருக்கு என்னமோ ஏதோ என்று கவலைப்பட்டுக் கொண்டு அவர்களைப் பின்தொடர்ந்தேன்'' என்றான்.

''ஏய்! நீ எங்களுக்கு முன்னால் வரப் பார்த்தாய். முடியவில்லை!'' என்று மற்ற இருவரும் கூறினர்.

அவர்கள் இப்படி வேடிக்கையாகப் பேசிக் கொண்டிருந்தபோது சரஸ்வதி எழுந்தாள். ''சமையற்காரன் இல்லை; வேலை இருக்கிறது. நான் போகிறேன்'' என்று கூறி விட்டுச் சென்றாள்.

குமார் அவளைப் பின்தொடர்ந்து சமையலறைக்குச் சென்றான். ''என்ன மாமி! நீங்களே சமைக்கிறீர்களா? உதவிக்கு அம்மாவைக் கூப்பிட்டுக் கொள்கிறதுதானே!'' என்று கூறிக் கொண்டே கீழே கிடந்த ரங்கன் துடைப்பத்தை எடுத்து ஒரு மூலையில் சாத்தினான். பிறகு ''சித்ராவுக்குப் பரீட்சை தேறிவிட்டது. ஆடி மாதம் இன்னும் நாலு நாளில் முடிந்துவிடும்...'' என்று இழுத்தான்.

அப்போது உள்ளே வந்த அப்பு ''ஏய்! ரங்கன் துடைப்பத்தை இப்படியா வைப்பார்கள்? அடிக்கட்டை கீழே இருக்க வேண்



டும்'' என்று கூறி, அதை எடுத்துச் சரியான படி வைத்தான். பிறகு, ''அத்தை! கறிகாய் உங்களுக்கு நறுக்கிக் கொடுக்கட்டுமா?'' என்று கேட்டான்.

''ஏய்! மாமியைத் தாஜா பண்ண வந்திருக்கிறீர்களாக்கும்!'' என்று உள்ளே வந்த பரதன் அவர்களைப் பரிகசித்தான். ''நீங்கள் சமைத்துத் தொந்தரவு செய்துகொள்ள வேண்டாம் மாமி. நான் அம்மாவுக்கு டெலிபோன் செய்து சாப்பாடு அனுப்பச் சொல்கிறேன்'' என்றான்.

இதே சமயம் சித்ரா தன் தந்தையுடன் பேசிக் கொண்டிருந்தாள்.

''படிப்பு முடியட்டும். அப்புறம் கல்யாணத்தைப் பற்றிப் பேசிக் கொள்ளலாம் என்று அவர்கள் ஒருவர் மாற்றி ஒருவர் ரோதனை செய்தபோது சொன்னீர்களல்லவா? பரீட்சை தேறிவிட்ட உடனே முகூர்த்தம் வைப்பதைப் பற்றிக் கேட்க அவர்கள் வந்திருக்கிறார்கள்'' என்றாள் பெண்.

''இதற்காகத்தான் பரீட்சை தேறக் கூடாது என்று வேண்டிக் கொண்டாயாக்கும்!'' என்றார் தந்தை.

''ஆமாம், அப்பா. என் மனத்தில் உள்ளதையும் கல்யாணம் செய்து கொள்வதையும் பற்றிப் பச்சையாகச் சொல்லி விடுகிறேன். தப்பாக நினைத்துக் கொள்ளாதீர்கள். எனக்குக் காதல் கீதல் என்ற பைத்தியம் எல்லாம் கிடையாது.''

'ஊம்? என்றார் தந்தை சுப்பையா. ''சரி. இப்போது இந்த மூன்று பேரில் யாருக்கு நிச்சயம் செய்வது? மூன்று பேரும் அநேகமாக நல்ல பையன்கள். சொத்து விஷயத்திலும் ஒருவருக்கொருவர் சோடை இல்லை. ஜாதகங்களோ ஒன்றுடன் ஒன்று போட்டி போட்டுக் கொண்டு நல்லபடியாக அமைந்திருக்கின்றன. மூன்று பேரும் ஒவ்வொரு விதத்தில் நமக்கு மிகவும் வேண்டியவர்கள். தவிர, மூன்று பேரும் உன்மீது ஆசையாயிருக்கிறார்கள். யாரை நீ....''

''...என்று இழுக்க வேண்டாம். எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. பன்மாலெக்ஸ் என்னும் தயாரிப்பைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தீர்களே!''

''ஆமாம், அதற்கும், கல்யாணத்துக்கும் என்ன சம்பந்தம்?''

''சொல்கிறேன், அப்பா!'' என்று கூறிவிட்டுச் சித்ரா என்ன செய்யலாமென்பதைப் பற்றி விவரமாகக் கூறினாள்.

''பேஷான யோசனை'' என்றார் தந்தை. அப்போது அந்த மூன்று வாலிபர்களும் அங்கே வந்தார்கள்.

''உங்களைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருக்கிறோம்'' என்றார் சுப்பையா.

''எங்களைப் பற்றியா?'' குமார் கேட்டான்.

''ஆமாம். நீங்கள் எல்லோருமே எனக்கு வேண்டியவர்கள். ஆகையினால் சித்ராவின் கல்யாண விஷயத்தைப் பற்றி என்னால் ஒரு முடிவுக்கு வர முடியவில்லை. அந்தக் காலத்தைப் போலவே நாமும் செய்தாலென்ன என்று தோன்றுகிறது. ஜனக மகாராஜா,—துரோபத மகாராஜாவைப் போல் ஒரு பந்தயம் ஏற்படுத்தலாம் என்று எண்ணுகிறேன்'' என்றார் சுப்பையா.

''என்ன பந்தயம் வேண்டுமானாலும் ஏற்படுத்துங்கள்: நான் தயார்'' என்றான் குமார்.

''நல்லவேளை! சுயம்வரம் என்று வைக்கவில்லையே!'' என்றான் அப்பு.

''இது சித்ராவின் யோசனை போலிருக்கிறது. அவள் ஒருத்திக்குத்தான் மூளை இப்படி வேலை செய்திருக்கும்'' என்று பரதன் அவளை மறைமுகமாகப் புகழ்ந்தான்.

சுப்பையா ஒரு மேஜை டிராயரிலிருந்து ஒரு 'பைலை' எடுத்து வந்தார். அதில் அச்சடித்த பல நமூனக்கள் இருந்தன. சிலவற்றில் நமூனவில் கண்ட கேள்விகளுக்கெதிரே பதில்கள் பூர்த்தி செய்யப்பட்டிருந்தன. அவற்றில் மூன்றை எடுத்து, அவ் வாலிபர்கள் மூவருக்கும் தலைக்கு ஒன்று விதம் கொடுத்தார். அவர்கள் அதை மேலெழுந்த வாரியாகப் படித்துப் பார்த்தார்கள்.

''நான் ஏற்படுத்தப் போகும் பந்தயம் இதுதான். நான் 'பன்மாலெக்ஸ்' என்று ஒரு புது பானம் தயாரிக்கப் போகிறேன். அதற்காக லைசென்ஸ் கோரி மனுச் செய்து ஒரு வருஷமாகி விட்டது. அவற்றின் நகல்களைத்தான் உங்களிடம் கொடுத்திருக்கிறேன். அந்த லைசென்ஸை யார் முதலில் பெற்றுக் கொண்டு வருகிறீர்களோ அவர்களுக்கு என் சித்ராவை...''

முடிப்பதற்குள் மூவரையும் எதிரில் காணோம். மோட்டார் சைக்கிள், ஸ்கூட்டர், மோட்டார் வண்டி எல்லாம் கிளம்பும் சத்தமே கேட்டது.

கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ் வண்டி, அன்று வழக்கத்துக்கு மாறாக, குறித்த நேரத்துக்கு டெல்லி ரயில்வே ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் வந்து நின்றது. ஆகவே, அதைக் கண்டு பலர் ஏமாற்றமடைந்தனர். அப்பு ஒரு மூன்றாம் வகுப்புப் பெட்டியிலிருந்து இறங்கினான். அவனது காரியம் விரைவில் நிறைவேறுவதற்காகத்தான் ரயில் வண்டி அப்படித் தனது 'காலந் தவறுதல்' என்ற கொள்கையையும்மீறி வந்திருந்தது போலும்.

அவன் கையில் ஒரு சிறிய தோல் பெட்டி மட்டுமே வைத்திருந்தான். அவனும், டில்லியும் இதுவரை பரஸ்பரம் அறிமுகப்படுத்தப் பட்டிருக்க வில்லை. அவன் தான் நின்ற இடத்தை விட்டு அசையாமல் அந்தப் பக்கம் இந்தப் பக்கம் பார்த்துக் கொண்டிருந்தான்; வெளியே போவதற்கு 'கேட்' எந்தப் பக்கம் இருக்கிறது என்று தெரியாமல்.

அப்போது அவன் முதுகில் பலமாக ஓர் அடி விழுந்தது. ''யார் பலராமனா! வருகிறேன் என்று ஒரு கடிதம் போடக் கூடாதா?'' என்று யாரோ விசாரித்தார்கள்.

அப்பு திரும்பிப் பார்த்தான். நன்றாக உடை தரித்த ஒருவர் நின்று கொண்டிருந்தார். அவரை அவன் முன்னால் பார்த்ததில்லை.

''நான் பலராமனில்லை...... தாங்கள்...'' என்று குளறினான்.

''மன்னிக்கணும். பலராமன் பயல் தங்களைப் போலிருப்பான். தவறுதலாக.......'' என்றவர், ''என் பெயர் கோவிந்தன்.

டில்லித் தமிழர்களுக்கெல்லாம் என்னை நன்றாகத் தெரியும்'' என்று தம்மை அறி முகப்படுத்திக் கொண்டார்.

அப்போது அங்கே ஒருவர் மிக விரைவாக வந்தார். ''டி. எஸ்.ஸுக்கு அந்தச் சாமான் வந்து விட்டது. நான் அதைக் கொண்டு போய்ச் சேர்த்துவிட்டுத்தான் வருகிறேன்'' என்றார்.

''சரி, நாராயண்! அப்புறம் அந்த.....'' என்று கோவிந்தன் ஆரம்பித்தார்.

''.....கோட்டா, பர்மிட் விஷயத்தையும் அம்மாவிடம் ஞாபகப்படுத்திவிட்டு வந்தேன்! அதைத்தானே சொன்னீர்கள்?''

அப்புவுக்குக் கும்பிடப் போன தெய்வம் நேரே வந்து முட்டிக் கொண்டது போல் இருந்தது. ''தங்களுக்கு இது விஷயத்தில் அநுபவமுண்டா ?''

''அதென்ன அப்படிக் கேட்கிறீர்கள் ? கோட்டா, பர்மிட் விஷயத்தில்தானே ? இன்று டெல்லியிலே 'காண்டாக்ட் மென்' என்று பிரமாதமாகச் சொல்கிற பேரிலே பாதிப் பேர் என்னால் முன்னுக்கு வந்தவர்கள். நான் ஒரு கம்பெனிக்குச் சென்று வேலை செய்யவில்லை. உங்களைப்போல் யாராவது வந்தால் அவர்களுக்கு உதவி செய்வேன். இப்போது பாருங்கள், ஒரு டிப்டி செகரட்டரியின் கிராமத்திலே அவர் வீட்டில் ஒரு பூனை குட்டி போட்டிருந்தது. அந்தக் குட்டிதான் வேண்டுமென்று அவர் குழந்தை அழுது கொண்டேயிருந்தது. அதைத் தருவிக்க ஏற்பாடு செய்தேன்'' என்று கோவிந்தன் மிக அலட்சியமாகக் கூறினார்.

''பூனைக் குட்டியைப் பார்த்ததும் பாப்பாவுக்கு ஒரே சந்தோஷம். அதுவும் மியா மியா என்று கத்திக் கொண்டிருக்கிறது'' என்றார் நாராயண். ''ஸாரும் ஏதோ பர்மிட் விஷயமாகத்தான் வந்திருக்கிறாராம்'' என்றார் கோவிந்தன். ''நல்ல வேளை, நீங்கள் இவர்கள் கண்ணில் பட்டீர்கள்'' என்று நாராயண் அப்புவைப் பாராட்டினார்.

## கும்பகர்ணன்

அவன் ஒரு கும்பகர்ணன். ஒரு நாள் அவனைத் தவிர மற்றவர்கள் உறவுக்காரர்களைப் பார்த்துவரப் பயணப்பட்டனர். ஒரு வாரம் கழித்துத் திரும்பினர். வீடு தாளிடப்பட்டிருந்தது. பல நிமிடங்கள் பலமாகக் கதவை



இடித்த பின் அவன் சோம்பல் முறித்துக் கொண்டு வந்து கதவைத் திறந்து விசாரித்தான்: ''என்ன ரயில் கிடைக்கவில்லையா?''

அதைக் கேட்டு மயக்கம் போட்டு விழுந்தவர்கள் பல மணி நேரம் எழவில்லை.

- இரா. சண்முகம்

அப்பு அந்த இடத்திலேயே பெட்டியைத் திறந்து, சுப்பையாவின் மனுவின் நகலை, எடுத்துக் கோவிந்தனிடம் கொடுத்தான்.

''வாருங்கள். இங்கேயே பார்ப்பானேன்? உங்களுக்குத் தங்க ஒரு ஹோட்டலில் வசதி செய்து தருகிறேன்! அங்கே போய்ப் பேசிக் கொள்வோம்!'' என்றார் கோவிந்தன். ஹோட்டலை அடைந்ததும், விண்ணப்பத்தைக் கவனமாகப் பார்த்து விட்டுத் தம் நண்பரிடம் கூறினார் கோவிந்தன்:

''விஷயம் ஒன்றும் பெரிதில்லை. பனை மரத்திலிருந்து பன்மாலெக்ஸ் என்று ஒரு பானம் தயாரிக்கப் போகிறார்கள். இது கோகோலைப் போல் இருக்குமாம். அதே சமயத்தில் உடலை வலுவுள்ளதாக்குமாம். பர்முடாவில் உள்ள டாஸபெங்கி கம்பெனியார் இதைத் தயாரிப்பதில் ஒத்துழைக்கத் துடித்துக் கொண்டிருக்கிறார்கள். இதற்காக ஆலை நிறுவ லைசென்ஸ் வேண்டுமாம்.''

இதைக் கேட்டு நாராயண் சிரித்தார்.

''இதற்கு எந்தவிதமான ஆட்சேபமுமிருக்க முடியாதே. ஏன், நீங்கள் யூ. எஸ். ஸுக்கு டெலிபோன் பண்ணினாலே போதுமே!'' என்றார்.

''செய்யலாம்! முன்னெல்லாம் அண்டர் செக்ரடரி, டிப்டி செக்ரட்டரி யாருக்கும் டெலிபோன் செய்தே லைஸென்ஸ்கள் வாங்கிக் கொடுப்பேன். ஆனால் இப்போது தான் 'விஜிலன்ஸ்' உத்தியோகஸ்தர்கள் வேவு பார்க்கிறார்கள். அதைத் தவிர சதாசாரக் கமிட்டி ஆசாமிகள் மாறு வேஷம் போட்டுக் கொண்டு எல்லா ஆபீஸ்களையும் சுற்றி வந்து கொண்டிருக்கிறார்கள்'' என்றார் கோவிந்தன்.

''முதலில் இந்த மனு எங்கே இருக்கிறது என்று கண்டுபிடிக்க வேண்டும்!''

''நம்ப சதுர்வேதிதான் இதையெல்லாம் பார்த்துக் கொள்கிறான். அவனைக் கண்டு விட்டு வருகிறேன்'' என்றார் நாராயணன்.

''போகும் போது வெறுங் கையோடு போகாதே. ஒரு ஐந்நூறு ரூபாய் கொடுக்கிறேன். அதை முன் பணமாக வைத்துக் கொள்ளச் சொல்'' என்று கோவிந்தன் கூறித் தம் மணிபர்ஸைச் சட்டைப் பையிலிருந்து வெளியே எடுக்க முயன்றார். அது இலேசில் வெளியில் வரவில்லை!

''நன்றாயிருக்கிறது! நீங்கள் கொடுப்பதாவது ! நான் கொடுக்கிறேன்'' என்று கூறிப் பணத்தை எடுத்துக் கொடுத்தான் அப்பு. ''எனக்குச் சீக்கிரம் காரியம் முடிய வேண்டும். பணத்தைப் பற்றி இலட்சியமில்லை'' என்றான் அவன்.

''வாருங்கள்! இப்போதே போவோம். அவரை வீட்டிலேயே போய்ப் பார்த்துவிட்டு வந்து விடுவோம்'' என்று கூறி நாராயண் கிளம்பினான்.

''நான் எதற்கு? நீங்களே போய் விசாரித்து விட்டு வாருங்கள். இந்தாருங்கள். செலவுக்கு வைத்துக் கொள்ளுங்கள்!'' என்று நூறு ரூபாய் நோட்டை எடுத்துக் கொடுத்தான் அப்பு.

நாராயண் உடனே புறப்பட்டு விட்டார். ''நாராயணன்! சதுர்வேதியிடம் சணல் ஆலை லைஸென்ஸைப் பற்றி.......'' என்று

கூறிக் கொண்டே அவரோடு வாசற்பக்கம் வரை சென்று அப்பு கொடுத்த அறுநூறு ரூபாயை வாங்கிக் கொண்டு ஐம்பது ரூபாய் மட்டும் கொடுத்தனுப்பினர் கோவிந்தன்.

அன்று மாலை நாராயண், வட இந்தியர் போல் காணப்பட்ட ஒருவருடன் வந்தார்.

''இவர்தான் மிஸ்டர் சதுர்வேதி. உத்தியோக பவனில் உதவி ஆபீஸராக இருக்கிறார்'' என்று கோவிந்தன் அவரை அப்புவுக்கு அறிமுகப்படுத்தி வைத்தார்.

''அந்த மனு எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது. கப்பையா என்ற பெயர்தானே! அது விவசாய சம்பந்தப்பட்ட தொழிலாதலால் கிருஷிபவனுக்கு அனுப்பியிருக்கிறேன். அங்கேயுள்ள என் சிநேகிதனை இதைப் பற்றி விசாரிக்கிறேன்'' என்றார்.

இதற்குப் பிறகு மனு எந்த இலாகாவில் இருக்கிறது என்று தேடத் தொடங்கினார்கள். அப்பு இதிலெல்லாம் நேரில் பட்டுக் கொள்ளவில்லை. கோவிந்தனும், நாராயணனுமே கவனித்துக் கொண்டார்கள்.

லைஸென்ஸ் கிருஷிபவனிலிருந்து விருட்சகிருஷிபவனுக்குப் போயிருந்தது. இந்த பவன் மரம் சம்பந்தப்பட்ட தொழில்களைப் பற்றிச் சிபாரிசு செய்யும் புது இலாகாவின் காரியாலயம். அங்கிருந்து அது யோஜனை பவனுக்குப் போயிற்று. பிறகு திரும்ப உத்தியோகபவனுக்கு அனுப்பப்பட்டிருந்தது. ஒவ்வொரு ராஜ்யத்திலும் புதிதாக ஆரம்பிக்கப்படும் எந்தத் தொழிலுக்கும் லைசென்ஸ் கொடுக்க அந்தந்த ராஜ்ய சர்க்கார் சிபாரிசு செய்ய வேண்டும். அந்தச் சிபாரிசு இன்னும் வரவில்லை. இந்த விவரங்களைக் கோவிந்தனும், நாராயணனும் அப்புவுக்குத் தெரிவித்தார்கள். ஒவ்வோர் இலாகாவிலுள்ள உதவி உத்தியோகஸ்தர்களைப் பார்ப்பதற்காக — ஐந்நூறும், அறுநூறுமாகச் செலவழிக்க வேண்டியிருந்தது!

குமார், அப்பு வந்ததற்கு மறு நாள் டில்லிக்கு விமானத்தில் வந்தான். அவன் ஒரு நாள் அப்பு விருட்சகிருஷிபவன் பக்கம் சென்று கொண்டிருப்பதைப் பார்த்தான். ஆனால், அவன் கண்ணில் படாமல் மறைந்து கொண்டான். தான் வந்த காரியம் வெற்றி பெறும் வரையில் அவன் அப்புவைச் சந்திக்க விரும்பவில்லை.

குமார் டில்லி வந்து இரண்டு வாரங்களாகி விட்டன. அவன் ஒரு முதல்தரமான ஹோட்டலில் தங்கியிருந்தான். அவன் வந்த காரியம் இன்னும் கைகூடவில்லை. அவனுக்கு, லைசென்ஸ் பெறத் தான் செய்துள்ள முயற்சிகளைப் பற்றி எழுதிப் பார்க்கலாமென்ற வேடிக்கையான யோசனை தோன்றிற்று. குறிப்புகள்போல் எழுதினான் :

டில்லி துணி ஸ்டோர் ஒன்றில் நூறு ரூபாய் நோட்டு மாதிரி மேலே பிரிண்ட் செய்யப்பட்ட ஒரு புஷ்கோட் இருந்தது. அதை வாங்கிப் போட்டுக் கொண்டு உத்தியோகபவனுக்குச் சென்றேன். என் சட்டையையும் என்னையும் எல்லாரும் வெறித்துப் பார்த்தார்கள். பிறகு தலையைக் குனிந்து கொண்டார்கள். ரிஸப்ஷன் குமாஸ்தா என்னையே பார்த்துக் கொண்டேயிருந்தார். அவரிடம் நான் காரியதரிசியைப் பார்க்க வேண்டுமென்று சொல்லி அதற்கான சீட்டை எழுதிக் கொடுத்தேன். விஷயம் என்பதில், ''இட்சிதர் கிருதிகளைப் பற்றிப் பேச விரும்புகிறேன்'' என்று எழுதினேன். சில காரியதரிசிகள், சங்கீதம், பரதநாட்டியம் முதலிய கலை விஷயங்களைப் பற்றிப் பேசத் துடித்துக் கொண்டிருப்பார்கள் என்று கேள்விப்பட்டு அந்த யுக்தியைக் கையாண்டேன். ஆனால் பலிக்கவில்லை.

அவர் தங்கியிருந்த பங்களா பக்கம் சென்றேன். அங்கே வீதியிலேயே ஓர் ஆள் நின்று கொண்டு என்னை உள்ளே அநுமதிக்க மறுத்து விட்டான். அப்போது ஒரு பெண் எட்டு வயதிருக்கும். பள்ளிக்கூட உடை தரித்துப் புதிதாகப் பெட்டியைத் தோளில் மாட்டிக் கொண்டு போயிற்று. அது யார் என்று விசாரித்தேன்.

''அதுவா, அது ஐயாவின் பெண் ஐயா'' என்றான்.

''நடந்து போகிறதே! வண்டியில் போகக் கூடாதா?'' என்று கேட்டேன். ''ஐயா நெருப்பு ஆச்சே! ஆபீஸ் வண்டியைச் சொந்த விஷயத்துக்கு உபயோகிக்க மாட்டார். என்னைக்கூடத் துணைக்கு அனுப்புவதில்லை. அவ்வளவு கண்டிப்பாக்கும்'' என்றான்.

மறுநாள் மறுபடியும் நான் அந்தப் பங்களாவின் பக்கம் சுற்றி வந்தேன். ஐயா

## மூவாயிரம் நாட்கள் சிறைவாசம்

மனிதகுல மாணிக்கமான ஜவாஹர்லால் நேரு அவர்களைப் பற்றிய புகழுரைகளை எவ்வளவோ கேட்டிருக்கிறோம்; படித்திருக்கிறோம். தம் பொன்னான வாழ்நாட்களில் அவர் பெரும் பகுதியைச் சிறை வாசத்திலேயே கழித்திருக்கிறார். அதன் காரணமாகவே அவர் ''சிறைப் பறவை'' என்ற சிறப்புப் பெயர் பெற்றிருந்தார். ஜவாஹர்லால் எத்தனை நாட்கள் சிறையிலிருந்தார் என்ற தகவலை அறிந்து கொள்ள யாருக்கும் ஆவல் ஏற்படுவது இயல்பு.



நேரு அவர்கள் தம் வாழ்நாளில் மொத்தம் 3,251 நாட்கள் சிறையில் இருந்திருக்கிறார். அவருடைய கடைசி சிறைவாசம் தான் மிக நீளமானது. 1942ம் ஆண்டு ஆகஸ்ட் 9-ந் தேதி சிறை சென்ற அவர் 1945ம் ஆண்டு ஜூன் 15ந் தேதிதான் சிறையிலிருந்து வெளிவந்தார்.

நேரு அவர்களின் இல்லத்தில் இடம் பெற்றுள்ள பொருட் காட்சியில், இந்த விவரம் காணப்படுகிறது.

பள்ளிக்கூடம் போய் வந்தாள். சுற்றுப் பக்கத்தில் யாரும் இல்லை. நான் அவள் பின்னால் சென்று என் பைஜாமா பையில் வைத்துக் கொண்டிருந்த பிளாஸ்டிக் பாம்புப் பொம்மையை அவள் முன் போட்டேன். உண்மையான பாம்பைப் போல் இருந்த அதைக் கண்டு அவள் கதறி மயக்கம் போட்டு விழுந்து விட்டாள். நான் பொம்மைப் பாம்பை எடுத்து அப்பால் எறிந்துவிட்டு அவளைத் தூக்கிக் கழுத்தில் சாத்திக் கொண்டு காரியதரிசியின் பங்களாவுக்குள் நுழைந்தேன். அப்போது என்னை யாரும் தடுக்கவில்லை. ஜயா இன்னும் மயக்கமாயிருந்தாள். நான் நடந்த விஷயத்தைச் சொன்னபோது காரியதரிசி இலேசாகப் புன்னகை புரிந்தார். ஜயாவுக்கு மயக்கம் தெளிந்துவிட்டது. அவர் என்னை அழைத்துக் கொண்டு வாசற்பக்கம் வந்தார். ''அடுத்த ரயிலில் உன் ஊருக்குத் திரும்பிப் போய்விடு. இல்லாவிட்டால் போலீஸில் ஒப்படைத்து விடுவேன். போன மாசம்தான் ஒருவன் நண்டுவாக்களி பொம்மையைப் போட்டுப் பரீட்சை பார்த்தான். ஜயாவுக்கு இதெல்லாம் பழக்கமாகி விட்டது. மயக்கம் வந்தது போல் பாசாங்கு செய்வாள். இது மாதிரி யெல்லாம் செய்து என் தயவைச் சம்பாதித்து லைஸென்ஸோ, கோட்டாவோ வாங்கிவிடலாம் என்று நினைக்காதே!'' என்று கூறிவிட்டுப் போய்விட்டார்.

குமார் இப்படி எழுதிய காகிதத்தைக் கிழித்துவிட்டு மேலே என்ன செய்யலாம் என்று யோசனை செய்து கொண்டிருந்தான். பரதன் டில்லியில் தன் கண்ணிலேயே படாததைப் பற்றியும் அவன் ஆச்சரியப் பட்டுக் கொண்டிருந்தான். அப்புவை யாரோ சிலர் ஏமாற்றிப் பணம் பறித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று அவன் ஊகித்தான். ஆகவே, மொத்தத்தில் மூன்று பேருக்கும் வெற்றி ஏற்படவில்லை என்று மகிழ்ச்சியடைந்து கொண்டிருந்தான்.

சப்பையா குறிப்பிட்ட கெடு முடிந்து விட்டது. மறு தினம் அப்பு, குமார், பரதன் மூவரும் அவர் வீட்டில் அளவளாவினார்கள்.

''ஒருவராலுமே முடியவில்லை. இப்போது என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்று குமார் சித்ராவின் தந்தையைக் கேட்டான்.

''ஏன், இதோ லைஸென்ஸ் இருக்கிறதே!'' என்று பரதன் ஒரு கவரைச் சப்பையாவிடம் நீட்டினான்.

''கல்யாணத்துக்குக் கடிதம் கொடுங்கள்!'' என்று கூறிவிட்டுக் குமார் கிளம்பினான். அப்புவும் அவனைப் பின்தொடர்ந்தான்.

அன்று சித்ராவும் பரதனும் தனியே உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

''ஆமாம்! நீங்கள் இந்த ஊரிலேயேதான் சுற்றிக் கொண்டிருந்தீர்கள். நான் உங்களை அடிக்கடி பார்த்தேன். எப்படி லைசென்ஸ் உங்களுக்குக் கிடைத்தது?''

''விநாயகர் உலகத்தைச் சுற்றி வருவதற்காக என்ன செய்தார்? தன் அப்பாவையே சுற்றி வந்தாரல்லவா? கிட்டத்தட்ட அது மாதிரிதான் செய்தேன். தவிர இது மாதிரி விஷயங்களைப் பற்றிய அரசாங்க முறைகள் எனக்குத் தெரியும். இங்கே ராஜ்ய சர்க்கார் காரியாலயத்தில் அந்த லைஸென்ஸ் தூங்கிக் கொண்டிருந்தது.

'' 'பனை மரங்களின் உபயோகம்' என்பதைப்பற்றி ஒரு சிறிய புத்தகம் ஒன்று எழுதினேன். அதில் பன்மாலெக்ஸையும் பற்றிக் குறிப்பிட்டிருந்தேன். இந்தப் புத்தகத்தை ஒரு பெரிய பிரசுரகர்த்தரைக் கொண்டு அச்சிடச் செய்தேன். அதைச் சம்பந்தப்பட்ட மந்திரியைக் கொண்டே வெளியிடச் செய்தேன். அவருக்குப் பன்மாலெக்ஸ் உற்பத்தியில் சிரத்தை ஏற்பட்டு விட்டது.

''இந்தக் காலத்தில் ஜாதகம், கிரகங்கள் என்பதில் நம்பிக்கையே இல்லாத அதிகாரிகளுக்குக் கூட அதில் நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது. ஏனென்றால் யாரும் தங்கள் திறமையைக் கொண்டு முன்னுக்கு வருவதற்கில்லை. அவரது உத்தியோகம், ஒரு மந்திரி அல்லது ஒரு கட்சித் தலைவரின் தயவைப் பொறுத்திருக்கிறது. ஆகையால் அவர்கள் ஜாதகம் பார்க்கிறார்கள். ஒவ்வோர் அதிகாரிக்கும் குறிப்பிட்ட ஜோஸியர் சொல்வதில்தான் நம்பிக்கை உண்டு. நான் டில்லியில் உள்ள அதிகாரிக்கு வேண்டிய ஒரு ஜோசியரைப் பிடித்தேன். என் ஜாதகத்தைப் பார்க்கச் சொன்னேன். அதற்காக அவருக்குக் கொடுக்க வேண்டிய சன்மானத்தை ஒரு பெரிய கவருக்குள் வைத்துக் கொடுத்தேன். உள்ளே இருந்ததை எடுத்துப் பார்த்து அவர் பிரமித்துப் போய் விட்டார். பத்தாயிரம் ரூபாய்க்கு அவர் மனைவி பேருக்குச் சர்க்கார் பத்திரங்கள் வாங்கி வைத்திருந்தேன். மறு நாள் அவரை அழைத்துக் கொண்டு டெல்லிக்கு விமானத்தில் போனேன். ஜோசியர் அப்படிப் போனது அதுதான் முதல் தடவை. இருபத்தி நான்கு மணி நேரத்தில் லைசென்ஸ் கிடைத்து விட்டது. இந்த முயற்சியில் நான் யாருக்கும் லஞ்சம் கொடுக்கவில்லை. பணம் என்னமோ சர்க்கார் பத்திரங்களில் இருக்கிறது. அந்த அதிகாரி மிகவும் கண்டிப்பானவர். பணம் என்றாலே காதைப் பொத்திக் கொள்வார்.''

''சிபார்சுக்காகவா ஜோசியர் அப்படிச் செய்தார்? '' என்று சித்ரா கேட்டாள்.

''ராஜ்ய சர்க்கார் ஏற்கனவே சிபார்சு செய்திருந்தார்கள். அதிகாரி செய்ததெல்லாம் லைசென்ஸைச் சீக்கிரம் கொடுக்க ஏற்பாடு செய்ததுதான். தவிர, ஜோசியர் என் ஜாதகத்துக்கும், அவர் ஜாதகத்துக்கும் மிகவும் பொருத்தமாயிருக்கிறது என்று சொல்லியிருப்பாரென்று நினைக்கிறேன்'' என்றான்.

''அப்படியா?'' என்று சித்ரா கேட்டாள்.

''பின்னே?''

''நீங்கள்தான் வெற்றியடைய வேண்டுமென்று நான் இந்தக் கலியில் கண்கண்ட தெய்வமாகத் திகழும் ஒரு நவீன தெய்வத்தை வேண்டிக் கொண்டேன்.''

''அந்தத் தெய்வத்தின் பெயரை நான் அறியலாமோ ?''

''அதுதான் லைசென்ஸ், கோட்டா பெறும் விஷயத்தில் அருள் பாலிக்கும் நவீன தெய்வம்!'' என்றாள் சித்ரா.

# முகத்திரைக்குள் மலர் முகம்



நான் புனாவிலிருந்து முப்பத்தைந்து மைல் தூரத்திலிருக்கும் கார்லாக் குகையைக் காணச் சென்றேன். அங்கே நாடோடி இனத்தைச் சேர்ந்த யாதவ குலப் பெண்கள் தலையில் முக்காடு அணிந்துகொண்டிருப்பதைக் கண்டேன். நாடோடிக் குலத்தைச் சேர்ந்தவர்களில் இவர்கள்தான் முக்காடு அணிவது வழக்கமாம்.

இந்தியாவில் ஒவ்வொரு குலத்திலும், இனத்திலும் பெண்கள் தலை முக்காடு போடும் சில சடங்குகள் இருக்கின்றன. சில இனத்தில் கோவிலுக்குள் முக்காடு போடுவதுண்டு. சிலர் மயானத்தில் முக்காடு போடுவதுண்டு. சிலருடைய இனத்தில் ஈமச் சடங்குகள் செய்யும்பொழுது முக்காடுகள் போடுவதுண்டு. சிலருடைய இனத்தில் விதவைகளான பின் முக்காடு போடுவதுண்டு. சிலர் திருமணத்தில் தாலி கட்டும்பொழுது முக்காடு போடுவதுண்டு.

பார்க்கப் போனால் உலகின் எல்லாப் பகுதிகளிலும் முக்காடு போடும் பழக்கம் இருந்து வருகிறது. இந்த முக்காட்டுப் பழக்கம் சுமார் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் தோன்றியிருக்க வேண்டும் என்று தெரிகிறது.

ஜெரரா நாட்டில் பண்டைக் காலத்தில் அழகிகளைக் கண்டால் ஆண்கள் திருமணம் செய்து கொள்ளுவார்கள். ஆனால் அவளுக்குக் கணவன் இருக்கும்பொழுது மற்றவன் அவளைத் திருமணம் செய்து கொள்ள மாட்டான். ஆகையால் அவள் நிமித்தம், அவள் கணவனைக் கொலை செய்துவிட்டுப் பிறகு அவளைத் திருமணம் செய்து கொள்ளும் ஒரு கொடிய பழக்கம் இருந்தது. இந்தப் பழக்கம் சில நூற்றாண்டுகளுக்கு முன்கூட நீலகிரியில் வாழும் சில ஆதிவாசிகளிடம் இருந்தது.

இந்தக் கொடிய பழக்கத்துக்குப் பயந்து ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் ஆபிரகாம் என்பவன் தன் மனைவி சாராளைத் தன் சகோதரி என்று கூறிக்கொண்டு ஜெரரா நாட்டில் திரிந்து கொண்டிருந்தான். அந்த நாட்டு அரசன் அபிமெலேக் என்பவன் சாராளின் எழிலில் ஏங்கித் தன் ஆட்களை அனுப்பி அவளைப் பிடித்துக் கொண்டு வரும்படி செய்தான். ஆனால் அபிமெலேக்கின் கனவில் ஆண்டவன் தோன்றி ''நீ கொண்டு வந்திருக்கும் பெண் திருமணமானவள். அவள் மூலம் உன் குடும்பம் அழிந்துவிடும்'' என்று கூறினார்.

தெய்வ பக்தி உடைய அபிமெலேக் அரசன், ஆபிரகாமைக் கூப்பிட்டு, ''நீ உன் மனைவியை ஏன் சகோதரி என்று கூறினாய்?'' என்று கேட்டான். ''ஊரார் என் மனைவியின் நிமித்தம் என்னைக் கொலை செய்வார்கள் என்னும் அச்சமே அதற்குக் காரணம்'' என்று பதில் அளித்தான் அவன். அபிமெலேக், சாராளிடம் ஆயிரம் வெள்ளிக் காசைக் கொடுத்து, ''உன் முகம் எவருக்கும் தெரியாதபடி ஒரு முக்காடு வாங்கி மறைத்துக்கொள்'' என்றான்.

சுமார் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய இந்த வரலாறு விவிலிய நூலில் இடம் பெற்றது. அன்று தோன்றிய முக்காடு கொஞ்சம் கொஞ்சமாக உலகம் முழுவதிலும் பலவிதமாகப் பரவ ஆரம்பித்தது.

தன்னைக் காணச் சகுந்தலை அரசசபைக்கு வந்தபோது அவளது முகத்திரையை நீக்கச் செய்து துஷ்யந்தன் பார்த்ததாகக் காளிதாஸனது சாகுந்தலம் கூறுகிறது. இராவணனுடைய வீழ்ச்சிக்குப் பின் சீதை இராமரைக் காண வரும்பொழுது சேலையால் முக்காடு போட்டுக் கொண்டுதான் வந்ததாக வால்மீகி கூறுகிறார். பல்லாயிரமாண்டுகளுக்கு முன்பே இருந்த பெண்கள் முக்காடு போடும் பழக்கம் இன்று சிலரிடத்தில் மட்டுமே தலைதூக்கினாலும் மறைந்த சரித்திரத்தை நினைவூட்டி வருகிறது.

**—பிலோ இருதயநாத்**

# அம்மாவின் சமயோசிதம் உதவியது!

















## வலிதான் எங்கள் பிரச்சினை...உங்களுக்கு நாங்கள் உதவக்கூடிய விதம் இதுதான்!

**ஆராய்ச்சி:** 'ஆஸ்ப்ரோ' ஆராய்ச்சிக் கழகத்தில் ஒரு ஆராய்ச்சிக் குழுவின் தலைவன் நான். எங்களுடைய பணி வலியை நீக்க மேன்மேலும் சிறந்த முறையைக் கண்டுபிடிப்பதே. இந்தப் பிரச்சினையில் ஆழ்ந்த ஊக்கம் கொண்டுள்ள உலகத்தின் முதன்மையான பல கழகங்களுள் எங்களுடையதும் ஒன்று. வலிக்கு, இக்காலத்தில், சிறந்த ஒரே விடை 'ஆஸ்ப்ரோ' [illegible]தான் என்பதை நாங்கள் இன்று அறிவோம். ஆதலால்தான் அது உலகமுழுவதும் உள்ள டாக்டர்களாலும் ஆஸ்பத்திரிகளிலும் பயன்படுத்தப்படுகிறது.

**வலி என்பது என்ன?** உயிர்ப்பொருள், உடல்வேகத்திற்கும் மேலாக, மிக விரைவாகத் திசுக்களில் சேர்ந்து குவிந்து, ஒரு "[illegible]" வீக்கத்திற்குக் காரணமாகிவிட அது நரம்புகளின் அழுத்தத்தின் மூலம் வலி ஏற்படுகிறது.

**'ஆஸ்ப்ரோ' இயங்குவது எப்படி?** 'ஆஸ்ப்ரோ' உடனடியாக இரண்டறக் கலந்துவிடுகிறது—வீக்கத்தை நீக்கி—நரம்புகளின் மீதிருக்கும் அழுத்தத்தைப் போக்கி—வலியை வெளியே இழுத்துவிடுகிறது.

**இவைகளுக்கு 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:** வலி • தலைவலி • உடல்வலி • பல்வலி • மூட்டு வலி • ஜுரவேகத்துடன்கூடிய ஜலதோஷம் • ஃப்ளு • டெங்கு.

**அளவு:**
பெரியவர்கள்: இரண்டு மாத்திரைகள். தேவையானால் மீண்டும் இதே அளவில் உபயோகிக்கவும். குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டரின் சொல்படி.




## 'ஆஸ்ப்ரோ'
வலியை வெளியே இழுத்துவிடுகிறது!



# மறைந்த மாமணி

சாந்தி மகானின் எளிமையை இன்றைய ஆட்சியாளர்களில் லால்பஹாதூர்ஜி ஒருவரிடமே காண முடிந்தது. அண்ணல் பிறந்த அக்டோபர் இரண்டாந் தேதிதான் லால்பஹாதூர்ஜி பிறந்த தினமும் ஆகும். அதே போல் அடிகள் மறைந்த அதே பஹுளா பஞ்சமியில் காந்திஜியைப் போலவே நாவில் ராமநாமத்தோடு மறைந்தார் ஸ்ரீ லால்பஹாதூர்.

ராமபக்த திலகமான தியாகைய சுவாமிகள் தேகம் துறந்த தினத்திலேயே ராமநாமத்துடன் உயிர்நீத்த ஸ்ரீலால்பஹாதூர், காஞ்சி ஆசாரிய சுவாமிகள் கூறியது போல், 'ஜனன மரணச் சூழலிலிருந்து விடுபட்டு விட்டார்' என்றுதானே கூற வேண்டும்?

## முன்னரே அறிந்திருந்தார்!

பதினேழாண்டுகளாக ஸ்ரீ லால்பஹாதூரின் பணியாளாக இருந்த ராம்நாத் இன்று சோக மயமாக இருக்கிறார். காலஞ்சென்ற பிரதமரின் மூச்சுப் பிரியும் வரை அவருக்குப் பணிபுரிந்த ராம்நாத், 'இவர் போல் ஓர் எசமானர் எனக்கு இனி எங்கே கிடைப்பார்?' என்கிறார்.

''சில நாள் முன்னமேயே அவர் என்னிடம் 'நான் அந்நிய தேசம் ஒன்றில்தான் மரணமடைவேன்' என்றுசொல்லியிருந்தார்'' என்று தேம்பிக் கொண்டே கூறினாராம் ஸ்ரீ ராம்நாத்.

ஆனால் அந்நிய தேசத்தையும் தமது அன்பினால் சுதேசம் போலாக்கிப் பத்து லட்சம் தாஷ்கெண்ட் மக்கள் தமது உடலைத் தொடருமாறு செய்து விட்டது அவரது அன்பு உள்ளம்.

## அறிவார் யார்?

அயல்நாட்டில்தாம் தமக்கு மரணம் நேரிடும் என்று ஸ்ரீ லால்பஹாதூருக்கு ஏதோ சூசகம் இருந்திருப்பினும், இறுதி இவ்வளவு நெருங்கி வந்து விட்டது என அவர் அறிந்திருக்க வில்லை. நிரந்தரமாகத் தாம் ஓய்வு பெற இருப்பதை அறியாமல், மறைவதற்கு இரண்டு மணிகள் முன்னால் ஸ்ரீ குல்ஜாரிலால் நந்தரிடம் டெலிபோனில் உரையாடிய போது 'காபூலில் தங்கி வர இரண்டு நாள் லீவு வேண்டும்' என்று வேடிக்கை செய்திருக்கிறார்.

காபூலுக்கு ஸ்ரீ லால்பஹாதூர் விஜயம் செய்வார் என்று ஆவலுடன் அவரை எதிர்பார்த்திருக்கிறார் எல்லைகாந்தியாகிய கான் அப்துல் காபர்கான் அவர்கள். தமது பழைய நண்பருக்கு அன்பளிப்பாக மலர்களும், ஆப்கானிஸ்தான வெல்லமும் எடுத்துக் கொண்டு இந்திய தூதரகத்தில் காத்திருந்திருக்கிறார். கடைசியில் இடி போன்ற செய்தி வந்தது. பரிசுப் பொருள்களை இந்தியாவுக்கு அனுப்புமாறு கூறிவிட்டு, வந்த வழியே துக்கத்துடன் திரும்பி விட்டார் காபர்கான்.

புதுதில்லியில் ஸ்ரீ லால்பஹாதூரின் சடலத்தைத் தாங்கிய வண்டி அவரது வீட்டுக்கு வந்து சேர்ந்த போதே எல்லை காந்தியின் பரிசுப் பொருள்களும் வந்து சேர்ந்தன.

## விதியின் விளையாட்டு

தாஷ்கெண்டுக்குச் செல்லுகையில் ஸ்ரீ லால்பஹாதூரின் விமானம் பாகிஸ்தான் பகுதியின் மீது செல்லாமல் சுற்றிக் கொண்டே சென்றது. தாஷ்கெண்டில் பிறந்த சமாதான ஒப்பந்தம் காரணமாக இரு நாடு

களிடை எழுந்த நட்பின் அடையாளமாக அவர் தில்லிக்குத் திரும்புகையில் பாகிஸ்தான் மீதாகவே செல்லலாம் என்று ஜனாதிபதி அயூப்கான் அவர்கள் மனமுவந்து கூறினர். ஆனல் விதி செய்த சதியில், உயிரற்ற லால்பஹாதூர்ஜியின் சடலமே பாகிஸ்தான் மீதாக விமானத்தில் பறந்து வந்து தில்லி சேர்ந்தது.

## அன்னை உள்ளம் நம்பவில்லை

ஸ்ரீ லால்பஹாதூர் அவர்களின் மறைவினல் ஏற்பட்டுள்ள துயரம் தாங்கொணுமலிருப்பதற்கு இரு காரணங்கள் அவரது தாயாரும், மனைவியும் ஆவர். ஒன்றரை வயதில் தகப்பனரை இழந்த லால்பஹாதூரை ஆளாக்கிய தாயார் ராம்துலாரி, தமது மகன் பாரதத்தின் பிரதமராக இருந்த பெருமையை அநுபவித்தவர்; இன்று அவர் இவ்வுலகை விட்டு நீத்ததைக் காணும் புத்திர சோகத்தையும் அநுபவிக்கிருர். லால்பஹாதூர் பிரதமரானவுடன், 'என் மகனுக்குப் பொறுப்பும் வேலையும் அதிகமாயிருக்கின்றன; என்றாலும் தன் வாழ்வைத் தியாகம் செய்தாகிலும் அவன் தன் கடமையை நிறைவேற்ற வேண்டும்' என்ருர் அந்த அம்மையார். அந்த வாக்கு இன்று நெஞ்சைத் தொடும் விதத்தில் உண்மையாகி விட்டது.

லால்பஹாதூர் மறைந்து விட்டதையே நம்ப மறுக்கிறது ராம்துலாரியம்மையின் தாயுள்ளம். தான் உயிருடன் இருக்கும் போது பிள்ளை காலமாக முடியும் என்றால் அவருக்கு நம்ப முடியவில்லை போலும். ''அவனு? இறந்து விட்டானு? இருக்காது; முடியாது'' என்கிருராம் அம்மூதாட்டி.

## மகாலக்ஷ்மி போல் மனைவி

ஸ்ரீமதி லலிதாசாஸ்திரியின் சௌமங்கலியம் வாய்ந்த திருமுகத்தை நினைக்கும்தோறும் துயருருத உள்ளம் இருக்க முடியாது. ஸ்ரீ லால்பஹாதூர் மட்டுமா மறைந்து விட்டார்? அவரோடு ஸ்ரீமதி லலிதாதேவியின் விஸ்தாரமான நெற்றியில் பெரிதாகப் பளீரென ஒளிர்ந்த குங்குமப் பொட்டும் அல்லவா மறைந்து விட்டது? உயிர் போன உடலம் போலன்ருே அந்த நெற்றி திலகமின்றி சூனியமாயிருக்கும்?

ஸ்ரீமதி லலிதாசாஸ்திரி மணிக்கணக்காகப் பூஜை செய்யும் ஆசார சீலை. தெய்வபக்திக்கு ஈடாகப் பதிபக்தி கொண்ட அவர் தம் கையாலேயே உணவு சமைத்துக் கணவருக்குப் படைத்து வந்தார்.

தாஷ்கெண்டுக்கு ஸ்ரீமதி லலிதாதேவி உடன் செல்லவில்லை. ருஷியப் பிரதமர் அவரை அழைத்திருந்த போதிலும், ஸ்ரீலால் பஹாதூர் அவரைத் தடுத்து விட்டார்,— இதுவும் விதியின் சதிதான் போலும்.

ஸ்ரீ லால்பஹாதூர் தம்பதியர் சுமார் நாற்பதாண்டு இனிய இல்வாழ்வு நடத்தியவர்கள். லால்பஹாதூர் பெற்ற வரதட்சிணை என்ன தெரியுமா? ஒரு ராட்டையும் லெ கஜம் கதர்த் துணியுமே !

## ஜாதகம் ஏது ?

ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு அவர்களின் மறைவு தினத்தை முன்கூட்டியே குறிப்பிட்ட ஒரு ஜோதிடர், ஸ்ரீ லால்பஹாதூரின் ஆட்சியும் நீண்ட காலம் நீடிக்காது என்று ஜோதிடம் கூறி வந்தாராம். எனினும், ஸ்ரீ லால்பஹாதூரின் ஜாதகத்தைப் பார்த்தால்தான் தெளிவாகக் கூற முடியும் என்ருராம். ஆனல் லால்பஹாதூர் அவர்களோ 'எனக்கு ஜாதகமே கிடையாது. ஜாதகத்தைப் பற்றிக் கவலையுமில்லை. 'ஏதோ என் காரியத்தை நான் செய்து கொண்டு போகிறேன். எப்போது மரணம் வருகிறது என்று தெரிந்து என்ன ஆக வேண்டும்?' என்ருராம்.

## தெரியாத விஷயம்

ஸ்ரீ லால்பஹாதூர் மிகவும் வறுமைவாய்ந்த குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவர் என்பது அனைவருக்கும் தெரிந்த விஷயம். ஒரு முறை அவர் பள்ளி செல்கையில், கங்கையைக் கடக்கப் படகுக் கட்டணம் தர இயலாததால், நீந்தியே சென்ருர் என்பதை பலர் அறிவர். பிற்பாடு காசி வித்யாபீடத்தில் படிக்கும் போது அவர் ஒரு சைக்கிளுக்குக்கூட வழியில்லாமல் பதினறு மைல் நடந்திருக்கிருர் என்பதைச் சிலர் அறிந்திருக்கக் கூடும்.

ஆனல் காசி வித்யாபீடத்தில் அவர் தத்துவ சாஸ்திரம் பயின்ருர் என்பதைப் பலரும் அறிந்திருக்க முடியாது. ஏனெனில், வேதாந்தத்தின் அருகிலேயே போகாதவர்கள் கூட கீதை, உபநிஷதம் என்று மேற்கோள் காட்டும் இக்காலத்தில் ஸ்ரீ லால்பஹாதூர் அவர்களோ இத்தகைய படாடோபப் பிரசங்கம் ஏதுமே செய்ததில்லை. ஸ்ரீலால் பஹாதூரின் எளிமையும் அடக்கமும் எங்கே பூரணமாக இருக்கின்றன எனில் அவர் இவ்வாறு தமது தத்துவப் புலமையை மறைத்து வைத்திருந்ததிலேயே எனலாம். எனினும் பேச்சில் தெரியாத தத்துவம் அவர் வாழ்வில் கரைந்திருந்தது. ஸ்ரீ பகவான்தாஸ் அவர்களின் ஸமன்வய தத்துவமே ஸ்ரீ லால் பஹாதூரைப் பெரிதும் ஈர்த்தது. எவ்வளவு விரோதமான கொள்கைகளையும் ஒன்றுக இசைக்க முடியும் என்ற சித்தாந்தமே ஸமன்வய தத்துவம். இதன் ஒப்பற்ற சான்றை அவர் இறுதியில் கையொப்பமிட்ட தாஷ்கெண்ட் சாஸனத்தில் காண்கிறேம்.

## நேருஜியின் வாரிசாக....

நேரு அவர்கள் நோய்வாய்ப்பட்ட போது ஸ்ரீ லால்பஹாதூர், ''உங்களுக்கு நான் எப்படி உதவி புரியட்டும்?'' என்று கேட்டார். ''என் வேலையை நீங்கள்தான் பார்த்தாக வேண்டும்'' என்ருர் நேருஜி. சில மாதங்களுக்குப் பின் அவ்வாக்கியம் எழுத்துக்கு எழுத்து உண்மையாயிற்று. நேருஜியைப் போலவே இரவு பகல் பாராமல் உழைத்தார். இன்று அவரது காரியாலய அறையில் ஒரு தஸ்தாவேஜுகூட பாக்கியில்லை. அத்தனை நறுவிசாக வேலைகளைக் கவனித்துவிட்டு நிரந்தர ஓய்வு பெற்றுவிட்டார் !

# மோட்டார்
# சுந்தரம் பிள்ளை



ஜெமினி ஸ்டுடியோஸ்
அளிக்கும்
இனியதொரு குடும்பச் சித்திரம்



| | | |
|---|---|---|
| சிவாஜி கணேசன் | - | சௌகார் ஜானகி |
| ரவிச்சந்திரன் | - | ஜெய லலிதா |
| சிவகுமார் | - | காஞ்சனா |
| சூர்யகுமார் | - | ஆஷா |
| நாகேஷ் | - | குமாரி சரஸ்வதி |
| பேபி பத்மினி | - | பேபி சாவித்திரி |
| நாகய்யா | - | சுந்தரராஜன் |
| ராமராவ் | - | பண்டரிபாய் நடித்தது |




சென்னை **சாந்தி**

**கிரௌன், புவனேசுவரி**

மற்றும் தமிழ்நாடெங்கும் வெளிவருகிறது

# நில்! கவனி! நட!

குறும்பன்

'ரோல்ஸ் ராய்ஸ்' கார் அலுங்காது செல்லும் கப்பலென அந்தச் சாலையில் ஓடிக் கொண்டிருந்தது. அதில் அமர்ந்திருந்தவர்களில் ஒருவர் அந்தக் காலத்து வைசிராய். அதாவது பிரிட்டிஷார் பாரத நாட்டை ஆண்டு கொண்டிருந்த காலத்தில் ராஜப் பிரதிநிதியாக விளங்கிய பிரபு. அவர் அருகில் அமர்ந்திருந்தவர் சுதேச சமஸ்தானம் ஒன்றின் செல்வாக்கு நிறைந்த திவான். இந்திய விடுதலைக்கு இயக்கம் நடந்து கொண்டிருந்த காலம்.

சாலையில் கார் வழுவழு வென்று வழுக்கிக் கொண்டே ஓடுவதைக் கண்ட வைசிராய்க்கு ஒரே பெருமிதம். ஆங்கிலேயர்களது ஆட்சி பாரத நாட்டுக்குச் செய்துள்ள பல சௌகரியங்களில் இதுவும் ஒன்று என்ற இறுமாப்பு. 'பிரிட்டிஷ் ஆட்சி போக்குவரத்துக்கு எத்தனை அழகாகச் சாலைகள் அமைத்திருக்கிறது. இன்னோரன்ன பல வசதிகள் செய்து தந்திருக்கிறது. அப்படி இருந்தும் இந்த நன்றிகெட்ட இந்தியர்கள் சுதந்திரம் வேண்டும் என்று இயக்கம் நடத்துகிறார்களே!' இப்படி ஓர் எண்ணம் ஓடவே, அருகில் அமர்ந்திருந்த திவானைப் பார்த்தார். 'பார்த்தீர்களா சாலையை?' என்று கேட்டார்.

திவான் ஒன்றும் பதில் கூறவில்லை. 'உம்' கொட்டி விட்டுச் சும்மா இருந்தார்.

சிறிது நேரத்துக்கெல்லாம் கார் குலுக்கிக் கொண்டு ஓடலாயிற்று. புயலில் சிக்கிய படகை நினைவுபடுத்திக்கொண்டு. ''பிரிட்டிஷ் ஆட்சிக்கும் சுதேசி ஆட்சிக்கும் உள்ள வித்தியாசம் இதுதான்!'' என்று கூறிச் சாலையைப் பார்த்தார் வைசிராய்.

திவானின் அடைத்திருந்த வாய் இப்பொழுது திறந்தது. ''ஆமாம், எங்கள் சமஸ்தானத்தின் எல்லை தீர்ந்து விட்டது. இப்பொழுது நாம் மாட்சிமை தங்கிய பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் சாலையில் போய்க் கொண்டிருக்கிறோம்!'' என்றார்.

மௌனம் சாதிக்க வேண்டிய முறை இப்போது வைசிராயைச் சேர்ந்ததாகிவிட்டது!

இப்படியே கதையை முடிப்பதற்கில்லை. ஏனென்றால், ஏறக்குறைய இதே மாதிரி ஓர் அநுபவம் எனக்கும் ஏற்பட்டிருக்கிறது. அதைச் சொல்லாமல் விடுவேனா ? விட்டால் தான் நன்றாயிருக்குமா?

சமீபத்தில் நான் எங்கள் மாவட்டத்தின் கிராமப் பகுதிக்குப் போய் வந்தேன்.

நான் பயணம் செய்து கொண்டிருந்த மாட்டு வண்டியின் சக்கரம் ஓர் 'ஆச்சல்' குழியில் இறங்கி ஏறியது. வண்டியின் கூண்டு என் மண்டையைப் பதம் பார்த்தது. என்னோடு வந்த நண்பர், ''ஏண்டா, பார்த்து ஓட்டக் கூடாது?'' என்று வண்டிக்காரனைக் கடிந்து கொண்டார்.

''அவன் மேல் என்ன தவறு? பாதை குண்டும் குழியுமாக இருக்கிறது!'' என்று நான் சமாதானம் சொன்னேன்.

''மாட்டு வண்டி என்ன காரா, பஸ்ஸா? கொஞ்சம் தலைக் கயிற்றை இழுத்துப் பிடித்திருந்தால் உங்கள் தலைக்கு இப்படி ஒரு வலி ஏற்பட்டிராதல்லவா?'' என்றவர், ''இந்தப் பட்டிக்காட்டுச் சாலைகளைக் கவனிக்க நாதி கிடையாது. இதுவே கார், பஸ் போகும் சென்னைப் பாதையாயிருந்தால் இப்படிக் கவனிக்காமல் இருப்பார்களா?'' என்று அங்கலாய்க்கவும் செய்தார்.

அவருக்கு ஒரு மலைப்பு. இக்கரைக்கு அக்கரை பச்சை என்ற நினைப்பு. சென்னை நகரவாசிகள் அனைவரும் சொர்க்கவாசிகள் என்றும், கைதட்டினால் ஆட்டோவும் டாக்ஸியும் போட்டி போட்டுக் கொண்டு வருகின்றன என்றும், சிமிண்டுச் சாலைகளிலும் தார் ரோடுகளிலும் பஸ்களில் நினைத்த இடத்துக்கு நினைத்த பொழுது போய்வர முடியும் என்றும் மனத்துள் கற்பனை செய்து கொண்டிருந்தார்.

ஆனால் நகரத்துக்கும் நரகத்துக்கும் எழுத்து வித்தியாசம்கூடக் கிடையாது. எழுத்து இடம் மாறி விழுந்தால் போதும் என்று அவருக்கு யார் எடுத்துச் சொல்வது?

சென்னைமா நகரத்தின் கதையைக் கேட்கப் போனால், கோடம்பாக்கம் – புதூர் போன்ற புறக்காலனிகளுக்குப் போய் வரச் சரியான நேர் பாதையே கிடையாது. மேல மாம்பலத்தையும் அந்தக் காலனியையும் இணைக்கக் கூடிய, இணைக்க வேண்டிய எத்தனையோ தெருக்கள் தெருக்களாக உருப்பெறாமல், ஒரு இட்டாக நிற்கின்றன. ரயில் பாதைகளைக் கடந்து செல்லவேண்டிய அவசியம் ஏற்பட்டால், 'லெவல் கிராசிங்'களில் 'கபாடம் திறமினோ!' என்று தவங் கிடக்க வேண்டியது தான். இப்படி மக்களுக்குச் சரியான போக்குவரத்து வசதி செய்யாமல், அவர்களைக் கொண்டு போய் அங்கே குடியேற்றிவிட்டால் எத்தனை அவதிகளுக்குள்ளாவார்கள் என்பதைச் சொல்லவும் வேண்டுமா ?

ஒரு தெருவின் முனையும் மற்றொரு தெருவின் முனையும் ஒன்று சேர வேண்டிய இடத்தில், சில கஜ தூரத்துக்காவது சரியான பாதை போடப்படாமல் குண்டும் குழியுமாகக் காட்சியளிப்பதை மேல மாம்பலம் வட்டாரத்தில் ஏராளமாக, தாராளமாகக் காணலாம். மழைக் காலத்தில் நீர்க் காடாகத் தோன்றும் இந்தப் பகுதி கோடைக் காலத்தில் சேற்றுக் குழம்பாக

இருக்கும். நன்றாகக் காய்ந்து பொறுக்குத் தட்டிய நாளை அந்த இடம் கண்டதாக எனக்கு நினைவில்லை. ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பது போல், மகாதேவய்யர் தெருவை மட்டும் எடுத்துக் கொள்ளுகிறேன். மற்றத் தெருக்களையும் குறிப்பிட வேண்டும் என்றால் அட்டவணை அனுமார் வாலாக நீண்டு விடும்.

மகாதேவய்யர் தெருவிலே கொஞ்ச தூரம் போனால் சேறு சந்தனமாகக் குழம்பியிருக்கும் ஓரிடத்தைக் காணலாம். மழை பெய்து விட்டால், அங்கே ஒரு சிறு குளம் கட்டியிருக்கும். நானும் என் நண்பரும் அந்தப் பக்கம் போயிருந்த பொழுது, பூட்டும் சூட்டும் அணிந்திருந்த நண்பர் ஒருவர் அதைக் கடக்க முயன்றார். அன்றுதான் சலவைக்குப் போய் வந்த ஆடைகளை அணிந்திருந்தார். இன்னும் இரண்டு நாட்களாவது போட்டுக் கொள்ளலாமே என்று ஒரு நைப்பாசை. இப்படிப் போனால் நல்லதா, அப்படிப் போனால் சௌகரியமா என்று இங்கும் அங்கும் லெம்பம் பழகுகிறவர்களைப் போல் நடை போட்டார். அவர் எப்படிக் கடக்கிறார், பார்ப்போம்! அப்புறம் அவர் வழியைப் பின்பற்றுவோம். என்று நாங்கள் நின்று கொண்டிருந்தோம். 'பக்கத்து வீட்டு வேலிக்குள் நுழைந்து இப்படி வந்து விடுங்கள். அவ்வளவாக அங்கு நீர் தேங்கவில்லை' என்று யோசனை கூறினார் ஒருவர். வேலிக் கருவேல மரம் 'கரு கரு' வென்று வளர்ந்திருந்தது. முள்ளைக் குத்திக் கொண்டு இரத்தக் களறி செய்து கொள்ள விரும்



பாத அவர் ஹனுமானை நினைத்துக் கொண்டு ஒரு தாண்டுத் தாண்டினார். சதக்! சேற்றுக் குழம்பில் அவர் பின்புறத்துப் பூட்ஸ் கால் பதிந்தது. அவருக்கும் அபிஷேகம் செய்து வைத்து, எங்களுக்கும் புரோக்ஷணம் செய்து வைத்தது. ஆர்வத்தோடு கவனித்துக்கொண்டிருந்த எங்களுக்குக் கிடைத்த சன்மானம் அது! வண்டி ஓடத்தில் ஏறும், ஓடம் வண்டியில் ஏறும் என்ற பழமொழியை நினைவில் கொண்டு பக்தி சிரத்தையுடன் நாங்கள் எங்கள் பாதுகைகளைக் கையில் ஏந்திக் கொண்டு நீரில் இறங்கியே இக்கரை சேர்ந்தோம்.

இன்னொரு சமயம். இன்னொரு தெரு. சைக்கிளில் வந்தார் ஒருவர். நீர் தேங்கிய மடுவைக் கடக்க அவருக்கு யோசனை தோன்றவில்லை. அச்சமயம் பார்த்து ஒரு வாண்டுப் பயல் சைக்கிள் பெடலை வேகம் கொண்ட மட்டில் மிதித்துக் கொண்டு வந்தான். தண்ணீர்க் காட்டுக்குப் பயந்து அவன் சைக்கிளிலிருந்து இறங்க வில்லை. கண் மூடிக் கண் திறக்கும் நேரத்தில் அவன் அக்கரை சேர்ந்து விட்டான். அதைக் கண்ணுற்ற சைக்கிள் நண்பருக்குப் பால்யம் திரும்பியது. 'இந்த வாண்டுப் பயல் போய் விட்டான். நம்மால் முடியாதா?' என்று எண்ணியவர் சைக்கிளில் ஏறி மிதித்தார். நடுத் தண்ணீரில் சைக்கிளோடு விழுந்து 'அவகாஹ' ஸ்நானம் செய்து எழுந்தார். ஐந்தடி தாண்ட வேண்டுமென்றால், ஐம்பதடி பின்னுக்குச் சென்று படுவேகத்தில் ஓடி வரவேண்டும் என்பதை நண்பர் மறந்து விட்டார் போலும்!

இந்தத் தண்ணீர்த் தேக்கம் அந்தக் காலத்து நினைவொன்றை என் மூளையிலே கொண்டு வந்து தேக்கி நிறுத்திற்று. தேர்தல்களுக்கும் மழைக்கும் என்ன உடன்படிக்கையோ, தெரியாது! தேர்தல் சமயம் பார்த்து மழை பெய்திருக்கும். அந்தக் காலத்துச் சாலைகளோ மண் சாலைகள்! மண்ணும் மழை நீரும் ஒன்றுகூடித் தளதளவென்று சேற்றுக் குழம்பாகக் காட்சி தரும்.

பசையுள்ள சில தேர்தல் அபேட்சகர்கள் இரண்டொரு 'பிளஷர்'களுக்கு ஏற்பாடு செய்து கொண்டு வோட்டு வேட்டைக்குப் புறப்படுவார்கள். இந்தச் சமயத்தில் வேலையற்ற சிலருக்கு வேலை கிடைக்கும். என்ன வேலை என்று கேட்கிறீர்கள்? மண் சாலையில் உள்ள சேற்றைக் கொத்திக் கிளறிச் சேறாகவே வைத்திருப்பார்கள். இலேசில் தண்ணீர் சோர்ந்து காயவிட மாட்டார்கள். பிளஷர்கள் வரும், சகதியில் மாட்டிக் கொள்ளும். வேலையற்ற மதகுக் கரையில் உட்கார்ந்திருப்பவர்கள் தாம்புக் கயிறும் வைக்கோலும் முன்னாலேயே தயாராக வைத்திருப்பார்கள். காரைக் கரை சேர்க்க ஐந்து, ஆறு என்று கூலி பேசிக் கொண்டு சேற்றில் இறங்குவார்கள். பிளஷரில் போகிறவர்களுக்கு இப்படி ஒரு பிளஷர் தந்து தாங்களும் பிளஷர் அநுபவிக்கும் மகாநுபாவர்கள் அவர்கள்.

மழைக் காலத்தில் சென்னை நகரத்தில் எத்தனையோ கார்களும் பஸ்களும், லாரிகளும் சேற்றை வாரி மக்கள் மீது அடித்து இதே ஆனந்தத்தை அநுபவிக்கின்றன! ஏழை,பணக்

காரன், தொழிலாளி, முதலாளி என்ற பாரபட்சமின்றிச் சமதர்மக் கொள்கையைப் பரப்பும் இந்த விந்தைக் காட்சி மழைக் காலத்தில் சென்னை மாநகரில் கண்கொள்ளாக் காட்சியாகும்!

எத்தனையோ தெருக்களுக்கு இப்படி ஒரு நிலை என்றால் வீட்டுக்கு வீடு வாசற்படி என்னும் பழமொழியைப் பின்பற்றி வாசலுக்கு வாசல் சாக்கடைத் தொட்டிகளைப் பல பேட்டைகளில் காணலாம். இந்தச் சாக்கடைகள் நிறைந்து வழியாமல், சாக்கடை நீரை எடுத்துச் செல்லவென்று நகர சபையினர் 'வான்' வசதிகள் செய்துள்ளார்கள்; மாட்டு வண்டிகளும் உண்டு. இவ்வண்டிகளில் பணியாற்றுபவர்களை வீட்டுக்காரர்கள் எல்லா வகையிலும் நயந்து வைத்துக் கொள்ள வேண்டும். சிறிது இசைப்பிசகு ஏற்பட்டு விட்டால் போதும், தெருவில் தேங்கும் நீர் கங்கையாகப் பிரவகிக்கும். ஆம், வீட்டுக்காரரே கடப்பாறையைக் கொண்டு தொட்டியின் ஒரு மூலையில் துவாரம் போட்டு விடுவார். அவர் என்ன செய்வார், பாவம்! அவருக்கு அவர் காரியம். தெருவில் போவோர் — வருவோர் மூக்கைப் பிடித்துக் கொண்டு குட்டி அநுமார் வேஷம் போட்டு இலங்கையைத் தாண்டுவார்கள். ஏன், அந்த வீட்டின் சொந்தக்காரருமேகூடக் கார்ப்பொரேஷன் செயலாற்றும் இலட்சணத்தைப் பற்றி ஒரு பாட்டம் பாடிக் கொண்டே வருவார். பலரது பரோபகாரத்தின் பேரில் என்றைக்காவது அவர் வீட்டுச் சாக்கடைத் தொட்டி சுத்தம் செய்யப்படும். இந்த நிலை நகர சபையைச் சேர்ந்த பழைய பகுதிகளில் என்பதுதான் இல்லை. வீட்டு வசதி போர்டின் பல புதுக் காலனிகளிலும், மழை நீரோ, சாக்கடை நீரோ சரியான முறையில் வடியும் ஏற்பாடுகள் செய்யப்படவில்லை. காம்பவுண்டுச் சுவருக்கு ஓரமாக இந்தப் பகுதிகளிலும் அசுத்த நீர் தேங்கியிருப்பதை இன்றைக்கும் காணலாம்.

இன்னுமோர் அதிசயம். பட்டிக்காட்டான் யானையைப் பார்த்தது போல் என்பார்கள். சென்னை நகரத்தைப் பார்க்க வரும் பட்டிக்காட்டார்கள் மந்தை மந்தையாகத் தெருக்களில் மேயும் பன்றிகளைப் பார்த்துத்தான் இப்பொழுதெல்லாம் அதிசயிக்கிறார்கள். சுறுசுறுப்பான சாலைகளில் ஆடுகளும் மாடுகளும் அசைந்தாடிக் கொண்டு செல்வதையும், 'வழி மறைத்திருக்குதே ஒரு மாடு' என்று நந்தனார் சரித்திரக் கீர்த்தனையைப் பாடிக் கொண்டு கார்கள் நிற்பதையும் 'விலகி இரும் பிள்ளாய்' பாட்டு முடிந்த பின்னரே அவை வழி விடுவதையும் கண்டு வியக்கிறார்கள். தெருவைச் சுத்தம் செய்யத்தான் பன்றிகள் வருகின்றனவோ என்ற தைரியத்தில் குழந்தைகளை மல-ஜலம் கழிக்கத் தெருவிலேயே விடும் மக்களையும் கண்டு மனநிறைவு பெறுவார்கள்! 'இதுவா நகரம்? எங்கள் நாட்டுப்புறம் எவ்வளவோ தேவலையே! எங்கள் தெருக்களில் பன்றிகள் நுழைந்து நாங்கள் பார்த்ததில்லை. ஏன்? எங்கள் வீட்டுக் கொல்லைப் புறங்களில் கூடப் பன்றிகளை நாங்கள் விட்டதில்லை. மாடுகளைக் கட்ட மாட்டுக் கொட்டில்கள் இருக்கின்றன. அழகழகான தெருக்களைச் சமைத்து அதன் மத்தியிலே ஐம்பது அறுபது என்று மாடுகள் கட்டும் பழக்கத்தை இனித்தான் நாங்கள் கற்க வேண்டும். இவையெல்லாம் சுகாதாரத்துக்கு உகந்தவையா?' என்று கேட்பார்கள்.

இப்படிப் பராக்குப் பார்த்துக் கொண்டே நம்மோடு நடைபாதையை விட்டு விலகி,



நடுப் பாதைக்கு வந்து விடுவார்கள். ஹார்ன் அடிக்கும் கார்க்காரர்களும் பஸ்காரர்களும், ''ஏன் ஐயா வீட்டில் சொல்லிக் கொண்டு வந்திருக்கிறீரா? எருமை மாடாட்டமா வழியை அடைத்துக் கொண்டு நிற்கிறீரே!'' என்று கடிந்துகொண்டு முன்னேறி விடுவார்கள். போலீஸ் வான்களோ 'நடைபாதையில் போ' என்று உபதேசித்தவாறு ஓடிவிடும். இவர்கள் எல்லாரும் சற்று நின்று கேட்டால், கிராமத்தார்கள் கொடுக்கும் பதிலை வாங்கி மடியில் கட்டிக் கொண்டு போகலாம். நகரசபைக்கு எடுத்துச் சென்று உதறலாம். ''ஏன், ஐயா! நடைபாதை என்று ஒன்று போட்டிருக்கிறானே, அது மனிதன் நடப்பதற்காகவா போட்டிருக்கிறான்? நரகம் என்று ஒன்று உண்டானால், இதுவே நரகம், இதுவே நரகம், இதுவே நரகம் என்று ஷாஜஹானைப் பின்பற்றிக் கூறும்படியல்லவா வைத்திருக்கிறான்! உலகத்து அசுத்தங்கள் அனைத்தும் அங்கேயல்லவா குவிந்திருக்கின்றன! நடைபாதையென்றால் அதில் நடக்க வேண்டும் என்ற ஆசையைக் கிளறி விடும் அளவுக்கு அழகாகவும் சுத்தமாகவும் அல்லவா சமைத்திருக்க வேண்டும்?'' என்பார்கள். நகரத்தின் நிலை அறியாத நாட்

டுப்புற மக்கள்தானே? நாகரிகம் தெரிய நியாயமேது?

ஒவ்வொரு வட்டாரத்திலும் சாலைக்கு இரண்டு குப்பைத் தொட்டிகளாவது குறைந்தபட்சம் இருக்க வேண்டும் என்று மக்கள் எதிர்பார்த்தால் வியப்பில்லை. ஆனால் ஒன்றைக் காண்பதே அபூர்வம் என்றால் அதில் நிரம்பி வழியும் குப்பையை ஏற்றிக் கொண்டு போக வர வேண்டிய மாட்டு வண்டியையோ லாரியையோ காண்பது அதைவிட அபூர்வம்தான். இப்படி இருக்கும் போது திடீரென்று ஒரு நாள் அந்தக் காலத்திய தேர்ப் படை போல் ஏராளமான குப்பை வண்டிகள் உங்கள் தெரு மீது படை எடுத்து வந்தால் நீங்கள் என்ன நினைப்பீர்கள். ஐயையோ! நிச்சயமாக இது ஏதோ விபரீதத்துக்கு அறிகுறிதான் என்றுதானே முடிவுக்கு வர வேண்டும்! உங்கள் கலகம் பொய்யாகும்படி நகரசபையார் விடுவார்களா? உங்கள் வீட்டெதிரேயே எல்லாக் குப்பை வண்டிகளும் வரிசையாக நின்று அத்தனை குப்பையையும் போராகக் குவித்துவிட்டுச் சென்று விடும்.

துணிந்து காரணத்தை வினவப் போனால் நகரசபை சுகாதார அதிகாரிகள் சென்னையில் பள்ளம் எங்கே எங்கே என்று ஏங்கித் தவித்துத் தாபத்தோடு தேடினார்கள் என்றும் கடைசியில் நேற்றுத் தான் 'கண்டோம், பள்ளத்தை!' என்று உங்கள் வீட்டெதிரே இருக்கும் பள்ளத்தைப் பார்த்து விட்டு ஆனந்தக் கூத்தாடினார்கள் என்றும் தெரிய வரும். ஆயிற்று. இன்னும் ஆறு மாதங்களுக்கு அவர்களுக்குக் குப்பையை எங்கே கொட்டுவது என்ற பிரச்னை கிடையாது! கவலை விட்டது! அப்புறம் என்ன? மாதக் கணக்கில் கார்ப்பொரேஷன் ஸ்பெஷல் ஸெண்ட் உங்கள் வட்டாரம் முழுமைக்கும் மணம் பரப்பிக் கொண்டிருக்கும். இப்படிக் கமகம வென்று வாசனூட்டுவதற்காக ஏதேனும் வரி போடுகிறார்களா? கிடையாது! அத்தனையும் இலவசம்தான். எவ்வளவு பெருந்தன்மை! இந்த நறுமணம் கமழும்போது இதனால் ஏற்படும் சில்லறைத் தொந்தரவுகளை — ஈக்களும் கொசுக்களும் பெருக, டிங்கி, டிஸெண்டரி, ப்ளு, மலேரியா போன்ற நோய்க் கிருமிகளுக்கு நம் தேகத்தில் இடம் ஒழித்துத் தர வேண்டியிருப்பதை - நாம் பொருட்படுத்தவா போகிறோம்?

பள்ளத்தை இட்டு நிரப்புவது என்பது நல்ல யோசனைதான்.



ஆனால் நாலு லாரி குப்பை கொட்டிய கையோடு அதன் மேல் அரை லாரி மண்ணைப் பரப்ப வேண்டும் என்கிற அடிப்படை சுகாதார உணர்ச்சியை எழும்பூர் க்ஷயரோக ஆஸ்பத்திரிக்கு எதிரே கூடக் கடைப்பிடிக்காத போது மற்ற வட்டாரங்களில் இதனை எதிர்பார்ப்பது நியாயமில்லைதானே?

நாட்டின் நலனைப் பேணுவதில் சென்னைக்கே முதலிடம் என்னும் பட்டம் நமக்குக் கிடைத்திருக்கிறது. 'உற்பத்தியைப் பெருக்கு' என்ற அரசாங்கத்தின் கோஷத்தை நிறைவேற்ற மட்டும் பின்தங்கி விடுவார்களா, என்ன? நகரசபையின் கூட்டுறவோடு சென்னை மக்கள் சாக்கடைகளின் உதவி கொண்டு இந்தப் பணியிலும் உயர்ந்து நிற்கிறார்கள்.

ஒரு காலத்தில் கும்பகோணம் கொசுக்களைப் பற்றிப் பல பாடல்கள் வழங்கி வந்தது உண்டு. பலருக்கு நினைவிருக்கலாம். காந்தியடிகள் 'கிராமத்துக்குப் போ' என்று கூறிய பொழுதிலும் கிராமத்து மக்கள் உத்தியோக நிமித்தம் சென்னை மாநகரத்தை நாடி வருவது போல், கும்பகோணம் கொசுக்கள் மாம்பலத்தை நாடி வந்ததாகக் கதை உண்டு. உற்பத்திப் பெருக்கத்துக்கு உரம் எத்தனை அத்தியாவசியமோ, அத்தனை அவசியம் சாக்கடைகள். எதற்கு? உணவு உற்பத்திக்கா? இல்லை, இல்லை! கொசுக்கள் உற்பத்திக்கு! மாம்பலத்தை நாடி வந்த கும்பகோணம் கொசுக்கள் பல்கிப் பெருகிச் சென்னை மாநகரம் முழுவதையுமே வியாபித்துக்கொண்டுள்ளன. எங்கள் பேட்டைகளில் கொசுக்கள் கிடையாது என்று பெருமைப் படுபவர்களோ, துக்கிப்பவர்களோ இனி சென்னையில் இருக்க முடியாது. அயல் நாட்டவர்கள் விரும்பி ஏற்றால், ஏராளமாகக் கொசுக்களை ஏற்றுமதி செய்து நாட்டின் டாலர் பஞ்சத்தை நீக்கச் சென்னை நகரம் ஒன்று மட்டுமே போதும் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

சென்னைக் கொசுக்களுக்கு அரசாங்கத்தின் இன்னோர் இயக்கம் கட்டோடு பிடிக்கவில்லை. 'இந்த மனிதர்கள் மிகவும் பொல்லாதவர்கள், சதிகாரர்கள்! எங்கள் குடும்பங்களை மட்டும் எல்லைக் கடங்காமல் பெருக விட்டு விட்டு, தாங்கள் கட்டுப்பாடான குடும்பமாகச் சுகித்து வாழ நினைக்கிறார்கள்! நாம் இவர்களை நல்லெண்ணம் படைத்தவர்கள் என்று எப்படி நினைப்பது?' என்று வன்மம் பாராட்டுவதாகக் கூடக் கேள்வி.

இப்படிக் கொசு உற்பத்திப் பணியில் ஈடுபட்டிருக்கும் பகுதிகள் ஏராளம். அவற்றில் மாம்பலத்தைச்



சேர்ந்த வடிவேல்புரமும் ஒன்று. நகரசபையின் அனுமதி பெற்று உருவான பகுதிதான்!

நகரத்தை அழகுறச் சமைக்க வேண்டும் என்ற நல்லெண்ணத்தோடு நகரசபையில் 'டவுன் பிளானிங்' என்றொரு பகுதி இயங்கி வருகிறது. அதன் அனுமதி பெற்றுத்தான் புதிய பேட்டைகள் நிறுவப்பட வேண்டும். லே அவுட் சாங்ஷன் ஆன பிறகுதான் வீடுகள் கட்ட வேண்டும். நகரசபையினர் குடிதண்ணீர், சாக்கடை, மின்சாரம், சாலை முதலிய வசதிகளை அப்பொழுது தான் கவனித்துக் கொள்ளுவார்கள். இப்படி 'லே அவுட்' சாங்ஷன் ஆகி, வீட்டுப் பிளான்களைச் சமர்ப்பித்து, அதற்கான கட்டணத்தைக் கட்டிய பின்னரே வீடுகள் கட்ட வேண்டும் என்பது ஒரு மரபு. இதற்கு எத்தனையோ தேவதைகளிடம் வரம் பெற்றாக வேண்டும். இதற்குப் பயந்து எத்தனையோ பகுதிகள் அனுமதி பெறாமலே சென்னையில் உருவாகியுள்ளன. அனுமதி பெற்று உருவான பேட்டைகளுக்கே இன்னும் வசதிகள் வரவில்லையே! அனுமதி பெறாமல் உருவான பகுதிகள் இந்த வசதிகள் பெறுவது எந்தக் காலமோ?



வளர்ந்து வரும் நகரத்திலே, வாகன வசதிகள் பெருகிவிட்ட இந்த நாளிலே, சாலைகளை அகலமாக்கிச் செப்பனிட வேண்டும் என்னும் அவசியத்தை உணராதவர்கள் இருக்க மாட்டார்கள். நிழல் தரும் பச்சை மரங்களை வெட்டும் பொழுது மனத்துக்குக் கஷ்டமாகத்தான் இருக்கிறது. சாலைகள் சமைப்பதும் மரங்கள் வைப்பதும் மரபாகக் கொண்ட நாட்டிலே இப்படி ஒரு வெட்ட வெளியைக் காணும் பொழுது கண்களைக் கூசுகிறது. நாளைக்குச் சாலைகள் செப்பனிடப்பட்டு மரங்களும் வளர்ந்துவிட்டால், இந்நிலையை மறந்து மக்கள் மகிழ்ந்து விடுவார்கள்.

ஆனால் இந்த நற்பணிக்காகச் செய்யப்படும் முறையை நினைத்தால்தான் இதயத்து இரத்தம் கசிகிறது. 'பணம், பொருள், உழைப்பு எல்லாம் இப்படி விரயமாகின்றனவே!' என்று இரத்தக் கண்ணீர் வடிகிறது.

நகர மாந்தர்களின் சௌகரியத்துக்கென்று குடிநீர்க் குழாய்கள், பாதாளச் சாக்கடைகள், மின்சார, தந்திக் கம்பிகள் ஆகியவை செப்பனிடப்படும் பாதைகளின் அடி வழியாகப் போக வேண்டியிருக்கிறது. வளர்ந்த மரங்கள் தந்திக் கம்பங்களையும் மின்சாரக் கம்பங்களையும் தாக்கி அவற்றைச் சரிவர இயங்காமல் செய்துவிடுகின்றன. இதைத் தவிர்க்கப் பூமிக்கு அடியில் இவற்றைக் கொண்டு போனால் நல்லது என்று தீர்மானித்துச் செயல்படுகிறார்கள். வருந்தத்தக்க விஷயம் என்னவென்றால், இந்தப் பணிகளைப் புரியும் இலாக்காக்கள் ஒன்றுக்கொன்று ஒத்துழைக்கவில்லை. இவற்றையெல்லாம் சரிவரச் சமைத்துக் கொண்டபின் சாலைக்குத் தார் போட்டால் அல்லவோ நன்றாயிருக்கும்? நடைபாதைகளுக்கு சிமிட்டி ஸ்லாப்புகள் பதிப்பது உதவிகரமாயிருக்கும்? இக்காரியங்கள் ஒரு நாள் இரண்டு நாட்களுக்காக ஏற்பட்டவை அல்ல; நீண்ட காலத்துக்குப் பயன்படுபவை. எனவே, முன்னெச்சரிக்கையுடன் நீண்ட நாட்கள் பயன்பட வேண்டும் என்ற நல்ல நோக்கத்தோடு சமைக்கப்பட வேண்டியவை. இந்த முறையை மனத்தில் கொண்டு திட்டமிட்டுத்தான் அலுவல் புரிகிறார்கள் என்று மக்கள் மகிழ்ந்து கொண்டிருக்கும் வேளையிலே வேலைகளை முடித்துத் தார்ச் சாலைகளும் போட்டு விடுகிறார்கள்.

''அப்பாடா! சாலை அழகாகி விட்டது! குண்டும் குழியும் இல்லை!'' என்று மகிழும் வேளையிலேயே நம் கண்ணே பட்டுவிடுகிறது போலும்! அடுத்த நாளே எதிர்வீட்டுக் குழாயில் சரியாக நீர் வரவில்லை என்பதற்காகச் சீரான தார் ரோட்டைக் காயப்படுத்திக் குழிபறித்து மராமத்துச் செய்திருப்பார்கள். மண்ணை நிரப்பி அக்குழிகளில் இரண்டொரு பச்சைத் தழைகளை நட்டிருப்பார்கள். அவை காய்ந்து சருகாகி, மேட்டு மண் இறுகிக் குழியாகக் காட்சி தரும்.

இந்தக் குழியில் இறங்கிக் காரின் வீல் ஒடியாமல் இருக்க வேண்டுமே என்பதற்காக டிரைவர் ஓர் ஒடிப்பு ஒடிப்பார்! எதிரே வரும் லாரிக்காரர் ஒரு நொடிப்பு நொடிப்பார்! இடையே புகுந்து வரும் சைக்கிள்காரர் ஒரு நெளிப்பு நெளிப்பார்! எல்லாமாகச் சேர்ந்து ஒரு விபத்து! அதற்குப் பிறகு ஒரு கூட்டம், போலீசாரின் சாக்குக் கட்டிக் கோடுகள், விசாரணை சாங்கியங்கள்! கடைசியாகப் பத்திரிகைகளில் வெளிவரும் விஷயம்: 'போலீஸார் விபத்து பற்றிப் புலன் விசாரித்து வருகின்றனர்.'

கடைசியில் தண்டனை பெறுவது இந்த மூவரில் ஒருவராயிருக்கலாம், அல்லது மூவருமேயாயிருக்கலாம். 'பழியோரிடம், பாவமோரிடம்' என்னும் பழமொழியைப் பொய்க்கக் கூடாதே! பொய்த்து விட்டால் அது அப்புறம் பழமொழியா?

இப்படியெல்லாம் நகரத்தை அழகு பிறக்க வைத்துக் கொண்டிருக்கும் நகரசபை வீட்டு வரி போன்ற வரிகளை விதிக்க மட்டும் தயங்குவதில்லை. கேட்டால், 'அழகு பிறக்கத்தானே வரி விதிக்கிறோம்?' என்பார்கள். இந்த வரி விதிப்பு முறைக்கு ஓர்

ஒழுங்குமுறை உண்டா என்று கேட்டால், அதுவும் கிடையாது. துக்ளக் தர்பார்தான்! யார் யாருக்கு என்ன வரி விதிக்க வேண்டும், எப்படி விதிக்க வேண்டும் என்பது போன்ற இடம், பொருள், ஏவல்களைக் கவனிப்பதில்லை! அதிகாரிகளும் சொந்தக்காரர்களும் கைகுலுக்கிக் கொள்வதைப் பொறுத்தது இந்த வரி விதிப்பு முறை. அப்படியே வசூலிக்கிறார்களே, அந்தப் பணத்தை அந்தந்தக் காரியங்களுக்குச் செம்மையான முறையிலே உபயோகிக்கிறார்களா என்று கேட்டால் கையை விரிக்க வேண்டியதுதான்!

வரி வசூலிப்பவர்களை அப்போதைக்குத் திருப்திப்படுத்தி விட்டால், அந்த வரியைக் கொடுப்பதிலிருந்தே தப்பிவிட்டதாகச் சில வீட்டுச் சொந்தக்காரர்கள் கருதுகிறார்கள்! இந்த மனப்பான்மை நகர மாந்தர்களிடம் ஒழிய வேண்டும். அதே போல நகரசபை அலுவலர்களுக்கும், 'நாமும் இந்த நகர வாசிகள். நகரத்தை நரகமாகாமலிருக்கும் கடமையில் நமக்கும் பங்கு உண்டு' என்ற எண்ணம் ஓங்க வேண்டும். இரண்டு கைகளும் சேர்ந்து கொட்டினால்தானே ஓசை? அவ்வோசை நயம்படஒலிக்கும் நாள் எந்நாளோ?

# சொற்களே, சொற்கள்!

**பை**பிள், 'ஆதியிலே தேவன் இருந்தார்; அவர் வார்த்தையாக இருந்தார்' என்று சொல்லையே கடவுளாகக் கூறுகிறது.

திருக்குறளில் சொல்வன்மை என்ற ஓர் அதிகாரமும், பயனில சொல்லாமை என்ற ஓர் அதிகாரமும் உள்ளன. அவை சொற்களைப் பற்றியே கூறுகின்றன.

சுமார் மூன்று கோடி மக்களால் பேசப்படுகின்ற நம் தமிழ் மொழியில் மட்டும் இரண்டு லட்சத்துக்கும் அதிகமான சொற்கள் உள்ளனவென்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். இச்சொற்களில் பல இடத்துக்கு இடம் உருவில் வேறுபடுகின்றன.

ஒருவன் தன் குழந்தையைக் கடைக்கு அனுப்பி வாழைப்பழம் வாங்கிவரச் சொல்கிறான் என்று வைத்துக் கொள்வோம். அவன் சென்னை — செங்கற்பட்டுப் பகுதியைச் சேர்ந்தவனாயிருந்தால், ''கடக்கிப் போயி வாயப் பயம் வாங்க்யா'' என்பான். அதையே கடலூர் — பாண்டிச்சேரி (தென்னார்க்காடு)க்காரன்: ''கடெ போயி வாழபழம் வாங்கினு வா'' என்பான். அதையே மதுரை இராமநாதபுரத்துக்காரன், ''கடைக்குப் போயிட்டு வாளப்பளம் வாங்கிக்கிட்டு வா'' என்பான். கோவை — சேலத்துக்காரனா யிருந்தால், ''கடாக்கிப்



போ....ஒய் வா.....ஆளப்பளம் வா....ஆங்கிட்டு வா'' ('ஆ', 'ஓ' என்ற இடங்களில் ராகம் இழுத்துப் பேசுவான்.)

'இருக்கிறார்கள்' என்ற சொல் எப்படியெல்லாம் வழங்கப்படுகிறது பாருங்கள்! 'இருக்குறாங்க', 'இருக்குறாக', 'இருக்குதாங்க', 'இருக்கா', 'கிறாங்க'. ஒரே சொல் இடத்துக்கு இடம் எப்படி மாறுகிறது பாருங்கள்!

எங்கள் ஊரில் ஒரு பஜனைக் கூடம் இருந்தது. ஒரு நாள் பஜனையில் ஒரு செல்வர் இராமலிங்க அடிகளின் அருட்பா ஒன்றைப் பாடினார். ''ஒருமையுடன் உனது திரு மலரடி'' என்று தொடங்குகிற பாடலாகும் அது. அதிலே 'பெரு நெறி பிடித்தொழுக வேண்டும்' என்ற ஓர் அடியைப் 'பெரு நரி பிடித்தொழிய வேண்டும்' என்றே பாடினார்.

நரி பிடிப்பதிலும் கூடப் பெரிய நரியாகப் பிடிக்க வேண்டுமாம். அல்லது நரி வந்து இவரைப் பிடித்து ஒழிப்பதாயிருந்தாலும், பெரிய நரியே வந்து பிடித்து ஒழிக்க வேண்டுமாம். என்ன பேராசை!

அண்மையில் ஒரு புத்தகம் படித்தேன். அதில் 'ஒருத்தி' என்று வரவேண்டிய இடங்களிலெல்லாம் 'ஒருவள்' என்றே போட்டிருந்தது. 'அவன்' என்றால் ஆணைக் குறிக்கிறது; 'அவள்' என்றால் பெண்ணைக் குறிக்கிறது. 'அவனு'க்குப் பெண்பால் 'அவள்'. பெரியவன் — பெரியவள், முதியவன் — முதியவள், இளையவன் — இளையவள், நல்லவன் — நல்லவள், தீயவன் — தீயவள் என்று எழுதுகிறோம், பேசுகிறோமல்லவா? அந்த முறைப்படி 'ஒருவன்' என்பதற்குப் பெண்பால் 'ஒருவள்' எனப் போட்டார்கள் போலும்! அப்படியானால் அண்ணன் — அண்ணள், கிழவன் — கிழவள் என்று வழங்கினால் என்ன? சுலபமாக இருக்குமல்லவா?

சொற்களை நாம் காசு கொடுத்து வாங்கப் போவதில்லை. அவை இனாமாகவே உண்டாகின்றன. அப்படியிருப்பினும், அவற்றைக் கூடச் சிக்கனமாகவே உபயோகிக்க வேண்டும் என்று பெரியோர்கள் கூறியிருக்கின்றனர்.

இராம பிரானைப் பற்றி ஒன்று சொல்வார்கள்: 'ஒரு சொல், ஒரு வில், ஒரு இல்' என்று. அதாவது இராமன் ஒரு சொல்லைச் சொல்லி விட்டால் அதிலிருந்து மாறுவதே இல்லை. அவரது வில்லின் மூலம் ஒரு பாணத்தை விட்டாரானால் மறு பாணம் விடவேண்டிய அவசியமே இருப்பதில்லை. அதேபோல் அவர் சீதாதேவி என்ற ஒரு மனைவியையே கொண்டார்; வேறு பெண்களை நாடியதே இல்லை என்பது பொருளாம்.

'பயனில சொல்லாமை' என்ற அதிகாரத்தில் வள்ளுவர், நட்பினர்க்குத் தீங்கு செய்யும் கயவனைக் காட்டிலும் பயனற்ற சொற்களைப் பலரிடத்தும் கூறுபவன் தீயவனாவான் என்றும் நேரிய வழிச் செல்லும் நல்லோர் கூடப் பயனற்ற சொற்களைப் பேசுவரேயாயின், அவரது சிறப்பும் உயர்வும் அவரை விட்டு நீங்கும் என்றும் கூறுகிறார். நானும் பயனற்ற சொற்களை அதிகம் சொல்லாமல் இத்துடன் நிறுத்திவிடுகிறேன்! — **என். ராஜமாணிக்கம்**

# டிவிஎஸ் விநியோகிக்கும் மோட்டார் உறுப்புகள் தரத்தில் சிறந்தவை






டிவிஎஸ் விநியோகிக்கும் மோட்டார் உறுப்புகள் பரிசோதனை செய்யப் பெற்று, தேர்ந்த பிறகுதான் விற்கப் பெறுகின்றன. இதனை பஸ், லாரி மற்றும் கார் சொந்தக்காரர்கள் நன்கு அறிவர். டிவிஎஸ் விநியோகிக்கும் மோட்டார் உறுப்புகளையே வாங்கி உபயோகியுங்கள். அதனால் உங்கள் நடைமுறைச் செலவு குறையும்.

டிவிஎஸ் விநியோகிக்கும்
நம்பகமான மோட்டார் உறுப்புகளில் சில:

| | | | |
|---|---|---|---|
| Canara Springs and Leaves | FERODO Brake Linings | MICO Fuel Injection Parts | BORG & BECK Clutch Spares |
| WIL Commercial Vehicles | GD TVS Air-assisted brakes | TRANCO VALVES | KAP |
| DOUBLE ... PARTS | ROLON Timing Chains | FRITZ Filter Elements | Fenner Fan Belts |
| QHR Tie Rod Ends | Gaskets and Radiators | allite Bulbs | ABC Bearings |
| Finolex Cables | HELLA Horns | NBC Bearings | Sunfit Machined Auto Parts |
| TEX Wiper arms and Blades | SIRUBBER Rubber parts | AP Accurate products | SUNKAST Ferrous and non-ferrous castings |

டி.வி. சுந்தரம் அய்யங்கார் & சன்ஸ் பிரைவேட் லிமிடெட்
மதுரை - திருச்சி - திருநெல்வேலி - புதுக்கோட்டை - சேலம் - கோயமுத்தூர் - திருவனந்தபுரம்

சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட்
மதராஸ் - பெங்களூர் - செகந்திராபாத் (A.P.)

மதராஸ் ஆட்டோ சர்வீஸ் பிரைவேட் லிமிடெட் மதராஸ் - பெங்களூர்

# படிக்கவா, நடிக்கவா?

## ரஸிகன் நாடகங்கள்

சில நாடகங்கள் படிக்கவே முடியாது. நடித்தால் பார்த்து ரஸிக்கலாம். சில படிக்கலாம்; பார்க்கவே முடியாது. ஆனால் படிக்கவும் நடிக்கவும் தகுதியான முறையில் நாடகம் புனையப்பட்டிருப்பது இந்தத் தொகுதியின் தனி விசேஷம்.

வாழ்க்கையைப் பிரதிபலிப்பதுதான் இலக்கியம் என்பார்கள். அப்படிப் பிரதிபலிக்கச் செய்வது உரைநடையாக எழுதிச் செல்லும் சிறுகதையிலும் நாவலிலும் ஓரளவு சாத்தியப்படலாம். ஆனால் நாடகத் துறையில் பல இடையூறுகள். இத்தனை இடையூறுகளையும் கடந்து வாழ்க்கையைப் பிரதிபலிக்கச் செய்வது சிரம சாத்தியமான காரியம். வெற்றிகரமாக ரஸிகன் இடையூறுகளைக் கடந்திருப்பதால்தான் வாசகர்களுக்கு மகிழ்ச்சியூட்டுகிறது இத்தொகுதி.

மனிதனிடம் பல இழிவான பண்புகளும் இருக்கின்றன; சில உயர் பண்புகளும் இருக்கின்றன. காமம், குரோதம், லோபம் போன்றவையும் உண்டு. அன்பு, தியாகம், சுயநலமற்ற தன்மை முதலியவையும் உண்டு. இந்த ஆசிரியர் தமது நாடகங்களில் இந்த இரு பண்புகளையும் யாரையும் திருப்தி செய்யும் வகையில் புனைந்திருக்கிறார்.

ராமுவய்யர் தமது மனைவியின் தமக்கை லட்சுமியம்மாளின் செல்வத்தின் நிழலில் வாழ வேண்டி நேரிடுகிறது. லட்சுமி அம்மாள் இளமையில் யாரோ ஒரு பணக்காரருக்கு இரண்டாம்தாரமாக வாழ்க்கைப்பட்டுச் சிறிது காலத்திலேயே கைம்மையடைகிறாள். அவளைப் பராமரிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்ட ராமுவய்யர், முடிவில் லட்சுமி அம்மாளின் ஆணவத்துக்கும், அதிகாரத்துக்கும் பணிய வேண்டிய நிலைக்கு வந்து சேருகிறார். ராமுவய்யர் மகளான அலமேலுவை மிகக் குரூபியான வரனுக்கு இரண்டாம்தாரமாக லட்சுமி அம்மாள் ஏற்பாடு செய்கிறாள். தான் வாழ்க்கைப்பட்டாற் போலவே தனது சகோதரியின் மகளும் வாழ்க்கைப்பட வேண்டும் என்று ஏற்பாடு செய்கிறாள். பெண்ணைப் பெற்றவள் உள்ளம் இந்த அநீதியை எதிர்க்கிறது. தந்தை ராமுவய்யர் சந்தர்ப்பச் சூழ்நிலை, பொருளாதார நிலை இவற்றின் காரணமாக — உள்ளம் மறுத்தும் — உடன்படுகிறார். மனித உள்ளம் தோல்வி கண்டதை மிக உருக்கமாகச் சித்திரிக்கிறார்.

''பாக பத்திரம்'' என்ற நாடகம் சற்று நீண்ட நாடகம். காரைக்குளம் நீலகண்டய்யர் ஒரு சிறு மிராசுதார். அவர் தம்பி சீதாராமனுடன் அன்யோன்யமாகத்தான் குடித்தனம் நடத்தி வந்தார். அந்த ஒற்றுமையை அவர் சகோதரி லட்சுமி அம்மாளே குலைத்து, இல்லாததும் பொல்லாததும் கூறி, பாகப் பிரிவினையை ஏற்படுத்துகிறாள். நீலகண்டய்யர் மனைவி காமாட்சி அப்படியொன்றும் அடிமுதலே உயர்ந்த சிந்தனையோ, பெரும் போக்கோ உடையவள் அல்லதான். இருந்தாலும் கொழுந்தன் (கணவனின் தம்பி) கஷ்டத்துக்குள்ளாகி ஜெயில் வாரண்டுடன் நிற்கிறான் என்றபோது மனிதப் பண்பின் உயர்ந்த அம்சத்தைப் பட்டை தீட்டிய வைரம்போல் ஜொலிக்க விட்டிருக்கிறார் ஆசிரியர். இந்தக் காமாட்சி என்ற பாத்திரத்தை ஆரம்பமுதல் மிக லாகவமாகப் புனைந்து வந்திருக்கும் சீர்த்தியைப் பாராட்டாமல் இருக்க முடியாது.

மொத்தத்தில் இந்த நாடகங்களைப் படிக்கும்போது தஞ்சை மண்ணின் மணம் வீசப் படம் பிடித்துக் காட்டுகிறார். ஒரு பாத்திரமாகிலும் உண்மைக்குப் புறம்பாக இல்லை. சில சமயம் படிக்கும்போது மனசில் வேதனை கூட எழலாம். அதுவே நம்மை உயர்த்துவதற்கு ஔஷதமாகவும் வேலை செய்யலாம் அல்லவா?

'ஹிந்து'ப் பத்திரிகையின் முன்னாள் பிரதான ஆசிரியராக விளங்கிய ஸ்ரீ நா. ரகுநாதன் அவர்கள் இருபதாண்டுகளுக்கு முன் 'ரஸிகன்' என்ற புனை பெயரில் எழுதி வந்த நாடகங்கள் ஆறும் இவை. தமிழ்த் தாய்க்குச் சீரிய பணி புரிந்துவிட்டார் ரஸிகன் என்பதில் ஐயமில்லை.

கிடைக்குமிடம்: விக்னேசுவரா பதிப்பகம், 49, டி. எஸ். வி. கோயில் தெரு, மயிலாப்பூர், சென்னை — 4 அல்லது ஹிக்கின்பாதம்ஸ், சென்னை—2; விலை ரூ. 1.50.

## கம்பராமாயண விரிவுரை

உலக மகா காவியங்களுக்குள் ராமாயணத்துக்குத் தனி இடம் உண்டு. எந்த மொழியில் எழுதப்பட்டிருந்தாலும் ராமாயணத்தின் சுவை குன்றாது. அதே போல் ராமாயணத்தை யார் எந்த மொழியில் பிரவசனம் செய்தாலும் நன்றாயிருக்கும். ஆதிகாவியமான வால்மீகி ராமாயணத்தை முதல் நூலாகக் கொண்டு பல மொழிகளில் ராமாயணம் வெளி வந்திருக்கிறது. அவைகளுள் கம்பராமாயணம் சாலச் சிறந்தது.

தமிழ் கூறும் நல்லுலகம் முழுதும் கம்பன் கவியமுதை விரித்துரைக்கும் நற்பணியில் ஈடுபட்டிருக்கும் புலவர்கள் பலர் இருக்கின்றனர். அவர்களுள் திருமுருக கிருபானந்தவாரியார் மிகவும் பிரசித்தமானவர். பக்திச் சுவை ததும்பும் காவியங்கள், இதிகாசங்கள், புராணங்கள் ஆகியவற்றை ஊரூராகச் சென்று அயராது பரப்பும் அரும் பணியை மேற்கொண்டு அருந்தொண்டாற்றி வரும் வாரியார் அவர்களுக்கு இணை வாரியாரவர்கள்தான் என்றால் மிகையாகாது. அமிழ்தினும் இனிய தமிழ் மொழியின் இன்சுவையும் ஆதி காவியத்தின் அரும் சுவையும்

இறை புகழ் என்னும் இன்பச் சுவையுமாக வாரியார் அவர்கள் தமது விரிவுரையின் மூலம் பல்சுவையையும் தமிழ்ப் பெரு மக்களுக்கு வாரி வழங்கியிருக்கிறார்கள்.

இன்ப வாரிதியாகப் பெருகிப் பாயும் இவ் விரிவுரை நூல்களில் கம்பன் கவியமுதின் சுவை முழுவதையும் நுகர முடிகிறது. முக்கியமான கம்பராமாயணக் கவிதைகளையும் ஆங்காங்கு எடுத்தாண்டு வாரியாரவர்கள் தம் பணியைச் சிறப்பாகச் செய்திருக்கிறார்கள். அவருடைய வாக்கிலேயே இந்நூல் முழுவதும் அமைந்திருப்பது ஒரு தனிச் சிறப்பு. இடையிடையே உரையாடல்கள், விளக்கங்கள், வர்ணனைகள் ஆகியவற்றுடன், கம்பன் கவிதைகளும் விரவி வருவதால் அவற்றின் பொருள் தெளிவாக விளங்கி விடுகின்றன.

இந்நூலின் இன்னொரு சிறப்பு என்னவென்றால் ராமாயணக் கதை முழுவதும் உட்சரடாக உள்ளூற ஓடுகிறது. கம்ப ராமாயணத்தில் முக்கியமாக நாம் தெரிந்துகொள்ள வேண்டிய பகுதிகளெல்லாம் விரிவாகவே அமைந்திருக்கின்றன. எல்லாவற்றுக்கும் மேலாக வாரியாரவர்களின் இணையற்ற சொல்லாற்றலைக் குறிப்பிட வேண்டும். அவர்களுடைய விரிவுரையை நேரில் கேட்பது போலவே தோன்றும்வண்ணம் தொகுத்துத் தந்து உதவிய திரு வி. என். சாமி அவர்கள் பாராட்டுக்கு உரியவர்.

பிரசுரம்: கார்த்திகேயன் பப்ளிகேஷன்ஸ், 5-28சி, மலையப்பன் தெரு, சென்னை—1; விலை: இரண்டு வால்யூம்களும் தனித் தனி ரூ. 3.00.

## ஸ்ரீதியாகராஜ வேங்கடரமண சரித்திரம்

சீர் நாடக இசை உலகுக்கு முடிமணியெனத் திகழும் ஸ்ரீ தியாகப் பிரும்மத்தை அறியாதவர்கள் யாரும் இருக்க மாட்டார்கள். அம் மகாபுருஷர் அவதரித்துச் சிறப்பூட்டிய இடம் திருவாரூர். இசையினால் ஸ்ரீ ராமபிரானை வழிபட்டு அந்தப் பேரின்ப நிலையில் இருபத்து நாலாயிரம் கிர்த்தனங்களை இயற்றி இசைக் கருவூலமாக வைத்த பெருமை அவரையே சாரும். அவருடைய வாழ்க்கை வரலாறு இதுகாறும் பல மொழிகளில் பலரால் எழுதப்பட்டு வெளிவந்திருக்கிறது.

ஆனால் இந்நூலில் ஒரு விசேஷம். ஸ்ரீ தியாகராஜரின் இசையமுதைச் சுவைத்து மகிழ்வதற்கென்றே நெடுந்தூர தேசங்களிலிருந்தெல்லாம் கால்நடையாகவே வந்து நாளடைவில் அவர்களுக்குச் சீடர்களானவர்களும் உண்டு. அவர்களுள் வாலாஜாபேட்டை வேங்கடரமண பாகவதரும் ஒருவர். அவர் பிற்காலத்தில் பிரதம சீடராக விளங்கினார். தமது குருநாதரின் தெய்விகக் கீர்த்தனங்களைப் பாடிப் பாடிப் பரப்புவதையே வாழ்வின் லட்சியமாகக் கொண்டு அவர் இசையுலகுக்கு இணையற்ற சேவை செய்தார். அந்த பக்த மணியின் சரித்திரத்தையும் சேர்த்து இத்துடன் வெளியிடப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸருக்கு ஸ்ரீ ஸ்வாமி விவேகானந்தர் அமைந்தது போல் ஸ்ரீ தியாகப்பிரும்மத்துக்கு வாலாஜாபேட்டை வேங்கடரமண பாகவதர் அமைந்தார். குரு, சிஷ்யர் இருவருடைய சரித்திரங்களையும் சேர்த்துச் சுவையான பல தகவல்களுடனும் புதிய விவரங்களுடனும், நுணுக்கமான ஆராய்ச்சிக் கருத்துக்களுடனும் வெளியிட்டிருப்பது பாராட்டுக் குரியது. ஸ்ரீ தியாகப் பிருமத்தின் பக்தர்களுக்கு இந்நூல் பெரிதும் மகிழ்ச்சி யளிப்பதாகும்.

எழுதியவர்: கே. ஆர். சேதுராமன் பி.எஸ்ஸி., வெளியிட்டோர்: ஆல் இண்டியா பப்ளிகேஷன், 9, பி. எச். லேன், ராமநாதபுரம் ரோடு, மதுரை—9; விலை: ரூ. 2.50.

## செய்தி (சங்கரதாஸ் சுவாமிகள் நினைவுமலர்)

தமிழ் நாடகக் கலைக்கு இணையற்ற தொண்டாற்றிய சங்கரதாஸ் ஸ்வாமிகளை நாடக உலகம் நன்கறியும். அவர் ஆரம்பித்து நடத்திய பல நாடகக் குழுக்களின் மூலமாகப் பயிற்சி பெற்றுப் புகழ்பெற்ற நடிகர்கள் எத்தனையோ பேர்கள். குறிப்பாகச் சொல்ல வேண்டுமானால் எஸ். ஜி. கிட்டப்பா, மதுரை இசைப் புலவர் மாரியப்ப சுவாமிகள், நவாப் டி. எஸ். ராஜமாணிக்கம், கே. சாரங்கபாணி, எம். ஆர். ராதா, டி. கே. எஸ். சகோதரர்கள் முதலானவர்களைக் கூறலாம்.

ஸ்ரீ சங்கரதாஸ் சுவாமிகள் ஒரு நாடகாசிரியர்; சிறந்த நடிகர்; நல்லிசைப் புலவர். அவரே மேடையில் தோன்றி, பாடி, நடித்து, அரும் பெரும் சாதனைகளைப் புரிந்தவர்.

இலங்கை, கண்டியிலிருந்து வெளிவரும் "செய்தி" என்னும் தமிழ் வாரப் பத்திரிகை ஸ்ரீ சுவாமிகளின் நினைவு நாளையொட்டி ஒரு நினைவு மலர் வெளியிட்டிருக்கிறது. அவ்வை டி.கே. சண்முகம், டாக்டர் மு. வரதராசனார், பழம்பெரும் நடிகை எஸ். டி. சுப்புலக்ஷ்மி ஆகியவர்கள் இவ்விசேஷ இதழில் எழுதியிருக்கின்றனர். என். எஸ். கிருஷ்ணனின் கட்டுரை ஸ்ரீ சுவாமிகளின் பெருமையை நன்கு நவில்கிறது.

வெளியிடுவோர்: "செய்தி" பப்ளிகேஷன் லிமிடெட், 241, ஸ்ரீமத் பௌட் சொய்ஸா வீதி, கண்டி, இலங்கை.



"அமெரிக்கா, ஆப்பிரிக்கா, ரஷ்யா, சைனா, ஜப்பான், பர்மா, இலங்கை, போலந்து, தாய்லாந்து, நார்வே, ஸ்விடன் எல்லா நாடுகளுக்கும் இவருடைய நண்பர் சுற்றுப்பயணம் செய்துவிட்டு வந்திருக்கார்ன்னு, என் போட்டோவைப் போட்டு உங்க பத்திரிகையிலே நாலு வார்த்தை எழுதுங்களேன்!"





## உரிமைகள் பலவிதம்!

ஒவ்வொரு நாட்டிலும் மக்களுக்குக் கிடைக்கக் கூடிய உரிமைகள் பலவிதம். ஆனால் இப்படிச் சில உரிமைகள் இருப்பது உங்களுக்குத் தெரியுமோ என்னவோ?

அர்ஜெண்டினாவில் பஸ்ஸுக்காகக் காத்திருக்கும் 'கியூ'வில் கர்ப்பம் தரித்துள்ள பெண் கடைசியாக வந்தாலும் முன்னால் போய் நின்று கொள்ளலாம்.

ஃ ஃ ஃ

ஜெர்மனியில் பிராங்க்போர்ட் என்ற இடத்தில் ஒரு பூங்கா இருக்கிறது. சிறு புதர்கள், மணல் நிரப்பிய குழிகள், நீர்



தேங்கிய சிறு தீவுகள், இவற்றோடு விளங்கும் அதில் நாய்களை அழைத்துக்கொண்டு வருபவர்கள் மட்டுமே உள்ளே வரலாம்.

ஃ ஃ ஃ

கிரீஸைச் சேர்ந்த 'நெப்ட்யூனியா' என்ற கப்பலில் பிறந்த ஒரு பெண் குழந்தைக்கு அந்தப் பெயரையே வைத்திருக்கிறார்கள். அந்தப் பெண் தன் ஆயுட்காலம் முழுவதும் எந்தக் கிரேக்கநாட்டுக் கப்பலிலும் கட்டணம் இன்றிப் பிரயாணம் செய்யலாம்.

ஃ ஃ ஃ

சிரியாவில் மூன்று அல்லது அதற்கு மேற்பட்ட குழந்தைகள் உள்ள தாய்மார்கள் ரயிலில் டிக்கட் இல்லாமல் பிரயாணம் செய்யலாம்.

ஃ ஃ ஃ

முன்னாள் ஜனாதிபதி ஐஸன்ஹோவருக்குப் பிரிட்டிஷ் அரசு 'ஸர்' பட்டம் வழங்கியிருக்கிறது. அவர் விரும்பினால் தம் கொடியைப் புகழ் பெற்ற வெஸ்ட்மின்ஸ்டர் கட்டிடத்தில் பறக்க விடலாம்.

ஆதாரம்: 'காரனெட்'
தொகுப்பு: எஸ்.எல்.எஸ்.



ஒரு தீவிர ஜனநாயகவாதி: ருஷ்யர்கள் முதன் முதலாக மோட்டார் காரைக் கண்டு பிடித்திருக்கலாம். ஆனால் அதை ஓட்ட அவர்களுக்கு அமெரிக்கர்கள்தான் கற்றுக் கொடுத்தார்கள்!

## பேராசையும் பேராபத்தும்



ஒரு வங்கியில் இருந்த பணப் பெட்டியைத் திருட ஒருவன் ஓர் இரவு சென்றான். 'இந்த அழகான பெட்டியை உடைக்க வேண்டாம். இது பூட்டப்படவில்லை. கைப்பிடியைத் திருப்பினாலே போதும்' என்று அப்பெட்டியின் மீது எழுதியிருந்ததை அவன் பார்த்தான். உடனே அவன் கைப்பிடியைத் திருப்பினான். மணி அடித்தது; விளக்குகள் எரிந்தன. அவன்மீது ஒரு பெரிய மணல் மூட்டை விழுந்து அழுத்திவிட்டது. - தங்க சங்கர பாண்டியன்

## ஒரே ஒரு நிமிடம்

"ஒரே ஒரு நிமிடம் பொறுத்துக் கொள்ளுங்கள். இதோ வந்து விட்டேன்" என்று காத்திருக்கும் கணவனிடம் அன்பு மனைவி கூறுவதைக் கேட்டிருக்கிறோம். ஆனால் இந்த ஒரு நிமிடத்தில் எத்தனை காரியங்கள் நடைபெறுகின்றன என்பதைப் புள்ளி விவர அதிகாரிகள் கணக்கிட்டிருக்கிறார்கள்.

ஒரு நிமிட நேரத்தில் 6000 விண் கற்கள் பூமியை நோக்கிப் பாய்கின்றன.

பூமி தன்னைத் தானே சுற்றிக் கொள்வதில் 950 மைல் தூரம் கடந்திருக்கும்.

சுமார் 38 புயல்கள் உருவாகியிருக்கும். 14,000 கனஅடி மழை உலகின் பல பாகங்களில் பெய்திருக்கும்; நதிகள் அந்த ஒரு நிமிட நேரத்தில் 35,000 டன் தண்ணீரையும் வண்டலையும் கடலில் கொண்டு போய்ச் சேர்த்திருக்கும்.

ஒரு நிமிடத்தில் உலகத்தில் 100 பேர் மாண்டிருப்பார்கள். 114 குழந்தைகள் பிறந்திருக்கும். 34 திருமணங்கள் நடைபெற்றிருக்கும். மூன்று தம்பதிகள் விவாகரத்து செய்து கொண்டிருப்பார்கள்.

ஒரு நிமிடத்தில் உலகம் முழுவதிலும் 2,80,000 டெலிபோன் அழைப்புக்கள் கேட்டிருக்கும்.

60 லட்சம் சிகரெட்டுகள் புகைக்கப்பட்டிருக்கும். மற்றும் 63,800 காலன் மது மனிதர்களால் குடிக்கப்பட்டிருக்கும். 4000 டன் உணவுப் பொருட்கள் உண்ணப்பட்டிருக்கும்.

மற்றும் ஒரு நிமிடத்தில் 300 டன் நிலக்கரி; 700 டன் இரும்பு வெட்டி எடுக்கப்பட்டிருக்கும்.

தொகுப்பு: மு. க. தியாகராசன்



## கண்டான்!

நமது உடலில் உள்ள உறுப்புக்களில் கண் மட்டுமே ஆபரணங்கள் எதும் அணியாமல், ஆபரணங்கள் அணிந்த மற்ற உறுப்புக்களைவிட அழகாகக் காட்சி யளிக்கிறது: அத்துடன் எந்த உறுப்புக்கு வலியெடுத்தாலும் கண் அழுகிறது; மற்ற உறுப்புக்கள் எதற்கும் கண்ணீர் விடும் சக்தியில்லை.

கண்ணுக்கு எவ்வளவு சிறப்போ, அவ்வளவு சிறப்பு 'கண்' என்ற பெயர்ச் சொல்லுக்கும் உண்டு. இதைப் பகுதியாக வைத்தே கண்டான் என்ற வினைச் சொல் தோன்றியிருக்கிறது. வேறு எந்த உடல் உறுப்புக்களின் பெயர்ச் சொல்லுக்கும் இந்தச் சிறப்பு இல்லை. எங்கே சொல்லிப் பாருங்கள்: காதுடான், மூக்குடான், வாய்டான், கைடான், கால்டான்; உம்ஹூம்! வரவே வராது.

(இவ்வாறு கண்ணின் சிறப்புக்களைச் சொன்னவர் தமிழறிஞர் கி. ஆ. பெ. விசுவநாதம்)

தகவல்: வீர. சுப்பிரமணியம்

## குறும்புக்காரர் வேலை



இரண்டாவது உலகப் போரின்போது நடைபெற்ற சம்பவம் இது:

பிரிட்டிஷ் ராணுவ முகாம் ஒன்றில் 'மெஸ்' பிரிவில் வேலை பார்த்து வந்த ஓர் ஆசாமிக்குப் 'பிராக்டிகல் ஜோக்' ஏதாவது செய்ய வேண்டும் என்று ஓர் ஆசை தோன்றியது. முகாம்களில் ஈ, கொசுக்கள் தொல்லை இருக்கக் கூடாதென்பதற்காக எண்ணெய்க் காகிதம் என்ற பெயர் கொண்ட பசை தடவிய காகிதங்கள் கொடுப்பது வழக்கம். கொசுக்கள் அந்தக் காகிதங்களில் சிக்கி மடிவது சகஜம். இதை வைத்துக் கொண்டே தமாஷ் செய்ய முனைந்தார் அந்த ஆசாமி.

'இந்த வாரத்தில் எண்ணெய்க் காகிதங்களின் உதவியால் சாகடிக்கப்பட்ட ஈக்களின் எண்ணிக்கை: 630; கொசுக்களின் எண்ணிக்கை: 1280' என்று வாரந்தோறும் 'எண்ணெய்க் காகித ரிப்போர்ட்' என்ற ஒன்றைத் தலைமையகத்துக்கு அனுப்பி வைக்க ஆரம்பித்தார்.

அந்த 'ரிப்போர்ட்டு'கள் குவியக் குவிய, மற்ற முகாம்களுக்குப் பிடித்தது சனியன். 'உங்கள் எண்ணெய்க் காகித ரிப்போர்ட்டை உடனடியாகத் தலைமையகத்துக்கு அனுப்பி வைக்கவும்' என்று மற்ற முகாம்களுக்குத் தலைமையகத்திலிருந்து தாக்கீதுகள் வந்து குவிந்தன. அவர்களுக்கோ விஷயம் என்னவென்றே புரியவில்லை. 'எண்ணெயாவது, காகிதமாவது, ரிப்போர்ட்டாவது? என்ன இது புதிதாக இருக்கிறதே!' என்று வியந்தார்கள். 'அப்படி ஒன்று இருப்பதே எங்களுக்குத் தெரியாதே!' என்று அவர்கள் தெரிவித்த பிறகுதான் தலைமையகம் விழித்துக் கொண்டு விசாரணை நடத்தியது. அப்புறம்தான் எல்லாமே ஒரு குறும்புக்காரரின் வேலை என்று தெரிய வந்தது. —எஸ். வி.

## ஆமை நிதானம்!

நாமெல்லாம் நூறு ஆண்டுகள் வாழ்ந்த வரைப் போற்றுகிறோம். ஆனால் எதிலும் நிதானம் என்று பெயர் பெற்ற ஆமை உயிர் துறப்பதிலும் நிதானம் காட்டுகிறது.

அதன் ஆயுட்காலம் 300 முதல் 400 ஆண்டுகள் வரை! யானைகளை நன்றாகப் பராமரித்தால் சாதாரணமாக நூறு ஆண்டுகள் வாழும். முதலைகளை அவை இஷ்டப்படி விட்டால் முந்நூறு ஆண்டுகள்வரை வாழும். கழுகுகளும் 200 ஆண்டுகள் வரை வாழ்கின்றன. திமிங்கிலங்களின் ஆயுட்காலம் நம்மை அயர வைக்கும்! ஆம், அவை ஐந்நூறு முதல் ஆயிரம் ஆண்டுகள்வரை ஜீவிக்குமாம்!

— ஆர். ஜெயராமன்



## ராங் நம்பர்!

கோர்ட்டு ஆரம்பிப்பதற்கு முன்னர் நீதிபதி கேட்டார்: நீங்கள் ஏன் ஜூரராக இருக்க முடியாது என்கிறீர்கள்?

ஜூரராக இருக்க மறுத்தவர் (கூட்டிக் காண்பித்துக் கொண்டே): அவன் முகத்தைப் பார்த்தாலே குற்றவாளி என்று எழுதி ஒட்டியிருப்பது போலிருக்கிறது! முதலிலேயே இப்படித் தோன்றி விட்டால் பட்சபாதமில்லாமல் ஒரு தீர்ப்புக்கு நான் எப்படி வர முடியும்?

நீதிபதி (பரபரப்புடன்): நீங்கள் சுட்டிக் காண்பித்துக் கொண்டிருப்பது குற்றவாளியல்ல! அவர்தான் எதிர்க்கட்சி வக்கீல்! — துராப்





## பொன் மொழிகள்

வாழ்க்கையில் உயர இரு வழிகள் உண்டு. ஒன்று, உயரே ஏறிச் செல்லுதல், மற்றொன்று சுற்றிலும் குழிபறித்தல்.

ஃ ஃ ஃ

எனக்குக் காலணிகள் இல்லையே என்று நான் வருத்தப்பட்டுக் கொண்டிருந்தேன், கால்கள் இல்லாத ஒருவனைப் பார்க்கும் வரை.

## சொல்லும், செயலும்

இன்றைய அரசியலில் காங்கிரஸ்காரர்கள் நடந்துகொள்கிற விதத்தை விளக்குவது போன்று நிகழ்ந்த ஒரு சம்பவம்:

1965 டிசம்பர் 5ந் தேதியன்று மீரத் ஜில்லாவில் காங்கிரஸ் அக்ராசனருடைய திரு காமராஜ் அவர்களைக் கௌரவிக்கும் பொருட்டுப் பொது விழாக்கள் பல நிகழ்ந்தன.

ஓரிடத்தில் காமராஜ் அங்குள்ள மக்களிடம் உணவு தானியங்களைக் குறைந்த அளவில் உட்கொள்ளுமாறு வேண்டுகோள் விடுத்த ஐந்து நிமிடங்களுக்குப் பின்னர், ஆயிரக் கணக்கான காங்கிரஸ் ஊழியர்கள் பெரிய விருந்தொன்றில் கலந்து கொண்டனர். பிறகு வேறொரு பொதுக் கூட்டத்தில் காமராஜ் சிக்கனத்தைக் கடைப்பிடிப்பதன் அவசியத்தைப் பற்றிக் கூறிக் கொண்டிருக்கையில், ஜில்லா காங்கிரஸ் கமிட்டி, ஜில்லா பரிஷத், முனிசிபல் போர்டு ஆகிய நிறுவனங்கள் காமராஜை வரவேற்பதற்காக அச்சிட்டிருந்த சுவரொட்டி அளவுள்ள பெரிய வரவேற்பிதழ்களை ஆயிரக் கணக்கில் அங்கிருந்த கூட்டத்தினரிடையே காங்கிரஸ் ஊழியர்கள் விநியோகித்துக் கொண்டிருந்தனர். பெரும்பாலான காங்கிரஸ் ஊழியர்கள் அவ்வரவேற்பிதழ்களைக் கீழே போட்டு அதன் மேல் உட்கார்ந்து கொண்டனர்.

ஆதாரம்: 'ஹிந்து' நாளிதழ்
தகவல்: சந்தானம்

## வேண்டாம், புகைப்படம்!

மறைந்த தலைவர்களின் பாலியப் பருவத்திலிருந்து எடுத்த புகைப்படங்களையெல்லாம் பிரசுரிப்பது வழக்கம். ஆனால் ஸ்ரீ லால் பகதூரின் வறிய குடும்பத்தில் அவரை யார் புகைப்படம் எடுத்தார்கள்?

அப்புறம் பெருந்தலைவரான பின்னர் புகைப்படக்காரர்களின் சேனை அவரை அனுதினமும் சூழ்ந்துதான் வந்தது. எனினும் இப்போதுகூட அவர் புகைப்படங்களைக் கூடிய மட்டில் தவிர்த்தார். ஒரு காரணம்: அடக்கம்; இன்னொரு காரணம்: தாம் மிகவும் உயரக் குறைவு என்ற உணர்வு. ஸ்ரீ கால்பிரெய்த் போன்ற 'உயர்ந்த' மனிதர்களுடன் தாம் புகைப்படம் எடுக்கப்படுவதை அவர் மிகவும் தவிர்ப்பாராம்; எடுத்துவிட்டால் தவிப்பாராம்!

அது எப்படியானால் என்ன? 'மூர்த்தி சிறிதானாலும் கீர்த்தி பெரிது' என்ற வாசகத்துக்கு இன்று முற்றிலும் இலக்கணமாகி விட்டவரன்றோ ஸ்ரீ லால்பகதூர்?

## பழைய கடன்

நெப்போலியன் போனபார்ட் மிகவும் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவன். ஆயினும் தன் வீரத்தாலும் முயற்சியாலும், உழைப்பாலும் பிரெஞ்சு தேசத்தின் தலைவனாகி விட்டான். அதன் பின்னர் சிறு பிராயத்தில் தான் கல்வி கற்ற இடத்துக்கு ஒரு நாள் போனான். ஒரு குடிசையின் முன்னே தன்னந் தனியாக நின்ற அவன் குடிசையின் உள்ளே இருந்த கிழவியைப் "பாட்டி, பாட்டி!" என்று அழைத்தான். கிழவி வெளியே வந்தாள்.

"பாட்டி, ரொம்ப நாட்களுக்குமுன்னே இங்கே போனபார்ட் என்ற ஒரு பையன் படித்துக் கொண்டிருந்தானே, உனக்கு நினைவிருக்கிறதா?" என்று கேட்டான்.

"ஓ! நன்றாக நினைவிருக்கிறதே! அவன் மிகவும் நல்ல பையன்..." என்றாள் கிழவி.

"அவன் உன்னிடமிருந்து அடிக்கடி பழம், பிட்டாய், ரொட்டி முதலிய தின்பண்டங்களை வாங்கிச் செல்வானே? அதற்கெல்லாம் கொடுக்க வேண்டிய பணத்தைக் கொடுத்து விட்டானா?" என்று கேட்டான் நெப்போலியன்.

"அவனா? அவன் கடன் வைக்கிற பையன் அல்லவே! தனது நண்பர்களிடம் பணம் இல்லாவிட்டால் தன்னிடம் உள்ள பணத்தைக் கொடுப்பானே அவன்!"

"நீ தொண்டு கிழவியாய் விட்டாய். அதனால் உனக்கு எல்லாக் கணக்கும் நினைவிராது. ஆனால் உன்னிடம் வாங்கித் தின்றவன் தன் கணக்கை மறக்கவில்லை. அந்தப் பையன் உனக்குக் கொஞ்சம் பணம் இன்னும் தர வேண்டியிருக்கிறது. அதைக் கொடுப்பதற்காக இப்பொழுது வந்திருக்கிறேன். இதோ இந்தப் பையில் உள்ள பணத்தை எடுத்துக் கொள்!" என்று கூறிப் பணப் பையைக் கிழவியிடம் கொடுத்துவிட்டுச் சென்றான்.



## அத்தியாயம் 19

# அவள் யார்?



# காலச்சக்கரம்

கி. ராஜேந்திரன்

குடியரசு தினத்தை முன்னிட்டுக் கோலாகலமான முறையில் வண்ண விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டிருந்த ராஷ்டிரபதி பவன் தோட்டத்தில் அன்று மாலை கூடியிருந்தவர், பல ரகத்தவர், பல தேசத்தவர். அங்கே ஆப்பிரிக்க பாணியில் கண்ணைப் பறிக்கும் வர்ணங்களில் தொளதொளவென்று ஆடையும் தலையை இறுக்கமாகப் பிடிக்கும் தொப்பியும் அணிந்து வந்திருந்த நீக்ரோக்கள் பலர். ஜப்பானிய பிரதிநிதி, அமெரிக்க பாணியில் ஸூட் அணிந்திருந்தாலும் அவர் மனைவியும் மகளும் தங்கள் தேசத்துக்கே உரிய, நூதனமானதும், அழகும் அடக்கமும் நிரம்பியதுமான ஆடையை உடுத்தியிருந்தனர். இடுப்பை வளைத்துக் குனிந்து வணக்கம் செலுத்துவதன் மூலமே சந்திப்போரையெல்லாம் கவர்ந்துவிடும் தன்மையோடு பேச்சிலும் நிதானமும் திறமையும் காட்டினார்கள். இப்படியே அங்கு, உலகின் பல பாகங்களிலிருந்து வந்த பல நாட்டுப் பிரதிநிதிகளும் அவர்களின் உதவியாளர்களும் குடும்பத்தினரும் ஒன்று கூடி அளவளாவிக் கொண்டிருந்தனர். பிரச்னைகளைத் தாற்காலிகமாக மறக்க முயன்றவர் சிலர்; மனம் விட்டு விவாதித்துத் தகராறுகளைத் தீர்த்துக் கொள்ள முற்பட்டவர் சிலர், இவர்களுக்கிடையில் பாரத நாட்டின் தலைநகரில் வாழும் இந்தியச் சீமான்களும் சீமாட்டிகளும், அரசியல் தலைவர்களும் தலைவிகளும், அதிகாரத்தில் உள்ளோரும் அதற்கு ஆசைப்படுவோரும், வெற்றிக் களிப்பில் மிதப்போரும் விட்டுக் கொடாமல் போராடுவோரும் உலவி வந்தனர். தொடக்கத்தில் சுவாரஸ்யமின்றி 'கடனே' என்பது போல் அனைவரும் பங்கெடுத்துக் கொண்ட 'பார்ட்டி' நேரமாக ஆக— 'வெய்ட்டர்'கள் தட்டுகளில் ஏந்தி வந்த மதுக் கோப்பைகள் காலியாக ஆக— சூடேறியது, கலகலப்பு மிகுந்தது. உரக்கப் பேசுவோரும் மனம் விட்டுச் சிரிப்போரும் படிப்படியாக எண்ணிக்கையில் அதிகமானார்கள்.

விளக்குகள் ஏற்றப்பட்ட அதே கணத்தில் உஷாவைக் கண்ட தங்கப்பன், ஒளி அருவியில் குளிப்பாட்டப் பெற்று நின்ற அவளைப் பல விநாடிகளுக்குப் பிரமிப்புடன் பார்த்துக் கொண்டேயிருந்தான்.

"அதிசயம் காத்திருக்கிறது என்று நான் சொன்னது நிஜம்தானே? உங்கள் கண்விழிகள் அப்படியே நிலைகுத்தி நிற்கின்றனவே" என்று மிருணாளினி வேடிக்கையாகக் கூறியதுகூட அவன் காதில் விழவில்லை.

மிருணாளினியைப் போல் உஷாவும் வெகுவாக மாறித்தான் விட்டிருந்தாள். ஆனால் இருவருக்கும் இடையில் ஒரு வித்தியாசம். மிருணாளினி தன்னைப் பிறர் கவனத்திலிருந்து மறைத்துக் கொள்ள மாறினாள்; உஷா பிறர் கவனத்தைத் தன்னிடம் ஈர்க்கவென்றே மாறியிருந்தாள்.

அளவாகத் தைக்கப்பட்டு அவள் நெஞ்சைக் கவ்வியிருந்த கையில்லாத ரவிக்கையும் உடலை நெருக்கமாகச் சுற்றி வளைத்த மெல்லிய டெரிலீன் சேலையும் பார்ப்பவரைக் கிறங்க வைத்தன. முழங்கால் வரை நீண்டு புரண்ட உஷாவுடைய பட்டுப் போன்ற, அடர்ந்த கேசத்தின் ஒரு சிறு பகுதியைத்தான் இப்போது காண முடிந்தது. நவநாகரிகத்தைக் கருதி அதைக் கழுத்தோடு ஒட்டக் கத்தரித்து விட்டிருந்த போதிலும் தில்லியில் உள்ள பிரசித்தி பெற்ற அழகு நிபுணரின் துணையுடன் அவள் தன் கேசத்தை அலங்கரித்துக் கொண்டிருந்த விதமும் ஓர் அற்புதமாகத்தானிருந்தது. செக்கச் சிவந்த அந்தச் செம்பருத்தி மலர் ஒன்றை மட்டும் உஷா தானாகவே அந்தக் கேச

அலங்காரத்தில் சேர்த்துக் கொண்டிருக்க வேண்டும். ஆனாலும் இருள்களுமாய்க் கேசக் கருமையினிடையே அது தனித்து நின்று கவர்ச்சி காட்டியது. அத்துடன் இணை சேர்கிற மாதிரியாக அவள் தன் உதடுகளுக்கும் நகங்களுக்கும் அதே நிறத்தில் சாயம் ஏற்றியிருந்தாள். குதிகால் உயர்ந்த ஒரு ஜதை 'ஷூஸ்' அவளை உயரமாகவும் எடுப்பாகவும் தோன்றச் செய்தன.

தங்கப்பனை அவள் கவனித்த அதே சமயத்தில் ஐரோப்பியன் ஒருவனுடைய பார்வையும் அவள் மீது விழுந்ததைத் தங்கப்பன் அறிந்தான்; உஷாவும் உணர்ந்தாள். தன் கரத்திலிருந்த மதுக் கோப்பையை அந்த ஐரோப்பியனை நோக்கி நீட்டியவாறே புன்னகையுடன் 'சியர்ஸ்' என்று கூறி உற்சாகப்படுத்தினாள். அவனும் அவளிருந்த பக்கமாக விரைந்து வந்தான். பஞ்சின் மென்மை பெற்ற பளிங்கு போல் விளங்கிய அவளது கைகள் இரண்டையும் தோள்களுக்கருகே பற்றியவாறே தனக்கெதிரே அவளை எத்தனை தொலைவில் நிறுத்த முடியுமோ அவ்வளவு தூரத்தில் நிறுத்தி, அவள் எழில் மீதும் அலங்காரத்தின் மீதும் தன் பார்வையை ஓடவிட்டுச் சில விநாடிகளுக்கு ஆராய்ந்தான். 'வௌவ்!' என்று நாய் உறுமுவது போல் குரல் எழுப்பிய பிறகு, ''யூ லுக் ஸ்மாஷிங்'' என்றான்.

''பிரெஞ்சு தூதரகத்தைச் சேர்ந்தவன்'' என்று ஏதோ பொருள் பொதிந்த வார்த்தைகளைச் சொல்வது போல் தங்கப்பனின் காதருகே முணுமுணுத்தாள் மிருணாளினி.

உஷா தன்னை அலட்சியப்படுத்துவதுபோல் அந்த ஐரோப்பியன் பக்கம் திரும்பியதற்கு ராஜரீக நோக்கமும் பண்பும் காரணமாயிருக்கலாம். என்று தங்கப்பன் தன்னைத் தானே சமாதானப்படுத்திக்கொண்டாலும், இந்தக் காட்சி அவனுக்கு அருவருப்பையே அளித்தது. அது அந்த ஐரோப்பியன் அவள் அழகைப் பாராட்டியதால் விளைந்ததல்ல; அந்தப் புகழ்ச்சியிலும் அவன் பார்வை தன் மேனியைத் தழுவுவதிலும் உஷா அபரிமிதமான ஓர் ஆனந்தத்தை அனுபவித்துப் பரவசப்படுவது போல் தங்கப்பனுக்குத் தென்பட்டதால் உண்டான அருவெறுப்பு அது. உஷாவின் கண்கள் அந்தப் பிரெஞ்சுக்காரனின் வர்ணனைகளைக் கேட்டுப் பிரகாசமுற்று ஒளிர, அரும்பு தொடுத்தாற் போன்ற வரிசையான பற்கள் வசீகரமாக மின்ன, இந்தத் தோற்றம் தங்கப்பனைப் பலமாகத் தாக்கி உலுக்கி எடுப்பதை ஊகித்த மிருணாளினி அவன் முதுகில் கரம் பதித்துத் தள்ளிக் கொண்டு அவர்களை நோக்கி முன்னேறிச் சென்றாள்.

''எக்ஸ்கியூஸ் மீ'' என்று மரியாதைக்காகக் கூறி, அவர்களுக்கிடையில் தன்னை நுழைத்துக் கொண்டாள் மிருணாளினி.

''ஹல்லோ ஸுஜாதா!'' என்றாள் உஷா மாறாத புன்னகையுடன். பிறகு அப்போது தான் முதன் முறையாகத் தங்கப்பனைப் பார்ப்பவள் போல் ''அடேடே நீ எப்போ வந்தாய் தில்லிக்கு?'' என்று வியப்பைத் தருவித்துக் கொண்டு கேட்டாள்.

''உன் துரதிர்ஷ்டம், சென்ற முறை இவர் இங்கு வந்திருந்தபோது நீ சிம்லாவில் இருந்தாய் உஷா'' என்றாள் மிருணாளினி. பிறகு தங்கப்பன் பக்கம் திரும்பி, ''உஷா எப்போது என்னைக் கண்டாலும் நீங்கள் தில்லிப் பக்கம் வருவீர்களா? எப்போது வருவீர்கள்? என்று கேட்கத் தவறுவதில்லை. உங்களைச் சந்திக்கத் துடியாய்த் துடித்துக் கொண்டிருந்தாள்'' என்றாள்.

''மீனைக் கரையில் எடுத்துப் போட்டால் சற்று நேரம்தான் துடிக்கும்; அப்புறம் ஓய்ந்து போக வேண்டியதுதானே?'' என்றாள் உஷா கண்களைச் சிமிட்டியவாறு.

உஷாவிடம் பழகி அவளை நன்கு புரிந்து கொண்டிருந்த தங்கப்பனின் மனம் அவளுடைய இந்தப் பேச்சுக்கு உட்பொருள் எதையும் கற்பனை செய்து கொள்ள மறுத்து விட்டது. இதுபோன்ற 'பார்ட்டி'களில் அர்த்தமற்ற பேச்சுக்கள் கொஞ்சம் தாராளமாகவே அடிபடும். அதிகபட்சம் அவளுடைய இந்தச் சொற்கள் பக்கத்திலிருந்த பிரெஞ்சுக்காரனை மகிழ்விக்கப் பயன்படலாம் அவ்வளவுதான். அதற்கேற்றாற்போல் அவனும் சிரித்தான். ''ஆனால் நீ நீரில் நீந்தும் போது அழகான தங்க மீனாக இருப்பதில்லையோ உஷா? பயங்கரச் சுறா மீனாக அல்லவோ மாறிவிடுகிறாய்!'' என்று கூறிவிட்டு 'ஓஹோ ஹோ' எனப் பெரிதாகச் சிரித்தான். ''அதை வெகு நன்றாக என்னால் கற்பனை செய்து பார்க்க முடிகிறது.''

''இப்போது நான் விஸ்கி சோடாவில் நீந்திக் கொண்டிருக்கிறேன்'' என்று கோப்பையை அதரங்களில் பொருத்திக் கவிழ்த்தாள் உஷா.

மீண்டும் உரக்கச் சிரித்த அந்த ஐரோப்பியனிடம் மிருணாளினி பேசக் கொடுத்தபடியே நகர்ந்தாள். ''அப்புறம் சந்திக்கிறேன்'' என்று உஷாவிடமும் தங்கப்பனிடமும் கூறிவிட்டு, அந்த நான்காவது நபரை அங்கிருந்து அழைத்துச் செல்வது மிருணாளினிக்குக் கஷ்டமாக இருக்கவில்லை.

மானசீகமாக மிருணாளினிக்கு நன்றி செலுத்திவிட்டு உஷாவின் பக்கமாகத் தங்கப்பன் திரும்பியபோது, அவள் காலியான மதுக் கோப்பையை 'வெயிட்டர்' ஒருவன் ஏந்தி வந்த தட்டில் வைத்துவிட்டு வேறு ஒன்றை எடுத்துத் தங்கப்பன் பக்கமாக நீட்டினாள். அவன் மௌனமாகத் தலையசைத்து விட்டுப் பழரசம் நிரம்பியிருந்த கோப்பை ஒன்றை எடுத்துக் கொண்டான்.

''அடடா! மறந்து போய்விட்டது! ஒழுக்கம், நேர்மை இரண்டுக்கும் பிறந்த அவதார புருஷனாயிற்றே நீ!'' என்றாள் உஷா கிண்டலாக. ''உன் தொழிற்சாலையெல்லாம் எப்படி நடக்கிறது.'' என்று கேட்டுவிட்டு மதுவை ருசி பார்த்தான்.

''விசேஷமாகச் சொல்ல ஒன்றுமில்லை; ஏதோ நடக்கிறது'' என்றான் தங்கப்பன்.

''அது சரி, நன்றாக நடக்கிறதென்றால் நீ ஏன் தில்லிக்கு வரப் போகிறாய்? ஆனால் இங்கு நீ வந்த காரியங்கள் வெற்றிகரமாக முடிய வேண்டுமானால் உன்னுடைய போக்கு

அடிப்படையிலேயே ரொம்பவும் மாற வேண்டியிருக்குமே?''

''ஆமாம் உஷா! லஞ்சம் கொடுக்கவும், நாலு பேருடன் சேர்ந்து மது அருந்தவும் பழகிக் கொள்ளத்தான் வேண்டும் போலிருக்கிறது! வாழ்க்கையில் முன்னேற அத்தியாவசியமான முதல் தேவைகள் இல்லையா, இவை?''

''கரெக்ட்! இதையெல்லாம் கற்றுக் கொடுக்க ஒரு நல்ல உபாத்தியாயர் உனக்கு வேண்டுமானால் சொல்லு. இதோ நான் இருக்கிறேன்!''

தங்கப்பனுக்கு அந்த விநாடியே அழுகை பொத்துக் கொண்டு வந்து விடும் போலிருந்தது! அடுக்கடுக்காகப் பொங்கிய விசும்பலை அவன் நெஞ்சிலேயே மிகுந்த பிரயாசைப் பட்டுத் தேக்கிக் கொண்டான். அளவிட முடியாத விசனத்துடனும், கனிவும் அனுதாபமும் ததும்பும் உள்ளத்துடனும் அவன் உஷாவை மீண்டும் ஏறிட்டு நோக்கியபோது திடுக்கிட்டான். அலட்சியமும், அகங்காரமும் அதிகார போதையும் குடி போட்ட அந்த அகன்ற நயனங்களில் கண்ணீர் முத்துக்கள் அல்லவா திரண்டு நின்று வழிந்து சிதறக் காத்திருக்கின்றன!

அதை அவனிடத்தில் காண்பித்துக் கொள்ளாதிருக்க அவள் சிரமப்பட்டாள். அவனும் அவளைப் புண்படுத்த விரும்பாமல் பாராதது போலவே இருந்து விட்டான்.

''உஷா! அப்பா எப்படி இருக்கிறார்? சௌக்கியம்தானே?''

மதுக் கோப்பையை ஏந்தியிருந்த கரத்தாலேயே ஒரு திசையில் சுட்டிக் காட்டினாள் உஷா. அங்கு பாரதத்தின் தேசிய உடையாகக் கருதப்பட்ட அச்கனும் சுருவாலும் அணிந்து காணப்பட்டார் தீனதயாளு. தலையில் முன்னிலும் அதிகமாக வழுக்கை விழுந்திருந்தது. இருந்த கொஞ்சம் ரோமமும் தும்பைப் பூ நிறமாக மாறி விட்டிருந்தது. அவன் அவரைப் பார்த்த தருணத்தில் யாரோ ஒருத்தி அவரிடம் ஒரு மதுக் கோப்பையை எடுத்துக் கொடுக்க அதை அவர் வலது கரத்தால் வாங்கிக் கொண்டு இடக் கரத்தால் அவளது பரந்த இடையைச் சுற்றி வளைத்துத் தட்டிக் கொடுத்து ஏதோ கூறி விட்டு அப்பால் நகர்ந்தார் வேறு ஒருவருடன் பேச.

தங்கப்பனின் மனக் கண் முன்னால் விநாடி நேரத்துக்கு ஒரு காட்சி விரிந்தது. சிறுவனான அவன் தேர்தலையொட்டி நடக்கும் ஓர் அரசியல் பொதுக் கூட்டத்தின் ஓர் ஓரமாக நின்று வியப்புடன் கேட்கிறான். மேடையின் மீது கதர் ஜிப்பாவும் அங்கவஸ்திரமும் காந்திக் குல்லாயும் அணிந்து ஆஜானுபாகுவாக நிற்கும் ஒருவர் பேசுகிறார்: ''இன்று காலை யானைமீது அமர்ந்து பாடிய அந்தச் சிறுவனை எனக்குத் தெரியும். அவன் தகப்பனார் நடத்திய கள்ளுக்கடைகள் முன் மறியல் நடத்திப் பட்ட தடியடிகளின் தழும்புகள் இன்னும் என் நெஞ்சிலும் தோளிலும் நிலைபெற்று நின்று காந்தியத் தத்துவங்களைச் சதா நினைவூட்டிக் கொண்டிருக்கின்றன...''

அடுத்தாற்போல் மழலை மாறாத குழந்தை உஷா கூறுகிறாள்: ''நீ கள்ளுக்கடைக்காரன் மகன். உன் அப்பா பல பேர்கள் குடியைக் கெடுத்தவர். அதனால் நான் உன்னோடு விளையாட மாட்டேன்..... அத்தை அப்படிச் சொல்லியிருக்காங்க!''

இரண்டொரு கணங்களில் இந்தப் பழைய நினைவுகளையெல்லாம் தலையை உலுக்கி உதிர்த்துவிட்டுத் தங்கப்பன் அம் மாதை மறுமுறை நோக்கினான்.

வயதை மறைக்க அரும் பாடுபட்டு அளவுக்கு மீறி அலங்காரம் செய்துகொண்டு தங்கப்பனின் கண்களுக்கு ஆபாசத்தின் ஓர் உருவமாகவே தென்பட்டாள் அந்த ஸ்திரீ. ''யார் அது?'' என்று புருவங்கள் நெறிய உஷாவை வினவினான் தங்கப்பன்.

''அவளா? இங்கிலீஷில் சொல்வதானால் அவள் அவருக்குக் 'குளோஸ் ப்ரெண்ட்'. தமிழில் அவள் அவருக்கு ரொம்பவும் 'வேணுமென்கப்பட்டவங்க' இரண்டும் அவள் ஸ்தானத்தைச் சரியாக வர்ணிக்காதது என் குற்றமில்லை!'' விரக்தியுடன் அவள் இப்படிக் கூறுவதுபோல் அவனுக்குத் தோன்றியது.

''உஷா! இவளைப்பற்றிச் சத்தியபுரியிலேயே நான் உன்னிடம் ஒரு முறை பேசியது எனக்கு நினைவிருக்கிறது. ஆனால் நீ அதைக் குறித்துக் கொஞ்சமும் கவலைப்படாததாகவும் லட்சியமே செய்யாததாகவுமல்லவா அப்போது உன் பேச்சிலிருந்து நான் அனுமானித்தேன்! இன்னும் கேட்டால் உன் அப்பாவின் சார்பில் நீ பரிந்து பேசியதாகக் கூட ஞாபகம்!''

''இப்போது மட்டுமென்ன? இவளை யார் லட்சியம் செய்கிறார்கள்?'' என்ற உஷா அந்த உயர் ரக மதுவில் மேலும் கொஞ்சம் விழுங்கி வைத்தாள். ''ஆனால் அன்று சத்தியபுரியில் நாம் சர்ச்சையில் ஈடுபட்டதற்கும் இன்று பேசுவதற்கும் இடையில் ஒரு முக்கிய வித்தியாசம் உண்டு. அன்று நமது சர்ச்சைக்கு' உள்ளான 'குளோஸ் பிரெண்ட்' வேறு; இன்று நமது பேச்சில் அடிபடுகிற 'ரொம்பவும் வேணுங்கப்பட்டவங்க' வேறு! கணக்குச் சரியாகத் தெரிய வேணுமானால் இந்த 'லேடஸ்ட் குளோஸ் பிரெண்ட்' அவருடைய மூன்றாவது வேணுங்கப்பட்டவங்க!''

தங்கப்பனுடைய நெஞ்சில் இருதயத்தை முறுக்கி உதிரத்தைப் பிழிந்து எடுப்பதுபோல் ஒரு வேதனை பரவியது. 'ஐயோ! இந்தப் பெண் இத்தனை துன்பங்களையும் எப்படித் தாங்குகிறாள்?' என்று விக்கித்து உருகிப் போனான் அவன். அதே சமயத்தில் உஷாவுக்காகத் தான் இத்தனை வேதனைப்பட முடியுமானால் உஷா எந்த அளவுக்கு வேதனைப்பட்டுக் கொண்டிருக்க வேண்டும். அதையெல்லாம் மூடி மறைக்க அவள் எவ்வளவு கஷ்டப்பட்டுக் கொண்டிருக்க வேண்டும் என்பதையும் அவனால் ஒருவாறு ஊகிக்க முடிந்தது. 'என் ஒருவனைத் தவிர அவள் வேறு யாரிடம் இந்த அளவுக்கேனும் மனம் விட்டுப் பேசப் போகிறாள்? என்னைக் காண வேண்டும் என்பதில் உஷா ஆர்வம் காட்டியதாக மிருணாளினி சொன்னது விளையாட்டாக அல்ல; அது உண்மையாகவேதான் இருக்கும்!'

''இதெல்லாம் கிடக்கட்டும், சத்தியபுரி எப்படி இருக்கிறது? சொல்லு!'' என்றாள் உஷா. ''அந்தப் பக்கம் வந்தே வருஷக் கணக்கில் ஆகி விட்டது.''

''சத்தியபுரி இன்றைக்கும் பழைய சத்திய புரிதான் உஷா. மாறுதல் ஒன்றும் இல்லை'' என்ற தங்கப்பன், தன்னுடைய தற்போதைய சூழ்நிலையையே வெறுத்தவனாகி, ''உஷா! நாம் கிளம்பலாமா? வேறு எங்கே யாவது போய்ப் பேசுவோமே!'' என்றான்.

''நானும் அதையேதான் சொல்லவிருந்தேன்'' என்றாள் உஷா. ''ஜனவரி மாதத்திய குளிர் நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகமாகிக் கொண்டு வருகிறது. தேகத்தை உஷ்ணப் படுத்திக் கொள்ளவும் நீ மறுக்கிறாய்!'' இப்படிக் கூறியவாறே பக்கத்தில் ஒரு மேஜை மீதிருந்த தனது 'ஸ்வெட்ட'ரை எடுத்து அதை முழுமையாக அணியாமல் தோள்மீது முதுகைப் போர்த்திக் கொள்வது போல் அலங்காரமாக வைத்து முன்புறம் இடது கரத்தால் அதன் இரு முனைகளையும் பற்றியபடியே அவள் ஒய்யாரமாக நடந்தாள். அப்படி நடக்கும்போது மிகச் சிறந்த நடிப்புத் திறனுடன் தன் மேனியின் அங்க அசைவுகளெல்லாம் இயல்பாக ஏற்படுவனவென்ற ஒரு பிரமையை உருவாக்கிக் கொண்டு சென்றாள். இங்கு ஒருவரைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தாள். அங்கு ஒருவரிடம் கரமசைத்து விடைபெற்றாள், மற்றும் ஒருத்தரிடம் ''டாட்டா, சீரியோ'' என்று குழைவுடன் கூறியபடி நகர்ந்தாள். விருந்தினரின் கண்கள் அவளை நோக்குவதுடன், அவளையும் அவனையும் இணைத்தும் பார்ப்பது போல் அவனுக்குப் பட்டது. அவனையுமறியாமல் இலேசாகப் பெருமிதம் எட்டிப் பார்த்தது அவன் இதயத்தில்.

''அப்பாவை விட்டு விட்டுக் கிளம்புகிறோமே'' என்றான் தங்கப்பன்.

''அவருக்கு வேறு கார் இருக்கிறது. அவர் இப்போதைக்குக் கிளம்பி வரவும் மாட்டார். இன்னும் சற்று நேரத்தில் மாளிகையினுள் சென்று விடுவார்கள். அங்கே ஒரு விசேஷ நடன நிகழ்ச்சி ஏற்பாடாகியிருக்கிறது?'' என்ற உஷா தன் பியட் காரின் டிரைவர் ஆசனத்தில் அமர்ந்து கொண்டு, பூட்டியிருந்த மறுபக்கக் கதவைத் தங்கப்பனுக்குத் திறந்து விட்டாள்.

கார் கிளம்பியது. ''நேராக வீட்டுக்கே போய் விடலாம்; இரவு அங்கேயே சாப்பிட்டு விட்டுக் கிளம்பலாம், நீ!'' என்றாள் உஷா.

தங்கப்பன் மறுத்துச் சொல்லவில்லை.

''அத்தை மகேசுவரியையும் நீ சந்திக்க வேண்டுமில்லையா?'' என்று கேட்டாள் உஷா. ''அவளை முன் போலச் சாதாரணமாக நினைத்து அலட்சியமாகப் பேசி விடாதே! இப்போது அவள் ஒரு பெரிய தொழில் வர்த்தக சாம்ராஜ்யத்தின் அதிபதியாக்கும்!'' என்றாள்.

(தொடரும்)

"உஷ்! அப்பாடா! என்ன வெய்யில்! சீதா! அந்த 'பானை'ப் போடு!" என்றான் மூர்த்தி.

"எலெக்ட்ரிக் பில் வந்திருக்கிறது. பதினைந்து ரூபாய்!" என்று முறுவலித்தவாறு சீதா மின்விசிறியைத் திருப்பினாள்.

"பதினைந்து ரூபாயா? சாதாரணமாக ஆறு ஏழு ரூபாய்தானே ஆகும்?"

"இது வெய்யில் காலம். அதுவும் அஹமதாபாதின் பிரசித்தி பெற்ற வெய்யில்...நாளுக்கு இருபத்து நாலு மணி நேரம்'பான்' ஓடுகிறது."

"சரிதான்!இப்படியே போனால் மனிதன் சன்யாஸம் வாங்கிக் கொள்ள வேண்டியதுதான்."

"செலவு அதிகமாகும் என்று பயமாயிருந்தால் 'பானை' நிறுத்தி விடுகிறேன்!" என்று சீதா கையை 'ஸ்விட்ச்' அருகே கொண்டு போனாள்.

"ஐயோ, வேண்டாம்!" என்று அலறினான் மூர்த்தி. சீதா புன்னகையோடு "சன்யாசம் வாங்கிக் கொண்டால் எப்போதும் தலைக்கு மேல் 'பான்' சுற்றிக் கொண்டே இருக்குமோ?" என்று கேட்டவாறு உள்ளே சென்றாள்.

மூர்த்தி பதில் சொல்லவில்லை. முகத்தில் வழியும் வேர்வை நின்றால் போதாதா?

சீதா கையில் தம்ளரோடு வந்தாள். ஐஸ் மிதக்கும் எலுமிச்சம் பழ சர்பத். "சூடாகக் காப்பி சாப்பிட்டால் இன்னும் உங்களுக்கு வியர்த்துக் கொட்டும் என்று இதைக் கொண்டு வந்தேன்."

ஆவலோடு அதை வாங்கி ருசித்துப் பருக ஆரம்பித்தான் மூர்த்தி. பின், "ஐஸ் ஏது?" என்றான்.

"பக்கத்தில் சிவன் கோயில் இல்லே? அதற்கருகே ஐஸ் கிடைக்கிறது. பத்து பைசாவுக்கு இத்தனை கொடுக்கிறான்" என்று அவள் தன் உள்ளங்கையை விரித்துக் காண்பித்தாள்.

"யார் வாங்கி வந்தது? வாசுவா?"

"வாசுவா வாங்கி வருவான்? அப்பாவைப் போல் சோம்பேறியாயிற்றே அவன்!"

"ஏய், ஏய், நான் சோம்பேறியா?"

"சே! சே! சுறுசுறுப்பே அவதாரம்!"

"கிடக்கட்டும். ஐஸை யார் வாங்கி வந்தது?"

"நான்தான் வீட்டு வேலை எல்லாம் ஆனதும் போய் வாங்கி வந்தேன்."

"வீண் சிரமம்!" என்றான் மூர்த்தி, சர்பத்தை ருசித்தவாறு.

"உங்களுக்குப் பிடிக்காத ஒரு விஷயத்தைப் பற்றி இப்போது பேசப் போகிறேன். அதனால் கொஞ்சம் குளுமைப்படுத்தலாம் என்று..."

"தலையில் ஐஸ் வைத்தாயாக்கும்? அது சரி, பிடிக்காத விஷயமானால் நான் கேட்கவேயில்லை. உனக்கு இந்தச் சிரமமே வேண்டாம்!" என்று தம்ளரைக் காலி செய்து கீழே வைத்தான் மூர்த்தி.

"இன்று நான் உங்களை விடப்போவதில்லை, கேட்டுத்தான் ஆகவேண்டும், நீங்கள்!"

"அப்படியானால் சொல்!" என்று கொட்டாவி விட்டான் மூர்த்தி.

"நமக்கும் நாளுக்கு நாள் வயசாகிறது."

"நீ சொல்லாமலே எனக்குத் தெரியும் அது!" என்று அவன் வழுக்கை விழ ஆரம்பித்திருந்த தன் தலைமயிரைத் தடவிக் கொண்டான்.

"ஆயிற்று, இன்னும் பதினைந்து வருஷ ஸர்வீஸ் தான் உங்களுக்கு. இதற்குள் வாசுவைப் படிக்க



வைத்து ஆளாக்க வேண்டும். இன்னும் ஏழெட்டு வருஷங்களில் சுமதி வேறு கல்யாணத்துக்கு நிற்பாள். செலவு எத்தனையோ இருக்கிறது.''

''ஹூம்! ஆமாம்!'' என்று அவன் பெருமூச்செறிந்தான்.

ஆனால் இப்போது நமக்குப் பெரிதாகச் செலவு எதுவுமில்லை. சரிதானே?''

''நீ நகை நட்டு என்று ப்ளான் போடா விட்டால் இல்லைதான்.''

''இதுதான் சரியான சமயம். சின்னதாக ஒரு வீடு கட்டிவிடுவதற்கு.''

''பணம்?''

''அரசாங்கக் கடன் வாங்கிவிடுங்களேன்.''

''யார் மாதா மாதம் அடைப்பார்கள்?''

''நீங்கள்தான்.''

''எப்படி?''

''கொஞ்சம் வயிற்றை வாயைக் கட்ட வேண்டும். ஒரு வேளை கறிகாய் சாப்பிட்டால் போதும். நான் வேலைக்காரியை அனுப்பி விடுகிறேன்.''

''பாத்திரம் தேய்ப்பாயா? அக்கம் பக்கத்தில் சிரிப்பார்கள்.''

''நாளைக்கு நாம் தங்க இடம் இல்லாமல் திண்டாடினால் இன்னும் அதிகமாகச் சிரிப்பார்களே!''

''மண்ணாங்கட்டி!''

''சினிமாவைக் குறைக்கலாம். வீட்டிலேயே சலவை செய்து கொண்டால் வண்ணான் செலவு மிச்சம்.''

''அழுக்கைக் கட்டிக் கொண்டு ஆபீஸ் போக வேண்டுமா நான்? என்னைப் பார்த்து ஆபீஸ் பியூன்கள் கூடச் சிரிப்பார்கள்.''

''ஒன்றும் சிரிக்க மாட்டார்கள். அவர்களுக்கு வேறு வேலை இல்லையோ?''

''தினம் ஆபீஸ் போகிறவள் மாதிரி பேசாதே!''

''நீங்கள் கூட ஆட்டோ ரிக்ஷாவுக்குப் பதில் பஸ்ஸில் போய் வரலாம்!''

''என்னது?''

''ஏன் கூடாது? காசு மிச்சம். ரிக்ஷா உடலுக்குக் கொடுக்கும் உழைப்பும் மிச்சம்.''



"நான்சென்ஸ்! நான் மெதுவா ஒரு ஸ்கூட்டர் வாங்கலாம் என்று பார்க்கிறேன். என்ன சொல்கிறாய்?"

அடிபட்டவளைப் போல் அவனைப் பார்த்து விட்டு மௌனமானாள் சீதா. மூர்த்தியும் ஒன்றும் பேசவில்லை.

அந்தத் தர்மசங்கடமான மௌனத்தைக் கலைத்துக் கொண்டு ஒரு குரல் தெருவிலிருந்து எழுந்தது. "டிடி தர்பூஜ்!"

"சீதா! கிருணிப் பழம் வந்திருக்கிறது பார்! வாங்கு! இந்த வெய்யில் வேளைக்கு நன்றாய் இருக்கும்! பம்பாய்வாலா தானே கொண்டு வந்திருக்கிறான்?"

"ஆமாம்....... அந்தக் குல்லாக்காரன் தான்...... சாதாரணமாகக் காலையில் வந்து உயிரை வாங்குவான்...... இன்று மத்தியானம் வந்திருக்கிறான். அடாவடி விலை சொல்வான்!"

"உனக்குப் பேரம் பேசத் தெரியாது!" என்று தானே எழுந்து வாசலுக்குச் சென்றான் மூர்த்தி. சுழன்று கொண்டிருந்த மின் விசிறியைச் சீதா நிறுத்தினாள்.

வண்டி நிறையக் கிருணிப் பழம். அதற்கருகே நின்றிருந்தான் பம்பாய்வாலா..... ஒற்றை நாடியான சரீரம் வேர்வையில் நனைந்திருந்தது. அதிக உயரமில்லை. வெள்ளைக் குல்லாய், உடலோடு ஒட்டிய முழுக்கை ஷர்ட், கச்சம் வைத்துக் கட்டிய வேஷ்டி... அவனுக்குப் பம்பாய்வாலா என்று பெயர் எப்படி வந்ததென்பது மூர்த்திக்குத் தெரியாது....... தெருவில் ஓரிருவர் அப்பழக்காரனைப் 'பம்பாய்வாலா' என்று அழைக்கவே, அப்பெயரில் ஏதோ புதுமை இருக்கவே தானும் அப்படியே அவனை அழைக்கலானான்.

"ஆவோ, ஸேட்ஜி!" என்று மூர்த்தியை வரவேற்றான் பழக்காரன்.

ஸேட்ஜி! அதாவது பணக்காரன்! சீதா சொல்வது போல் அழுக்கு உடை உடுத்தி, பஸ்ஸில் இடிபட்டு ஆபீஸ் போனால் இந்தப் பெயர் கிடைக்குமா? பைத்தியக்காரி சீதா!

"என்ன விலை?" என்றான் மூர்த்தி.

"ஐந்தணா சேர்!"

"என்னது? ஊரெல்லாம் நாலணா விற்கிறது! உனக்கு மட்டும் என்ன பேராசை!"

"ஸேட்ஜி! இந்த ஏழையோடு ஓரணாவுக்காகப் பேரம் பேசாதீர்கள்...... ஓரணா நீங்கள் விட்டெறியும் காசு!" என்றான் பழக்காரன், பவ்யமாய்.

அதற்கு மேல் மூர்த்தி எதுவும் சொல்லவில்லை...... பம்பாய்வாலா சரியான ஐஸாகத் தான் தலையில் வைத்து விட்டான்! பத்தணாக் கொடுத்து இரண்டு சேர் பழம் வாங்கித் திரும்பிய போது, ஒருவேளை கறிகாய் சாப்பிடலாம் என்று சீதா சொன்னது நினைவுக்கு வந்தது. ஐயோ சீதாவே!

அவன் கையிலிருந்த பழத்தைப் பார்த்து விட்டுச் சீதா, "எத்தனை கொடுத்தீர்கள்?" என்றாள்.

மூர்த்தி பதில் சொல்லவில்லை. அவனைப் போன்ற ஸேட்ஜி இரண்டணாவுக்குப் பேரம் பேசக் கூடாது என்று இவள் எங்கே உணரப் போகிறாள்?

"அந்தக் குல்லாய்க்காரன் பலே ஆள். இன்னும் கொஞ்ச நாட்களில் சேர் இரண்டு ரூபாயென்று மாம்பழம் கொண்டு வருவான். சேருக்கு இரண்டு பழம் நிற்கும். நீங்களும் வாங்குவீர்கள்!" என்றாள் சீதா.

"எதற்கு விலையேறு அதை அவன் கொண்டு வருகிறான். வாங்குவதுதான் சரி. ஒன்றையும் அனுபவிக்காமல் என்ன வாழ்வு வேண்டியிருக்கிறது!"

"நீங்கள் எதையும் குறைத்துக் கொள்ளப் போவதாக எனக்குத் தெரியவில்லை."

"தெரிய வேண்டாம் சீதா... இந்தப் பழத்தை வெட்டிக் கொண்டு வருகிறாயா?" என்றான் மூர்த்தி, மின் விசிறியை மறுபடியும் சுழல விட்டவாறே.

சீதா பழமும் கையுமாய் உள்ளே சென்றாள். வேறு என்ன செய்ய முடியும்?

மூர்த்தி யோசனையில் ஆழ்ந்தான். பாவம், அந்த பம்பாய்வாலா! வெய்யில் மழை என்று பார்க்காமல் வண்டியைத் தள்ளி வந்து பழம் விற்க வேண்டிய நிலை. தெருத் தெருவாய்த் தொண்டை கிழியக் கத்த வேண்டிய நிர்ப்பந்தம். மின் விசிறி இல்லாவிட்டால் இங்கே துடித்து விடுகிறேனே நான்! பம்பாய்வாலாவுக்கு நிழலான இடமே குளுமையின் இருப்பிடம்.... என்ன பிழைப்பு!

சீதா பழத் துண்டங்களோடு வந்தாள். "நாம் சண்டை போட்டது போதும். நீயும் பழம் சாப்பிடு வா!" என்று அவளையும் உட்கார வைத்தான் மூர்த்தி. அதற்குப் பிறகு அந்தப் பம்பாய்வாலாவைப் பற்றிய நினைவே எழவில்லை.

ஒரு வாரம் கழிந்திருக்கும். "சீதா! நான் நாளை ராத்திரி பம்பாய்க்கு டூர் போகவேண்டும்!" என்று அறிவித்தான் மூர்த்தி.

"சரி... போய் வாருங்கள்!"

"உனக்கு டெரிலின் புடவை வாங்கி வரட்டுமா?"

"ஒன்றும் வேண்டாம். வீண் செலவு!"

"குழந்தைகளுக்கு?"

"இருக்கிறது. நிறைய!"

"அப்படியானால் நான் ஒரு டெரிலின் புஷ்கோட் வாங்கிக் கொள்கிறேன்."

"அதுதான் இருக்கிறதே!"

"ஒன்றோடு இரண்டாக இருக்கட்டும்."

"நீங்கள் இப்படிப் பொறுப்பே இல்லாமல் இருப்பது நன்றாக இல்லை!"

"நீதான் என் பொறுப்பையும் சேர்த்துத் தாங்குகிறாயே! எனக்கென்ன கவலை?"

"எனக்கு வாழ்க்கையில் எல்லாவற்றையும் விடப் பெரிய ஆசை என்ன தெரியுமா?"

"என்ன? வைர நெக்லஸ் போட்டுக் கொள்ள வேண்டும் என்று?"

"நீங்கள் எதிர் காலத்தைப் பற்றிக் கொஞ்சம் பொறுப்போடு யோசிக்க வேண்டும்!" என்ற அவள் கண்கள் குளமாகி விட்டன.

"சரியான பைத்தியம்!" என்று நினைத்துக் கொண்டான் மூர்த்தி.

பம்பாயில் அவனுக்கு வேலை ஒருநாள் தான். ஆனால் ஊரைச் சுற்றிப் பார்க்க வேண்

டாமா? பம்பாய் வந்ததற்கு அடையாளமாக இரண்டு சினிமாக் கொட்டகையிலாவது புகுந்து வர வேண்டாமா? பம்பாய் வந்ததற்கு அடையாளமாகச் சீதாவுக்கு ஒரு ரவிக்கைத் துண்டாவது வாங்க வேண்டாமா? பம்பாயில் மூன்று நாட்கள் பறந்தோடின.

ஆயிற்று. அவன் அன்று அஹமதாபாத்துக்குப் புறப்பட வேண்டும். ஹோட்டலுக்குள் புகுந்து மசாலா தோசை, சோமாஸ் என்று வயிறு நிறையச் சாப்பிட்டுவிட்டு வெளியே வந்தான் மூர்த்தி. மணி ஆறே முக்கால்.

நடக்கலானான். இருபதடி நடக்கு முன் கால் வலித்தது. காலி டாக்ஸி ஏதாவது கிடைத்தால் அதைப் பிடித்துக்கொண்டு ஸ்டேஷன் போக வேண்டும்.

எதிர்ப்புறம் ஒரு டாக்ஸி வந்து கொண்டிருந்தது. உபயோகமில்லை.... அதில்தான் பின் ஸீட்டில் யாரோ ஒருவன் கறுப்புக் கோட் அணிந்து உட்கார்ந்திருக்கிறானே.

டாக்ஸி அவனருகே வந்ததும் ஏனோ நின்றது. மூர்த்தி ஆச்சரியத்தோடு திரும்பினான். கதவைத் திறந்தவாறே இறங்கிய ஆசாமி அவனைப் பார்த்து, ''நமஸ்தே ஸேட்ஜி!'' என்று கைகூப்பினான்.

யார்! பம்பாய்வாலாவா? அதே கச்சம் வைத்த வேஷ்டி. ஷர்ட்டுக்கு மேல் கோட், தலையில் குல்லாய் இல்லை.

''ஸேட்ஜி! எங்கே போக வேண்டும்?'' என்று பவ்யமாகக் கேட்டான் அவன்.

''ஸ்டேஷனுக்கு!''

''குஜராத் மெயிலில் தானே? இன்னும் நேரமிருக்கிறது. என்னோடு வாருங்கள். நான் காட்டப் போவது உங்களுக்குப் பிடித்தால் எனக்கு ஆனந்தம்!'' என்றான்.

அந்த ஏழையின் வேண்டுகோளை மறுக்க மாட்டாமல் மூர்த்தி டாக்ஸியில் பின் ஆசனத்தில் ஏறிக்கொண்டான். பம்பாய்வாலா டிரைவருக்கு அருகே உட்கார்ந்தான். ஸேட்ஜிக்கு அருகில் பழக்காரன் உட்கார்ந்து கொள்ளலாமா?

டாக்ஸி பறந்தது. பின் ஒரு சிறிய வீட்டுக்கெதிரே நின்றது.

பம்பாய்வாலா சட்டென்று இறங்கி மூர்த்திக்காக டாக்ஸிக் கதவைத் திறந்து பிடித்தான். மூர்த்தி இறங்கினான்.

''ஸேட்ஜி! வாருங்கள்!''

பம்பாய்வாலா அவனை அழைத்துக்கொண்டு அவ்வீட்டுக்குள் சென்றான். புதிதாகக் கட்டப்பட்ட வீடு. சிறிதாக இரண்டு அறைகளும், சமையல், குளியல் அறைகளோடும் கச்சிதமாக அமைந்திருந்தது.

''வீடு எப்படி ஸேட்ஜி?''

''ரொம்ப ஜோர்! யாருடைய வீடு?''

''என்னுடையது. இப்போதுதான் கட்டி முடிந்தது.'' அவன் கண்கள் பெருமையோடு அந்தக் கட்டடத்தின் மீது பதிந்தன.

மூர்த்தி வாயடைத்து நின்றான். கேவலம் தெருத் தெருவாய்ப் போகும் பழக்காரன் தான் பம்பாய்வாலா. ஆனால் வெய்யிலென்றும் மழையென்றும் பாராமல் நிலத்தில் விழும் அவன் நெற்றி வியர்வை இதோ உறுதியான கட்டிடமாக உருமாறி விட்டது. ஆனால் அவன்! ஸேட்ஜியாகிய அவன்?

''நான் இங்கே வீடு கட்டுகிறேன் என்று தெரிந்தவுடனேயே அஹமதாபாதில் எனக்குப் 'பம்பாய்வாலா' என்று பெயர் வைத்துவிட்டார்கள். இரண்டு வருஷங்களுக்கு முன் கட்ட ஆரம்பித்த வீடு இது, ஸேட்ஜி. நடுவில் என் மனைவி வியாதியாகப் படுத்துக் கொண்டு விட்டாள். பணத்தையெல்லாம் அவள் வைத்தியத்துக்கே கொட்டிவிட்டேன். இது பாதியிலேயே நின்றது. அதன் பிறகு நான் கொஞ்சம் அதிகமாக உழைக்க ஆரம்பித்தேன். காலையில் பழ வியாபாரம். மாலையில் கறிகாய் வியாபாரம். கடைசியில் இதைக் கட்டி முடிக்க முடிந்தது. என் கனவு நனவாகி விட்டது ஸேட்ஜி! கிழவனாகி, கால் ஒடிந்து, கண் அவிந்து நான் வரும்போது இது நிழல் தரும்!'' அவன் அந்தச் சிறு வீட்டைக் கண்கொள்ளா மகிழ்ச்சியோடு பார்த்தான்.

மூர்த்தியால் நிற்க முடியவில்லை. நெஞ்சில் இது என்ன உணர்ச்சி? ''நான் கிளம்புகிறேன், பம்பாய்வாலா... நீ எப்போது அஹமதாபாத் வருகிறாய்?'' என்றான்.

''இரண்டுநாட்களில் கிளம்பிவிடுவேன். மாம்பழ ஸீஸன் வருகிறது. ஸேட்ஜிக்கு மாம்பழமென்றால் உயிராயிற்றே!''

மூர்த்தியின் மனம் வேதனையில் முறுக்கியது. மாம்பழம்! 'சேர் இரண்டு ரூபாய்... சேருக்கு இரண்டு பழம் நிற்கும். நீங்களும் வாங்குவீர்கள்!' என்றாளே சீதா!

''ஸேட்ஜி! உங்களை நான் ஸ்டேஷனில் கொண்டு போய் விட்டுவிடுகிறேன்'' என்றான் பழக்காரன்.

''வேண்டாம். நான் போய் விடுகிறேன். வழியில் கொஞ்சம் வேலை இருக்கிறது'' என்று மழுப்பிவிட்டு நடக்கலானான் மூர்த்தி. நடப்பது ஏனோ இப்போது கஷ்டமாகத் தோன்றவில்லை. மனத்தில் சட்டென்று ஆழப் பதிந்துவிட்டது தீர்மானம்.

ஸ்டேஷனை அடைந்தாயிற்று. பெட்டியில் ஏறிவிட்டான் மூர்த்தி. வழுக்கை விழ ஆரம்பித்த தலையைக் கை ஒரு முறை தடவியது.

'நாளைக் காலை அஹமதாபாத் சென்றதும் சீதாவிடம் சொல்ல வேண்டும், அவளுடைய ஆசை நிறைவேறப் போகிறதென்று. ஆபீஸ் சென்றதும் முதல் காரியமாக வீடு கட்டும் கடனுக்கு எழுதிப் போட வேண்டும். இன்னும் பதினைந்து வருஷ ஸர்விஸ்தானே? அதற்குள் பெண்ணுக்குக் கல்யாணம் செய்து கொடுத்து, பிள்ளையைப் படிக்க வைத்து.... எத்தனை பொறுப்பு!' என்று எண்ணியவாறு படுத்துக்கொண்டான்.

'பாவம்! பம்பாய்வாலா! அவன் கற்பித்த பாடத்தின் பயனாக இந்த ஸேட்ஜி கொஞ்ச நாள் அவனிடம் பழம் வாங்க மாட்டார்!' என்று எண்ணிச் சிரித்துக் கொண்டவன், தன்னையும் அறியாமல் உறங்கிப் போனான்.

அத்தனை நிம்மதியாய் அவன் அதுவரையில் உறங்கியதில்லை!

# இதோ பதில்!



**இது ஒரு கேள்வி – பதில் யுகம். கேள்வி கேட்பது வாசகர் கடமை. பதில் சொல்வது ஆசிரியர் பொறுப்பு. சுருக்கமாகச் சொன்னால் ஆசிரியரின் 'மேதா விலாச'த்தை வெளிச்சம் போட்டுக் காட்டும் பகுதி, கேள்வி – பதில்! உதாரணத்துக்கு ஒருசில கேள்வி–பதில்களை இங்கு காண்போம் :**

குத்துப்பேட்டை குடும்பராஜ்: எங்கள் வீட்டுச் சொந்தக்காரரின் குழந்தைகள் விஷமக் கொடுக்குகளாக இருக்கின்றனர். அந்தக் குழந்தைகள் அடிக்கும் 'லூட்டி' பொறுக்க முடியவில்லை. கண்டிக்கவும் பயமாயிருக்கிறது. என்ன செய்யலாம்?

*குழந்தைகள் விஷமம் செய்தால் அடிப்பதோ, திட்டுவதோ தவறு என மருத்துவ நூல்கள் செப்புகின்றன. ஆகவே, குழந்தைகளைப் பெற்றவர்களையே முடிந்தால் அடிக்கவும்; முடியா விட்டால் திட்டவும்.*

ஊட்டி ஊர்மிளா தேவி: நான் புதிதாக மணமானவள். கணவரைத் தனிமையில் சந்திக்கும் போதெல்லாம் என் உடம்பு நடுங்குகிறது. ஏதாவது வியாதியாக இருக்குமோ என அஞ்சுகிறேன்.

*ஊர்மிளாதேவி! உங்கள் உடல் நடுக்கத்துக்குக் காரணம் ஊட்டிக் குளிரல்ல. கல்யாணமான புதிதில் இப்படித்தான் இருக்கும். அஞ்ச வேண்டாம். அறுபது நாட்கள் பொறுங்கள். இந்த 'நடுக்கு வியாதி' உங்களை விட்டுவிட்டு உங்கள் கணவரை நிரந்தரமாகத் தொத்திக் கொள்ளும்.*



மணவாளபுரம் கல்யாணராமன்: தாம்பத்தியக் கலகத்தின் ஆரம்பம் எது? முடிவு எது?

*தாம்பத்தியக் கலகத்தின் ஆரம்பம் பட்டுப் புடவை! முடிவும் பட்டுப் புடவைதான்!*

வெட்டியூர் சௌந்தரவல்லி: என் பெயர் கர்நாடகமாக இருக்கிறது. அழகான தமிழ்ப் பெயராக வைத்துக் கொள்ள ஆசைப்படுகிறேன். என்னுடைய விருப்பத்துக்கு உதவி செய்ய முடியுமா?

*வெட்டியூர் தங்கச்சி! வேதனைப் படவேண்டாம். செத்துக் கொண்டிருக்கும் சம்ஸ்கிருதப் பெயர்களைத் தமிழ்ப் பெயர்களாக மாற்றத்தானே 'தமிழ்ச் சித்த'னாக அவதரித்திருக்கிறேன். சௌந்தரியவல்லி என்பதற்குச் சரியான தமிழ்ப் பெயர் 'அழகரசி' என்பதாகும். இனி சௌந்தரவல்லி என்ற பெயர் கொண்டவர்களெல்லாம் அழகரசி என்ற அழகிய பெயரைச் சூட்டிக் கொள்ளுங்கள்!*



' ஜயபார் '

இலக்கியப்பித்தன் - சோலையூர்: தமிழில் நாடகங்கள் ஏதாவது எழுதப் பட்டுள்ளதா?

*நாடகமா? அதுவும் தமிழிலா? அப்படியேதும் நானறிந்த வரை இல்லை, பித்தரே! நான் இப்போது சில நாடகங்கள் எழுதிக் கொண்டிருக்கிறேன். அவை அரங்கேற்றப் பட்டு விட்டால், தமிழ் நாட்டில் நாடகங்களுக்குப் பஞ்சமேது?*

இன்பவனம் இரைநேசன்: திரையழகி திலகாவுக்குத் திருமணமாகி விட்டதென நான் சொல்லுகிறேன். இல்லை என்கிறான் என் நண்பன். ஐந்து ரூபாய் பந்தயம் வைத்திருக்கிறோம். யார் சொல்வது சரி?

*உங்கள் பந்தயத்தில் தலையிட விரும்பவில்லை. ஆயினும் பிரச்னைக்கு வழி கூறுகிறேன். ஐந்து ரூபாய் பந்தயம் கட்டத் துணிந்த நீங்கள், ஆறு பைசாவைப் பாராமல் திலகாவின் கணவர் தில்லை நாயகத்துக்கு எழுதிக் கேட்டிருக்கலாம்!*

கல்லுப்பட்டி கலாதரராணன்: சமீப காலமாகப் பின்னழகி பிரேமகுமாரியை வெள்ளித் திரையில் காண முடியவில்லையே ஏன்?

*பிரசவ வேதனைதான்! பிரசவ வேதனைப்படுவது அவரல்ல. அவர் அருமையாக வளர்க்கும் 'பமேரியன்' வகையைச் சேர்ந்த ரோஸி தான்! 'ரோஸி' பிரசவிக்கும் வரை அவர் படப் பிடிப்புகளில் கலந்து கொள்வதை ரத்து செய்து விட்டார்!*

முடியிழந்தான் வெள்ளியங்கிரி: ஐயா! என் தலை மயிரில் பாதி வெள்ளிக் கம்பிபோல் நரைத்து விட்டது. நரையைப் போக்க என்ன செய்யலாம்?

*வெள்ளிக் கம்பியன்ன (தலை நரைத்த) வெள்ளியங்கிரி! பாதி நரையைப் போக்கப் போலி மருந்துகள் இருக்கின்றன. போலிகளை நம்பி ஏமாறாமல் அசலையே நம்பி ஏமாற அடியேனின் கண்டுபிடிப்பான 'சித்தன் தைல'த்தை வாங்கி உபயோகியுங்கள். உங்கள் தலை முழு நரையாகக் காட்சியளிக்கும்!*

ரதியூர் மன்மதன்: காதலித்துக் கடிமணம் புரிவது நல்லதா? கல்யாணம் செய்துகொண்டு காதலிப்பது சிறப்புடையதா?

*மன்மதரே! தர்மசங்கடமான கேள்வி. ஆயினும் பதிலளிக்கிறேன். இரண்டு முறைகளையும் பரீட்சித்து விடுவதே நல்லது என்பது என் கருத்து.*

# காதல் இல்லையேல் காதல்



## சோ

### காட்சி 33

**சுரேஷ் அறை :**

**(சுரேஷ், நாகராஜனைக் கட்டப்பட்டிருக்கும் நிலையி லிருந்து விடுவிக்கிறான்.)**

சுரே: டேய்! என் பிளான் ஸக்ஸஸ்டா! பெரிய வெற்றி......

நாகு: ஹூம்!..... உன் காரியத்தை யெல்லாம் முடிச்சுக்கிட்டே, இல்லே? சந்தோஷம். சுரேஷ்..... இந்த இடத்தை விட்டு நான் போக அனுமதி உண்டா, கிடையாதா? எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம், உன்னை விட்டு எவ்வளவு தூரம் முடியுமோ அவ்வளவு தூரம் போறதுக்கு, எவ்வளவு துடிப்போட இருக்க முடியுமோ அவ்வளவு துடிப்போட இருக்கேண்டா!

சுரே: எவ்வளவு பேச முடியுமோ அவ்வளவு பேசிட்டியா? முட்டாள்! நான் எவ்வளவு பெரிய காரியத்தைச் சாதிச்சுக்கிட்டு வந்திருக்கேன்னு தெரிஞ்சா — நீ இப்படிப் பேச மாட்டே!

நாகு: தெரியும்! உனக்கும் நிர்மலாவுக்கும் கல்யாணத்தை நிச்சயம் பண்ணிக்கிட்டு வந்திருப்பே..... நான் போறேண்டா! என்னை விட்டுடு..... உன்னை மாதிரி சிநேகிதத் துரோகியைப் பார்க்க முடியாதுடா!

சுரே: இன்னொரு தடவை ஏதாவது உளறினே, தொலைச்சுப்புடுவேன்..... டேய், சர்வ முட்டாள்! மாலதியின் சித்தப்பா சொன்ன பத்தாயிரம் ரூபாய் தொகை நமக்குக் கிடைச்சாயிடுத்துடா, அசல் மடையா!

நாகு: என்னது?

சுரே: ஆமாண்டா! அதைச் சம்பாதிக்கத்தான் ஒரு திட்டம் போட்டேன். நீ இருந்தால் ஏதாவது உளறிக் காரியத்தைக் குட்டிச்சுவர் அடிச்சுடுவேன்னுதான் உன்னைக் கட்டிப் போட்டுட்டு நானே போய்க் காரியத்தைச் சாதிச்சேன்.......

நாகு (கண்களில் நன்றி உணர்ச்சி பனிச்சிட): சுரேஷ்.......

சுரே: சபேசனும், மாலதியும் ஏதோ காரியமா பூனா போறாங்கன்னு தெரிஞ்சுக்கிட்டேன். கனகசபைக்கு ஒரு தந்தி—எக்ஸ்பிரஸ் தந்தி கொடுத்தேன் — 'மாலதியைக் காணவில்லை'.....

நாகு (திடுக்கிட்டு): என்னடா? மாலதியைக் காணுமா?

சுரே: அட சட்! அப்படின்னு தந்தி கொடுத்தேண்டா......

நாகு: ஓ......! அப்புறம்?

சுரே: அவர் அலறிப் புடைச்சுக்கிட்டு வந்தார்....... ஏரோட்ரோம் லேயே சந்திச்சேன்..... சபேசன் அனுப்பினதா சொன்னேன்....... உடனே எட்டாயிரத்து ஐந்நூறு ரூபாய்ப் பணம் தராட்டி மாலதியைக் கொலை பண்ணிடறதா மிரட்டி ஒரு லெட்டரையும் எழுதி வெச்சுக்கிட்டு அவர்கிட்டே காட்டினேன். யாரோ ஓர் அயோக்கியன், மாலதியைக் கடத்திக்கிட்டுப்போய்ச் சபேசனை மிரட்டறதாக ஒரு கதை விட்டேன். கனகசபை நம்பினார்..... கையிலே இப்ப எட்டாயிரத்து ஐந்நூறு!

நாகு: டேய்! எப்படிடா, அவர் இப்படி ஓர் அபத்தமான கதையை நம்பினார்?

சுரே: ஏண்டா, நம்பமாட்டார்? மாலதியினுடைய சித்தப்பா இல்லையா கனகசபை? மாலதிக்கு அபாயம் வரலாம்கிற சந்தேகம் இருந்தாக்கூடப் போறுமே. பணமா பெரிசு? மாலதியினுடைய உயிர் பெரிசா? பத்தாயிரம் ரூபா பெரிசா?

நாகு: சுரேஷ்! ஏண்டா அது சுரேக்டா எட்டாயிரத்து ஐந்நூறு வாங்கியிருக்கே? நான் ரெண்டு மாசத்துக்குள்ளே பத்தாயிரம் ரூபா சம்பாதிக்கிறதா இல்லே பேச்சு? பாக்கி ஆயிரத்து ஐந்நூறுக்குக் கடன் சொன்னால் கனகசபை ஒத்துப்பாரா?

சுரே: நாகு..... ஆயிரத்து ஐந்நூறு நம்ம கையிலேயே இருக்குடா. சபேசன் அப்பப்போ குடுத்தது....... அதைத் தவிர நிர்மலாவை விட்டு நான் கலெக்ட் பண்ணின நிதி!

நாகு: அது வேறேயா?

சுரே: பின்னே?.... இப்பக் கையிலே பத்தாயிரம் ரூபாய் ரெடியா இருக்கு. கனகசபைகிட்டே இதைக் கொண்டு போய்க் காமிச்சு நீ மாலதியைக் கல்யாணம் பண்ணிக்க வேண்டியதுதான்.

நாகு: சுரேஷ்..... என்னதான் இருந்தாலும், இந்த மாதிரி கனகசபையை ஏமாத்தறது தப்பு இல்லையா? மாலதியைக் காணோம்னு பொய் சொல்லலாமா?

சுரேஷ் : நீ செத்தேன்னு நினைவுக் கூட்டம் நடத்தினேனே ! உன்னைக் கவிஞன்னு சொன்னேனே, அந்த மகா பாவத்துக்குச் சமமா வேறெந்த பாவம்டா இருக்க முடியும்?

நாகு: சுரேஷ், நான் உன்னை ரொம்பத் தப்பா புரிஞ்சுக்கிட்டேன். என்னை மன்னிச்சுடுடா.......

சுரே: அடி சக்கை ! சினிமா ஹீரோ மாதிரி பேசறியேடா! டேய் நாகு...... வாழ்க்கைங்கிறது ஒரு மந்திரி சபை. அதுலே நல்லவங்களுக்கு இடம் கிடையாது.

நாகு: ப்ளீஸ்..... ப்ளீஸ்..... இந்த மாதிரியெல்லாம் பேசாதேடா......

சுரே: ஏன், மனசுக்குக் கஷ்டமா இருக்கா?

நாகு: இல்லே. புரிய மாட்டேங்கறது. சுரேஷ்..... இப்ப கனகசபையைச் சமாளிக்க வழி கிடைச்சாச்சு. மாலதியை எப்படிரா நம்ப வைக்கிறது?

சுரே: எதுக்கு?

நாகு: நான் சாகலேன்னு நிரூபிக்க வேண்டாமா ? நான் சத்தியம் பண்ணுக்கூட அவ நம்ப மாட்டாளே! சாகலேன்னு தெரிஞ்சாத் தானேடா, காதல், கல்யாணம் எல்லாம் ?

சுரே: சாதல் இல்லேயேல் காதல்!..... கவலைப்படாதே. நான் வழி பண்ணறேன்.

நாக: அது வரைக்கும் என்னைக் கட்டிப் போடப் போறியா?

சுரே: இனிமே அதுக்கு அவசியம் இல்லே. சபேசன் ஏலத்திலே எடுத்த இரும்புப் பெட்டியிலே நான் எழுதின இன்லண்ட் லெட்டர் இருக்கு. அவர்கிட்ட, எல்லார் எதிரேயும் விஷயத்தை விளக்க வேண்டியது. கனக சபைகிட்டே பத்தாயிரம் ரூபாயை நீ கட்ட வேண்டியது. சபேசனைப் பெட்டியைத்திறக்கச் சொல்லி என் லெட்டரை எடுத்து மாலதி கிட்டே காட்ட வேண்டியது. நம்ம திட்டத்தை எல்லாரும் புரிஞ்சுக்க வேண்டியது. நீ நீயேதான்னு நிரூபிக்க வேண்டியது. அவ்வளவுதான் !

நாகு : சுரேஷ், உன்னை மாதிரி ஆயிரத்துலே ஒருத்தனைத்தான்டா பார்க்க முடியும் ! உனக்கு நான் எப்படிடா நன்றி செலுத்தப் போறேன் ?

சுரே: இந்த மாதிரி கேக்கறவன் கண்டிப்பா நன்றி செலுத்த மாட்டான். 'நான் பண்ண மாட்டேன்னு சொல்றதுக்குப் பதிலாத்தானே, 'எப்படிடா, பண்ணப் போறேன்'னு கேக்கறே !

நாகு: என்னடா இது? எதைச் சொன்னாலும் தப்பர்த்தம் கண்டு பிடிக்கிறே ? எனக்கு நன்றி உணர்ச்சி பொங்கி வழியறது. நான் அதை எப்படி நிரூபிக்கிறது ? கதையா இருந்தால் பரவாயில்லே. பிராக்கட்லே 'நன்றி உணர்ச்சியோடு'ன்னு போட்டுக் காமிச்சுடலாம் ! (திடீரென்று) டேய் சுரேஷ், ஒண்ணு பண்ணட்டுமா?

சுரே: என்ன?

நாகு: உன் பேரிலே ஒரு கவிதை எழுதட்டுமா ?

சுரே : டேய், வேண்டாண்டா, ப்ளீஸ்! உன்னைக் கட்டிப் போட்டதுக்கு மன்னிப்புக் கேட்டுக்கறேண்டா ?....

நாகு: டேய், கலாட்டா பண்ணாதே..... மாலதியே என் கவிதையைப் பார்த்துத் தானே மயங்கிட்டா !

சுரே: மடையா! நிஜமாவே நீ கவிஞருன்னு நினைச்சுக்கிட்டியா? முட்டாள். அவளுக்கு என்னமோ தெரியலே.'போறாத காலம்! உன்னைப் பிடிச்சுப் போச்சு. அதனாலே அவளையும்அறியாமல் உன் கவிதையை ரசிச்சிருக்கா. டேய், நாகு! கவிதைக்கு ஒரு கும்பிடு போட்டுடு !.......



நாக: அது எப்படிடா..... அப்புறம் மாலதி வருத்தப்படுவளே......

சுரே: அதை நான் கவனிச்சுக்கறேன். முதல்லே போய்ச் சபேசனை மீட் பண்ணி அந்த லெட்டரை வாங்கலாம் வா !

(சபேசன் வருகிறார்)

நாக: குட்மார்னிங் ஸார்...., உங்களைப் பார்க்கத்தான் புறப்பட்டுக்கிட்டிருக்கேன்....

சபே: ஏனய்யா!.... நீ கனகசபையை ஏமாத்தி எட்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் வாங்கினியா ?

கரே: ஓ! உங்களுக்கும் தெரிஞ்சுடுத்தா? (சிரிக்கிறான்)

சபே: அதுக்கு என்ன இளிப்பு வேண்டியிருக்கு?

கரே: ஸார்.... இப்படி உட்காருங்க. நான் எல்லாம் விவரமா சொல்றேன்.

சபே: எல்லாம் நானே விவரமா தெரிஞ்சுக்கிட்டேன். இங்கே இத்தனை நேரம் நீங்க



பேசினதைப் பூரா கேட்டுக்கிட்டுத்தான் இருந்தேன். அதுக்கு முன்னாலேயே என் பெட்டியிலிருந்த இந்த லெட்டரையும் படிச்சாச்சு......

(சுரேஷ் தேடி அலைந்து கொண்டிருந்த இன்லண்ட் லெட்டரைக் காண்பிக்கிறார்.)

கரே: அப்பாடி! அந்த லெட்டரும் கிடைச்சாச்சு. இனிமே உங்களுக்கு ஒண்ணும் சொல்ல வேண்டியது இல்லே.....

நாக: இனிமே நிம்மதிடா !

சபே: இரண்டு பேருமா என்னை இத்தனை நாள் ஏமாத்தினீங்க !

நாக: யாராவது ஏமாந்தால்தானே ஸார், எனக்குப் பணம் கிடைக்கும்?

சபே: யூ ஷட் அப் ! நீ சாதாரணமா பேசுறுலே சித்தப் பிரமை பிடிச்ச மாதிரிதான் இருக்கு.

நாக: தாங்க்ஸ்.....

கரே: ஸார், நீங்க கோபிச்சுக்கக் கூடாது. கனகசபை சொன்னபடி பத்தாயிரம் ரூபாய் சம்பாதிக்க வேறே வழி தெரியலே!

சபே: நான்தான் ஏமாந்தவன் அகப்பட்டேனா?

நாக: ஆமாம், ஸார் !

கரே: அப்படியில்லே, ஸார்! நீங்க உதவி பண்ணுவீங்கன்னு ஒரு தைரியம்.

சபே: எதுக்கு.... நேரிடையா விஷயத்தைச் சொல்லிக் கேக்கறது.... இப்படி ஏமாத்துவானேன்.....?

கரே: நேரிடையாக் கேட்டா பணத்தைக் கொடுத்திருப்பீங்களா ?

சபே: கொடுத்திருக்க மாட்டேன்.

கரே: அப்ப என்ன பண்றது?

சபே: அப்ப ஏமாத்தறது! நீ முதல்லேயே ஏமாத்திப்புட்டியே? முதல்லே கேட்டுத் தர மாட்டேன்னு அப்புறம் ஏமாத்தணும். அது தானே முறை ?

கரே: ஐ ஆம் சாரி சார்.

நாக: நடந்தது நடந்து போச்சு. நீங்க இதை மனசுலே வைச்சுக்கக் கூடாது !

கரே: ஸார், இதெல்லாம் மாலதி கல்யாணத்துக்காகத்தானே ஸார் செய்தோம். ஆயிரம் பொய் சொல்லியாவது ஒரு கல்யாணத்தை நடத்துன்னு பெரியவங்களே சொல்லியிருக்காங்க.

சபே: நீ சொல்லியிருக்கிற பொய்யை வைச்சுக்கிட்டு நாலு கல்யாணம் நடத்தலாம் !

கரே: இப்ப சத்திக்கு இரண்டு ஏற்படாயிடுத்து. நான்—நிர்மலா..... மாலதி—நாகராஜன் !

சபே: ஓ! அதுவா உன் பிளான்! உம், கல்யாணத்தைப் பண்ணலியே !

கரே: இனிமேல் கல்யாணத்துக்கு என்ன தடை ?

சபே: நாகராஜன் செத்துட்டான்னு மாலதி நினைச்சுக்கிட்டிருக்காளே.... அதை எப்படி மாத்தப் போறே ?

கரே: ஓ! அதுவா..... ஒண்ணும் கஷ்டம் இல்லே ஸார். நீங்க வெச்சுக்கிட்டிருக்கீங்களே லெட்டர் —, அதை மாலதிகிட்டே காமிச்சா அவளுக்கு எல்லாம் விளங்கிடும். எங்க திட்டத்தை நான்தான் அதிலே விளக்கமா எழுதியிருக்கேனே...... பழைய தேதி தபால் முத்திரை வேறே அதிலே இருக்கு..... எப்படி நம்பாமல் இருக்க முடியும்?

நாக: இனிமே கவலையே இல்லே ஸார்!

சபே: சித்தப்பிரமை, நீ ஏன் உளர்றே? இனிமேதான் கவலே.

கரே: ஏன் ஸார்?

சபே: அந்த லெட்டர் இருந்தால்தானே மாலதி நம்புவா?

சுரே: அதான் இருக்கே?

சபே: எங்கே?

நாக: உங்ககிட்டேதான்....

சபே: எங்கிட்ட இருக்கு. வாஸ்தவம். அதனாலே உனக்கென்ன பிரயோசனம்?

நாக: ஏன்? நான் அதை உங்ககிட்டே யிருந்து வாங்கிக் கொண்டு போய் மாலதி கிட்டே குடுத்திடறேன்.

சபே: நீ அதை எங்கிட்டேயிருந்து எப்படி வாங்குவே ?

நாக (சற்றுப் பயந்து): என்ன ஸார், சொல்றீங்க.... கேட்டால் தரமாட்டீங்களா?

சபே: கேட்டுப் பாரேன்.

நாக: ஸார், அந்த லெட்டரைத் தர்றீங் களா ?

சபே: எந்த லெட்டர்?

சுரே: அதான் நீங்க கேக்கச் சொன்னீங் களே......

சபே: என்ன கேட்கச் சொன்னேன்?....

நாக: அந்த லெட்டரைக் கேட்கச் சொன் னீங்க.....

சபே: எந்த லெட்டர்......

நாக: அதான் நான் கேட்டேனே....

சபே: என்ன கேட்டே ?

நாக: அதான் சுரேஷ் லெட்டர், உங்க கிட்டே இருக்கிற லெட்டர், நான் கேட்ட லெட்டர், நீங்க கேட்கச் சொன்ன லெட்டர்..

சபே: மொத்தம் எத்தனை லெட்டர் ? எங்கிட்ட இப்ப ஒரே ஒரு லெட்டர்தான் இருக்கு !

சுரே: விளையாடாதீங்க ஸார்.... அந்த லெட்டரைக் கொடுத்திடுங்க ஸார்.....

சபே: நான் தரமாட்டேன்! ஏன் என்னை ஏமாத்தினீங்க ?

சுரே: எங்க தப்பை மன்னிச்சுடுங்க ஸார்.

சபே: தப்பை மன்னிக்கணுமா, லெட் டரைக் குடுக்கணுமா, எது முக்கியம் உங் களுக்கு ?

நாக: லெட்டரைக் குடுக்கறதுதான் முக்கியம்.

சபே: தப்பை மன்னிக்காம எப்படி லெட் டரைக் குடுக்கறது?

சுரே: சரி, தப்பை மன்னிச்சுடுங்க !

சபே: சரி, மன்னிச்சுட்டேன்.

நாக: லெட்டரைத் தாங்க.

சபே: ஏன் தரணும்?

நாக: எங்க தப்பைத்தான் மன்னிச்சாச்சே!

சபே: அதானே ! அப்புறம் என்ன லெட்டர் அழறது?

நாக: ஸார், லெட்டர் குடுங்க ஸார்!

சுரே: ஸார், ப்ளீஸ் லெட்டர்! லெட்டர்!

சபே: என்னய்யா இது...... லெட்டர், லெட்டர்னு கழுத்தறுக்கிறீங்க.... நான் என்ன போஸ்ட் மேனா?

சுரே: ஸார், அந்த லெட்டர் இல்லாட்டி இந்தக் கல்யாணமே நின்னு போயிடும்.

சபே: நீங்க என்னை ஏமாத்தப் பார்த்த துக்கு அதுதான் சரியான தண்டனை. எங் கிட்ட முதல்லேயே சொல்லியிருந்தா....நம்ம மூணு பேருமா சேர்ந்து கனகசபையை ஏமாத்தியிருக்கலாமே !

சுரே: உங்களுக்கு இவ்வளவு நல்ல எண்ணம் இருக்கும்னு முதல்லேயே தெரி யாம போச்சு.....

சபே: சரி, விடுந்து இண்டாடுங்க. நான் வரேன்....... (லெட்டரைக் காண்பித்து) இது கையிலே இல்லாம இந்தப் பய சாகஸ்னு மாலதிகிட்டே எப்படி நிரூபிக்கப் போறீங்க, பார்த்துடறேன் !

நாக: ஸார்..... ஸார்..... ப்ளீஸ்....என் இருதயத்தைப் போட்டுக் கிழிக்கிறீங்களே ஸார் !

சபே: அய்யய்யோ! ஐ ஆம்ஸாரி.... இருதயத்தையா கிழிச்சுட்டேன்! மகா தப்பாச்சே ! அதுக்குப் பதிலா இந்த லெட் டரையே கிழிச்சிருக்கலாமே!

(பேசிக் கொண்டே லெட்டரைச் சுக்குநூறாகக் கிழித்து ஜன்னல் வழியே எறிந்துவிட்டு வெளியேறுகிறார்.)

நாக: அய்யய்யோ ! போச்சே! லெட்டர் போச்சே !

(காட்சிமுடிவு) (தொடரும்)



# ரங்கண்ணா

ரா. பாலகிருஷ்ணன்

சாமாதான் சேதி கொண்டு வந்தான். நம்பவே முடியவில்லை. வெளித் தாழ்வாரத்தி லிருந்த செருப்பைக் காலில் மாட்டிக்கொண்டு நான் ஆபீசுக்குப் புறப்படவிருந்தேன். தொங் கிய முகத்துடன் சாமா வந்தான்.

''ரங்கண்ணா போயிட்டார், பாலு !''— அழமாட்டாக் குறையுடன் சொல்லி விட்டுப் பிரம்பு நாற்காலியில் துவண்டு சாய்ந்தான். யாரோ என் கன்னத்தில் அறைந்த மாதிரி இருந்தது.

''யாரு.... ரங்கண்ணாவா? நம்ம பாட்டு ஸ்கூல் ரங்கண்ணாவா......?''

''ஆமாம்; மியூசிக் ஸ்கூல் வைச்சு நடத்தி வந்தாரே, அதே ரங்கண்ணாதான்......''— எதையோ பறிகொடுத்தவன் போல் விளக் கினான் சாமா. எனக்கே அப்படித்தானே இருந்தது ?

''என்ன அவருக்கு — திடீரென்று? நேற்று சாயந்திரம்கூடப் பார்த்தேனே.....? முகம் மலரச் சிரித்து விட்டுப் போனாரே....?''—ஒரு நல்ல மனிதரின் பிரிவினால் ஏற்பட்ட வேதனை, அவர் நிர்க்கதியாக விட்டுச் சென்ற குடும் பத்தின் வருங்காலத்தைச் சூழவிருக்கும் பயங்கர இருள் — எல்லாமாகச் சேர்ந்து என்னை நிலைகுலையச் செய்தன.

''திடீரென்று நடந்ததுதான். மாரடைப்பு என்று சொல்லுகிறார்கள். போய் ஒரு மணி இருக்கும். காலையில் அந்த வீட்டுப் பக்கம் அழுகைக் குரல் கேட்டது. என் தம்பி ஓடிப் போய்ப் பார்த்து விட்டு வந்து தகவல் சொன்னான். இப்போ — நீ நம்ப முடியாமல் தயங்கறே பாரு — அதே தவிப்புடன்தான் நானும் ரங்கண்ணாவின் வீட்டுக்கு ஓடினேன். என்ன செய்வது, பாலு! நமக்குப் பிடிக்காத செய்திகள் எல்லாமே பொய்யாகி விடுவ தில்லையே......?''

''இனிமேல் அந்தக் குடும்பத்தின் கதி...?'' காலில் மாட்டிய செருப்புக்களைக் கழற்றி விட்டு மேல்துண்டை எடுத்துப் போட்டுக் கொண்டு கிளம்பினேன்.

''அது எப்படியோ..... பின்னால் நடக்க வேண்டியது இருக்கட்டும். இப்போ ரங்கண்ணா வைக் கரையேற்றியாக வேண்டும். பணம் ஏதாவது இருந்தால் எடுத்துக் கொண்டு கிளம்பு'' என்றான் சாமா.

பர்சைத் திறந்து பார்த்துத் திருப்தி யுடன் மூடிப் பையில் வைத்துக் கொண்டு சாமாவுடன் புறப்பட்டேன்.

'' ரங்கண்ணாவுக்கு வேண்டியவர்கள் ஐந்தாறு பேர்களைப் பார்த்துவிட்டு வரு கிறேன் என்று சுந்தரம் கிளம்பிப் போனான். நான் இங்கே புறப்பட்டு வந்தேன். காரியம் நடந்தேற வேண்டுமே?'' என்றான் சாமா.

''ரங்கண்ணாவின் சம்சாரத்துக்கும் உடம்பு சரியில்லை என்று சொல்லிக் கொண்டார் களே. இந்த அதிர்ச்சியை எப்படித் தாங்கிக் கொள்வாள், பாவம்!'' என்றேன் மிகுந்த கவலையுடன்.

சாமா சொன்னான்: ''அதுதான் பெரிய கஷ்டம் ! மூணு வருஷத்துக்கு முன்பு பாரிச வாயு வந்தது அந்த அம்மாளுக்கு. அந்த 'ஸ்ட்ரோக்'லே பாயும் படுக்கையுமா விழுந்தவள்தான். இப்பவும் படுத்துண்டுதான் இருக்கா. 'அவர் பக்கத்திலே என்னை இழுத் துப் போடுங்கோ'ன்னு புலம்பினாள். ஜமுக் காளத்தோடு சேர்த்து அவளை இழுத்து ரங்கண்ணா பக்கத்திலே கிடத்தின போது, இழுத்துப் போட்ட பெண்மணிக்கே அழுகை வெடிச்சுண்டு வந்துட்டுது.''

''பாவம்!''

''பாவந்தான் ! இல்லேன்னா, யாருக்கும் ஒரு கெடுதல் நினைக்காமே ஊருக்கு உபகாரியா வாழ்ந்தவர் இப்படிப் போவானேன்?'' என் றான் சாமா.

''ரங்கண்ணாவுக்கு உறவினர்கள் யாரு மில்லையா, இங்கே?''

''அவருக்கு உறவு என்று சொல்லக் கூடியவர் சாட்சாத் தியாகப் பிரம்மம் ஒருத்தர்தான். வேறு நெருங்கிய உறவு, தூரத்து உறவு என்று யாருமில்லே. 'முன் கையை நீட்டி உதவி செய்யக் கூடிய உறவு எதுவுமில்லே. மேலே ஆக வேண்டியதைப் பார்க்கலாம்னு அவர் சம்சாரமே சொல்லி விட்டா'' என்று நிலைமையை விளக்கினான் சாமா.

''ஏன் சாமா? நாற்பது வயது இருக்குமா, ரங்கண்ணாவுக்கு?''

''நாலுகூட.''

''இதென்ன ஒரு வயசா? இன்னும் மூணு மாமாங்கம் இருக்கலாம் அவர்'' என்றேன்.

''இருந்திருக்க வேண்டும் — அந்தக் குடும்பம் இருக்கிற நிலைமைக்கு, அவர் இருந்திருந்தா எவ்வளவோ மேலாயிருக் கும். அதைத்தான் சொல்ரு, அவர் சம்சார

றும். அவர் இருந்து நான் போயிருக்கக் கூடாதா? என் உடம்பு தேறவே போறதில்லே. இப்படியே கிடந்து ஒரு நாள் போக வேண்டிய பிராணன், இப்பவே போயிருக்கலாம். யாருக்குப் பிரயோசனம் என்னாலே ? கைக் குழந்தை மாதிரி, எடுப்பார் கையைப் பார்த்துண்டு நான் இப்படிக் கிடக்கிறதிலே எல்லாருக்கும் உபத்திரவம்தான். என்னைக் கொண்டு போயிருக்கக் கூடாதோ?' என்று அந்த அம்மா புலம்பறதைக் கேட்டபோது எனக்கே துக்கம் தாளமுடியல்லே.... நியாயந்தானே, பாலு! ஒரு விதத்திலே நியாயமாத்தான் படறது'' என்றான் சாமா.

நியாயமோ, அநியாயமோ? நல்லவர்களை அல்பாயுசிலே 'அழைத்துக் கொண்டு' விடும் இறைவனின் இந்த ஒரு தத்துவம் மட்டும் எனக்கு விளங்கவேயில்லை. யாருக்குத்தான் விளங்கியிருக்கப் போகிறது?

ஒரு பள்ளிக்கூடத்தை நிறுவி, பதினைந்து ஆண்டுகளாகப் பெண்களுக்குப் பாட்டுச் சொல்லிக் கொடுத்து வந்திருக்கிறார், ரங்கண்ணா. சம்பளம் என்று வரையறுத்து வசூலிப்பதில்லை. அவரவர்கள் சக்திக்கேற்ப, கொடுத்ததை வாங்கிக் கொண்டு திருப்தியடைகிற சுபாவம். நாளைக்கு எப்படியிருக்குமோ, என்ற கவலையே இல்லாத கர்மயோகி. ஓரளவு பரிச்சயமானவர்கள், நண்பர்கள், கடைக்காரர்கள் — எல்லாருக்குமே அவர் 'ரங்கண்ணா'தான். ரங்கநாதன் என்ற இயற்பெயரே மறைந்து விட்டது ! லோகாயதமான பிரச்சினைகள் எதனோடும் ஒட்டாத போக்கு. நாதோபாசனையில் லயித்து ஒளியேறிய கண்கள். எப்போதும் முகம் முழுவதும் மலர்ந்து விகசிக்கும் அந்தச் சிரிப்பு, கள்ளங்கவடு இல்லாத வெள்ளைச் சிரிப்பு ரங்கண்ணாவை விட்டு அகன்றதே இல்லை. தன்னோடு இரண்டறக் கலந்து ஐக்கியமாகிவிட்ட வறுமையை ஒரு பொருட்டாகவே கருதாத மனப் பக்குவம் பெற்றவர். அந்தச் சூழ்நிலையிலும் அவரால் எப்படித்தான் சிரிக்க முடிந்ததோ?

சாமா பேசி என்னுடைய சிந்தனையைக் கலைத்தான்:

''அதோ பார்! அவருடைய மாணவிகள் அத்தனை பேரும் அதற்குள் எப்படியோ செய்தியறிந்து அவர் வீட்டு வாசலில் வந்து கூடிவிட்டார்கள்! இத்தனைக்கும் அவர் என்ன, ஒரு மகாவித்துவானா? சங்கீத மேதையா ? அன்பை அள்ளி அள்ளி வழங்கினார். அது பன்மடங்காகத் திரும்பி வந்திருக்கிறது. பெண்கள் தப்பும் தவறுமாகப் பாடினால்கூட ஒரு கடுமையான சொல்லை உதிர்க்க மாட்டார். சிரித்துச் சிரித்துத் திருத்திவிடுவார். தான் கற்ற அளவு, பிறருக்குக் கசக்காமல், கசடறக் கற்பிக்கும் ஆற்றல் கைவரப்பெற்றவர் ரங்கண்ணா !''

கலங்கிச் சிவந்த கண்களுடன் சுந்தரம் எங்கள் அருகில் வந்தான். ''சாமா சார்! ஒரு 'ரவுண்டு' போய் ஏழெட்டு பேரைப் பார்த்து விட்டு வந்தேன். நூற்றுமுப்பது ரூபாய் தேறித்து......'' என்றான். சாமா ஒரு கத்தை ஒரு ரூபாய் நோட்டுகளைச் சுந்தரத்திடம் கொடுத்து, ''இதையும் வைத்துக் கொள். சிக்கனமாகச் செலவு பண்ணு !'' என்றான். நானும் இருபது ரூபாயை எடுத்துக் கொடுத்தேன். இன்னும் இருந்தால் கொடுத்திருப்பேன். ரங்கண்ணாவுக்காக எவ்வளவு கொடுத்தாலும் சிரமமாகவே தோன்றாது.

சாமா என் காதோடு சொன்னான் : ''சுந்தரத்தின் கையைப் பிடித்துக் கொண்டிருக்கிறான் பார்த்தாயா — அந்தப் பயல்தான் ரங்கண்ணாவின் கடைக்குட்டி.''

''ரங்கண்ணாவுக்கு ஒரே பிள்ளைதானே?''

''ஆமாம். மற்ற இரண்டும் பெண்கள். அதோ— குடத்தை எடுத்துக்கொண்டு போகிறாள் பார்—அதுதான் மூத்த பெண் ஜானகி!''

சாமா சுட்டிக் காண்பித்த பெண்ணைப் பார்த்தேன். அப்போதுதான் முதல் தடவையாகப் பார்த்தேன். ரங்கண்ணாவின் சாயல்தான். அதே பொன்னிற மேனி. எழிலின் வடிவமாக விளங்குகிறாள். வறுமையால் மாற்றுக் குறையாத எழில். அழுதழுது முகமே வீங்கிவிட்டது. பாவம். பதினெட்டு வயதிருக்கும் இந்தப் பெண்ணுக்கு ஒரு கல்யாணத்தைச் செய்து வைத்துவிட்டுப் போயிருக்கலாம் ரங்கண்ணா.

''அடுத்ததும் பெண்தான். ஹைஸ்கூலில் படிக்கிறாள். இனிமேல் இவர்களுக்கெல்லாம் ஒரே ஆதரவு சுந்தரம்தான்'' என்றான் சாமா, ஒரு பெருமூச்சுடன்.

விசித்து, விம்மி, அரற்றும் அவலக் குரல்களுக்குச் செவி சாய்க்க மாட்டாத நிலையில் கிடந்தது, ரங்கண்ணாவின் உடல். விழிகள் நிரந்தரமாக மூடிக்கொண்டு விட்ட நிலையிலும் அவர் முகத்தை விட்டு மறையாத அந்த மந்தஹாசம்... அல்லது அது என் பிரமைதானா?

''அப்படியானால், பள்ளிக்கூடம் சுந்தரத்தின் பொறுப்பில் தொடர்ந்து நடைபெறப் போகிறதா? சுந்தரத்தைத் தவிர வேறு யாரோ ஓர் இளைஞரும் ரங்கண்ணாவுக்கு உதவியாக இருந்து வருவதாகக் கேள்விப்பட்டேனே? அவரும் இதை நடத்துவதில் சிரத்தையுள்ளவர்தானே?''

''பள்ளிக்கூடம் சுந்தரத்தின் பொறுப்பில் நடந்து வரும் என்றுதான் நினைக்கிறேன். நீ குறிப்பிட்ட மற்றோர் இளைஞன் ஆனந்தன். அவன் சுந்தரத்தின் நிலையில் இல்லை. சங்கீதப் பள்ளியிலிருந்து சுந்தரம் எவ்வித லாபமும் அடையவில்லை. என்றாலும், ஏழெட்டு டியூஷன்கள் வைத்துக் கொண்டிருக்கிறான். அந்த வரும்படியைக் கொண்டு ஏதோ காலம் தள்ளி வருகிறான். அந்த வருமானத்திலும் ஒரு பகுதி ரங்கண்ணாவின் குடும்பத்துக்குப் போய்ச் சேர்ந்து விடுகிறது. ரங்கண்ணாவின் கடைக்குட்டி அணிந்துகொண்டிருக்கும் சொக்காய், டிராயர் எல்லாம் சுந்தரம் தன் சொந்தப் பணத்திலிருந்து வாங்கிக் கொடுத்தவைதான். அவனுக்கென்ன? ஒற்றைக் கட்டை. இரவு, மியூசிக் ஸ்கூல் கொட்டகையிலேயே படுத்துவிடுகிறான். அந்தச் சின்னப் பயலுக்கும் சுந்தரத்துடன்தான் வாசம். அவ்வளவு ஒட்டுதல்!'' என்று சாமா சொன்னதும், சுந்தரம் என் மதிப்பில் வெகுவாக உயர்ந்து நின்றான்.

''அந்த ஆனந்தன்...?''

சாமா தணிந்த குரலில் சொன்னான்:- ''அவன் கொஞ்சம் பெரிய இடத்துப் பிள்ளை. ஒரு கம்பெனியில் சேல்ஸ்மேன் வேலை.

ASP/GM/AN-2-TAM

# அனஸின்

சிறந்தது ஏனெனில் அது
4 வழிகளில் வேலை செய்கிறது



1. தலைவலியிலிருந்து விரைவாக விடுதலையளிக்கிறது
2. ஜலதோஷத்தின்போது தோன்றும் ஜுரத்தைக் குறைக்கிறது
3. புருவலைத் தடுக்க உதவுகிறது
4. தசைவலியினின்று நிவாரணமளிக்கிறது

அனஸின் டாக்டரின்
மருந்துவயோசனைப்படி
தயாரிக்கப்பட்டதைப்
போன்ற பத்திரமான
மருந்துகளின் சேர்க்கையாகும்






Registered user: GEOFFREY MANNERS AND COMPANY LIMITED

## ரேடியோகிராம்கள் விலை உயர்ந்தவை என்றே இன்னமும் நீங்கள் நினைத்தால்

முற்றிலும் டிரான்ஸிஸ்டர்கள் பொருந்திய 'கான்க்வெஸ்ட்' எங்கும் எளிதாக எடுத்துச் செல்லத்தக்க ரேடியோகிராம் மட்டுமல்ல; மிகக் கவர்ச்சியான அளவு குறைந்த விலையான ரூ. 610/-க்கும் கிடைக்கும்.

அகில உலகிலும் அதி நவீனமான பாணியில் எச்எம்வியினால் அமைக்கப்பட்டுள்ள 'கான்க்வெஸ்ட்', 4-ஸ்பீட் ரிகார்ட்-பிளேயருடன் 3 வேவ் பாண்டுகள் உடைய சக்தி மிக்க ரேடியோவையும் சேர்த்துத் தருகிறது; இவை இரண்டும் இரு வர்ணங்கள் இசைந்தமைந்த கைக்கடக்கமான பெட்டியில் பொருந்தியுள்ளன.

உல்லாச பிரயாணத்துக்கு உங்களுடன் 'கான்க்வெஸ்ட்' எடுத்துச் செல்லுங்கள்; அங்கும் சரி, உங்கள் வீட்டின் அத்தியந்தச் சூழ்நிலையிலும் சரி. இன்னும் அதிக விலை படைத்த ரேடியோகிராமிடமிருந்தே நீங்கள் எதிர்பார்க்கக்கூடிய சாதனைச் சிறப்பையும் ஒலித்தரத்தையும் அது உங்களுக்கு அளிக்கிறது.

**ரூ. 610/-க்குக் கிடைக்கும்**
**எச்எம்வி**
**'கான்க்வெஸ்ட்'**
**உங்களுக்கு வியப்பூட்டும்**

GC-87 TAM

அண்மையிலுள்ள எச்எம்வி விற்பனையாளரிடம் வந்து 'கான்க்வெஸ்டை'ப் பாருங்கள். அதை வாங்காமல் கடையிலிருந்து திரும்ப உங்களுக்கு மனம் வராது. மாடல் கெ. 5863-இன் விலை (எக்ஸைஸ் வரி உட்பட) ரூ. 610/- தான்.




# His Master's Voice

சங்கீதத்தில் ரொம்ப ஈடுபாடு. பத்து வருஷங்களுக்கு முன்பு ரங்கண்ணுவின் குணம் அவனைக் கவர்ந்து விட்டது. நாளடை வில் அது ஒரு பக்தியாகவே வளர்ந்துவிட் டது. ஒழிந்தபோதெல்லாம் பள்ளிக்கூடத் துக்கு வந்து ரங்கண்ணுவுக்கு உதவி செய் வான். பையனுக்கு நல்ல சாரீர சம்பத்து. அவன் பாட்டுச் சொல்லிக் கொடுக்கும் போதே அனுபவித்துச் சொல்லிக் கொடுப் பதை நானே கேட்டிருக்கிறேன்.''

''யாரது? நான் பார்த்ததில்லையே?''

''பார்த்திருப்பாய். ஆளைப் பார்த்தால் தெரிந்து கொள்ளுவாய்.''

''அவன் இங்கே வரவில்லையா? ஒருகால் சேதி தெரியாமல் இருக்குமோ? ரங்கண்ணு விடம் அவ்வளவு பக்தியுள்ளவன் வராமல் இருப்பானா?'' என்றேன்.

சாமா சுற்று முற்றும் பார்த்து விட்டு, ''நானும் வந்தது முதல் பார்க்கிறேன். அவன் வந்திருப்பதாகத் தெரியவில்லை. சுந்தரத்தைக் கேட்டால் விவரம் தெரியும்'' என்றான்.

''இதைக் கேட்பதற்காக நீ சுந்தரத்தைக் கூப்பிட வேண்டாம்'' என்று சாமாவைத் தடுத்து விட்டேன்..

ரங்கண்ணுவின் சடலம் இறுதி ஊர் வலத்துக்குத் தயாராகி விட்டது. அந்த அவலத்தைப் பறை சாற்றுவதே போல், துயரத்தில் தோய்ந்த குரல்களின் ஓலம் ஓங்கி வெளிப்பட்டுத் தெரு முழுவதும் எதி ரொலித்தது. அதையும் மீறி, ''ஐயோ, அண்ணு!'' என்ற ஒற்றைக் குரல் எங் கிருந்தோ சீறிக் கொண்டு வந்தது. குரல் வந்த திசை நோக்கித் திரும்பினேன்.

''அதோ — ஓடிவரான் பார்... அவன்தான் ஆனந்தன். நீ பார்த்ததில்லை...?'' என்று சாமா கேட்டான்.

''உம், பார்த்திருக்கிறேன். ஆனால் அதிகப் பழக்கமில்லை.''

சரியாக உடுத்துக் கொள்ளாததால் அவிழ்ந்து தொங்கிய வேஷ்டியை இடது கையால் பிடித்துக் கொண்டே ஓடிவந்தான், அந்த இளைஞன். நெற்றி நரம்புகள் புடைத் திருந்தன. உள்ளத்தின் சோகமெல்லாம் வியர்வையாகப் பெருகி வடிந்துகொண் டிருந்தது.

சுந்தரம் அவனை அணைத்தவாறு, ''சம யத்துக்கு வந்து சேர்ந்தே, ஆனந்தா! இப்போ நீ வரலேன்னு... அப்புறம் உனக்கு யாராலே என்ன சமாதானம் சொல்ல முடி யும்?'' என்றான்.

ரங்கண்ணுவின் ஊர்வலம் நகர்ந்துகொண் டிருந்தது.

''இதுக்குத்தானு இத்தனை அவசரமாத் திரும்பி வந்தேன். என் திட்டப்படி நான் நாளைக்குத்தான் கடலூரை விட்டுப் புறப் பட்டிருக்கணும். போன காரியம் சீக்கிரமா முடிஞ்சு போச்சு. கிளம்பிட்டேன். ரயிலை விட்டு இறங்கி ஸ்டேஷனுக்கு வெளியே வந்தேன். தற்செயலாக ஒரு சிநேகிதன் காரிலே வந்தான். வீட்டிலே கொண்டுவந்து விட்டான். 'வீடு பூட்டிக் கிடக்கேன்னு' யோசிச்சு நிற்கிறப்போ எதிர் வீட்டுக் கிழவர் தகவல்சொன்னார். எனக்குக் கைகால் ஓடல்லே. 'சீக்கிரம் போ... எடுத்துடப்



''ஐயோ பாவம்! ரெண்டு நாளாக உன் கணவர் படுக்கையை விட்டு எழுந்திருக்கவில்லை, எழுந்திருக்க வில்லை என்கிறயே, என்ன உடம்பு அவருக்கு?''

''ஒரு ஸ்பூன்கூட காப்பிப் பொடி இல்லே. பெட் காப்பி வேண்டுமாம்!''

போறு....'ன்னு கிழவர் சொன்னதும் ஓடி வந்தேன்....'' ஓடிவந்த களைப்பு நீங்காமல் மூச்சுத் திணறப் பேசிக் கொண்டே நடந் தான் ஆனந்தன்.

சுந்தரம் சொன்னான்: ''யாருமே எதிர் பார்க்கல்லே. மார்வலிக்கிறதுன்னு அண்ணு சொன்னாராம். குடிக்க ஜலம் கொண்டு வர லாம்னு உள்ளே போயிருக்கா... திரும்பி வரதுக்குள்ளே...'' மேலே பேசமுடியவில்லை அவனால். திரடலான ஸ்வரக் கோவைகளை யெல்லாம் அநாயாசமாகப் புரட்டிக் கொட் டிப் பழகிய நா, அதைச் சொல்லக் கூசி, அசைய மறுத்தது. சொன்னால்தானா...?

ஃ ஃ ஃ

ரங்கண்ணு மறைந்து மாதங்கள் பல ஓடி விட்டன. அவரோடு நெருங்கித் தொடர்பு கொண்டிருந்த சிலரைத் தவிர மற்றவர்களின் நினைவிலிருந்து அவர் மறைந்து தேய்ந்து விட்டார். நானும் கூடத்தான். எப்போ தாவது ஒரு தடவை மோகனப் புன்னகை தவழும் அந்த முகம் என் மனக் கண்ணின் முன் நிழலாடும். அந்த நிழலாட்டமும் நீண்ட நேரம் நிலைப்பதில்லை. நல்லதோ, கெட்டதோ — எதையும் காலம் மறக்கச் செய்து விடுகிறது. காலத்தின் கருணை என்று தான் கூறவேண்டும். நினைவுகளின் தேய்வி னால் கிடைக்கக் கூடிய இந்த ஆறுதல் இல்லாவிட்டால் மனித வர்க்கம் சோகத்தி லாழ்ந்து நிரந்தரமாகச் செயலிழந்துவிடுமே?

ரங்கண்ணு நிறுவிய 'மியூஸிக் ஸ்கூல்' தொடர்ந்து நடக்கிறது. சுந்தரமும் ஆனந்த னும் முன்னைவிடத் தீவிரமாகப் பள்ளியின் நிர்வாகத்தில் கவனம் செலுத்தி வருகிறார்கள். பள்ளிக்கூடத்தில் வருவாகும் சம்பளத் தொகை முழுவதையும் ரங்கண்ணுவின் குடும்பத்துக்கே அளித்து வருகிறான் சுந்தரம். தனக்குப் பிறகும் இப்படியெல்லாம் நடக்கும்

என்பது ரங்கண்ணாவுக்கு உள்ளுணர்வாகத் தோன்றியிருக்குமோ என்னவோ? ரங்கண்ணாவின் மனைவி படுத்த படுக்கையாகச் சாவோடு போராடிக் கொண்டிருக்கிறாள்.. அல்லது அவளது போராட்டம் வாழ்வோடு தானா....? வாழ்க்கையில் பற்றிழந்த பின் சாவோடு ஏன் போராட்டம்? ரங்கண்ணாவின் கடைக்குட்டி சுந்தரத்தோடு முன்னினும் நெருக்கமாகப் பிணைந்து விட்டான். அம்மா, அக்காள் — யாருமே தேவையில்லை அவனுக்கு. சுந்தரம்தான் எல்லாம்.. இவையனைத்தும் சாமா அவ்வப்போது கூறிய தகவல்கள்.

இந்த நிலையிலேதான் சாமா ஒரு நாள் வீட்டுக்கு வந்தான். அவன் முகத்தில் குறும்புச் சிரிப்பு விளையாடியது.

''பாலு! விஷயம் தெரியுமா? லேடஸ்ட் நியூஸ்!''

''போர்முனைச் செய்தியா...? இப்பத்தான் பேப்பரை...''

சாமா இடைமறித்து, ''நம்ம ஆனந்தன் சமாசாரம்.... ஆள் பெரிய அழுத்தக்காரன். ஆளுக்குள்ளே ஆளிருக்கான்'' என்றான்.

''ஆனந்தனுக்கு என்ன? அழுத்தக்காரனா இருந்தா அவன்வரைக்கும்...'' ஆர்வத்தை அடக்கிக் கொண்டு அசுவாரசியத்துடன் கூறினேன்.

''ரங்கண்ணாவின் மூத்த பெண் ஜானகியை அவன் கல்யாணம் செய்துகொள்ளப் போகிறான். முகூர்த்தம்கூட வைச்சாயிடுச்சாம். இதுவரைக்கும் யாரிடத்திலும் ஒரு வார்த்தை வெளியிடல்லே, அவன்...'' சாமா கூறியதைக் கேட்டதும் எனக்கு முதலில் திகைப்புத்தான் ஏற்பட்டது. உடனேயே அது திருப்தியாக மாறிவிட்டது.

''போகட்டும்; அந்தக் குடும்பத்தை நசுக்கிக்கொண்டிருந்த ஒரு பெரிய பளு நீங்கி விட்டது — இல்லையா, சாமா?''

''நீ அப்படி நினைக்கிறே... எல்லாரும் அப்படி நினைக்கணுமே? சுந்தரத்துக்கு இதிலே ரொம்ப மனத்தாங்கல். ஆனந்தனிடம் இரண்டு நாளா அவன் சரியாப் பேசறதுகூட இல்லே'' என்று சாமா கூறியதைக் கேட்டு நான் துணுக்குற்றேன்.

''சுந்தரம் இதற்காக ஏன் வருத்தப்படணும்? எல்லாரையும் விட அவனல்லவா அதிக மகிழ்ச்சியடையணும்? அந்தக் குடும்பப் பொறுப்பை அவனே நிர்வகிக்கிறான்னுதானே நீ சொன்னே? இப்போ சுந்தரத்துக்கு இந்தக் கல்யாணப் பொறுப்பும் விட்டுது; குடும்பத்திலே ஒரு நபரும் குறைஞ்சுடும், அவன் சந்தோஷம்னா அடையணும்...?' என்றேன்.

''ரங்கண்ணா இறந்து இன்னும் ஒரு வருடம் பூர்த்தியாகவில்லே. அதற்குள் அவர் பெண்ணை ஆனந்தன் கல்யாணம் செய்து கொள்வது சுந்தரத்துக்குப் பிடிக்கவில்லே. சுந்தரத்துக்கு மட்டுமென்ன? பொதுவாக யாருமே இதைச் சரியென்று ஒப்புக்கொள்ள மாட்டார்கள்'' என்றான் சாமா.

''அந்தப் பெண் ஜானகிக்கு இதில் சம்மதம்தானே?''

''சம்மதமில்லாமலா முகூர்த்தம் வைத்திருக்க முடியும்?''

''ரங்கண்ணாவின் சம்சாரம் என்ன சொல்கிறாள்....?''

''சுந்தரத்தைக் கேட்டுப் பாரேன்...விவரமாக எல்லாம் சொல்லுவான்'' என்றான் சாமா.

''அதுதான் சரி. சுந்தரம் ஸ்கூலில்தானே இருப்பான் இப்போ...? புறப்படு!'' என்றேன். சாமா எழுந்தான்.

நாங்கள் ரங்கண்ணாவின் இசைப் பள்ளிக்குள் நுழைந்ததும் நுழையாததுமாக ஆனந்தனும் அங்கு வந்து சேர்ந்தான். அவன் கையில் ஒரு காகிதப் பொட்டலம் இருந்தது.

''நமஸ்காரம், சார்!'' என்றான் ஆனந்தன் எங்களை நோக்கி. நானும் கைகூப்பினேன்.

''கையிலே என்ன அது, ஆனந்தன்? இன்விடேஷனா?'' என்றான் சாமா.

''சரியாகச் சொல்லி விட்டீர்களே! என் கல்யாணப் பத்திரிகை! முதலில் சுந்தரத்துக்குக் கொடுத்துவிட வேண்டும் என்று வந்தேன்'' என்றான் ஆனந்தன்.

பேச்சுக் குரல் கேட்டு எழுந்து வந்த சுந்தரம் எங்கள் மூவரையும் கண்டு ஒரு கணம் திகைத்து நின்ற பின், ''வாங்கோ...'' என்றான் சிரிப்பை வரவழைத்துக் கொண்டு.

ஆனந்தன் கல்யாண அழைப்பிதழ்களை ரங்கண்ணாவின் புகைப்படத்தின் கீழ் வைத்து விட்டு வணங்கினான். பிறகு ஒன்றை எடுத்து உறையில் போட்டுச் சுந்தரத்திடம் நீட்டினான். சுந்தரம் தயங்கியவாறே அதைக் கைநீட்டி வாங்கினான்.

''மிஸ்டர் ஆனந்தன்! ரங்கண்ணாவின் சம்சாரத்துக்கு இந்த ஏற்பாட்டில் சம்மதந்தானே? இவன் யார் கேட்பதற்கு என்று நினைக்கக் கூடாது. உங்கள் நண்பர் சுந்தரத்துக்கு இது விஷயமாக ஏதோ மனத்தாங்கல் என்று கேள்விப்பட்டேன்...''என்று நான் கூறும்போதே ஆனந்தன் குறுக்கிட்டு, ''சாமா சொல்லியிருப்பார்!'' என்றான்.

''எனக்கென்ன சார்...'' என்றான் சுந்தரம், விரக்தியாக. குரல் கம்மியிருந்தது.

ஆனந்தன் சொன்னான்: ''சார்! ரங்கண்ணாஜியை நானும் சுந்தரமும் குருவாக மதித்துப் போற்றி வந்திருக்கிறோம். சுந்தரம் அவரைத் தெய்வமாகவே மதிப்பவன் என்று எனக்குத் தெரியும். 'அவர் மறைந்து ஒரு வருஷம் ஆவதற்குள் என்ன அவசரம்?' என்று ஜாடையாகச் சொன்னான். அவசரம் எனக்கில்லே. ஜானகிக்கும் இல்லே. அவள் தாயார் வற்புறுத்தலின் பேரில்தான் நான் இப்போது இதற்கு இணங்க வேண்டியதாயிற்று. 'அவருக்குத்தான் அந்த பாக்கியம் கிடைக்கவில்லே. எனக்காவது இந்தப் பெண் மாலையும் கழுத்துமா இருக்கிறதைப் பார்க்கிற பாக்கியம் கிடைக்கக் கூடாதா அப்பா? என் மூச்சு இனிமே ரொம்ப நாள் தங்காது; இனிமே நான் கணக்குத்தான்' என்று ஜானகியின் அம்மா சொன்னதைக் கேட்டதும் எனக்கு வேறே எந்த யோசனையும் புலப்படல்லே. யார் என்ன நினைத்துக் கொண்டாலும் பரவாயில்லே என்று உறுதியா முடிவு செய்துட்டேன். அவசரப்பட்டது நான் இல்லே சார்! அதை நீங்களும் சுந்தரமும் புரிந்து கொள்ளணும்.''-நாத் தழுதழுக்கக் கூறினான். அவன் நிலைமை எனக்குப் பரிதாபமாக இருந்தது.

நான் சுந்தரத்தைப் பார்த்தேன். அவன் முகத்தில் எவ்வித உணர்ச்சியுமில்லை. ''அவர்களே அப்படி ஆசைப்படுகிறபோது எனக்கென்ன சார், ஆட்சேபம்?'' என்றான்.

''சுந்தரம்! ஆனந்தனைவிட நல்ல வரன் ஞானகிக்குக் கிடைக்குமா? அந்தக் குடும்பம் இருக்கிற நிலையில் ஆனந்தனின் இந்த முடிவு ஒரு வரப்பிரசாதம் என்றுதான் எனக்குப் படுகிறது. ரங்கண்ணாவிடம் உள்ள அபிமானம் காரணமாக ஆனந்தன் அவர் பெண்ணைத் தம் சொந்தச் செலவில் மணந்து கொள்ள இணங்கினான் என்றால் — அதை ஒரு தியாகம்னு சொல்லலாம்'' என்றேன்.

ஆனந்தன் அடக்கத்துடன், ''அப்படியெல்லாம் பெரிய வார்த்தைகளைப் போடாதீர்கள், சார். ஞானகியை மணந்துகொள்ளும் ஆசை எனக்கு ரொம்ப நாட்களாகவே உண்டு. பணம் இல்லேங்கிற ஒரு குறைதானே ஸார், அவளுக்கு? அதற்கு ஈடு செய்யத்தான் அழகும் சங்கீதமும் இருக்கே?'' என்றான்.

சுந்தரம் எதுவும் கூறவில்லை.

சாமா சுந்தரத்தை நோக்கி, ''பிராப்தம் இருக்கு, நடக்கிறது. சீக்கிரம் நடக்கிறதே நல்லது. இன்னும் ஒரு ஆறு மாதம் போனா, ஆனந்தன் மனசு மாறினாலும் மாறலாம். வேறே பணக்கார அழகியா ஒருத்தி...'' என்று சொல்லும்போதே ஆனந்தன் அவனை மேலே பேசவிடாமல் குறுக்கிட்டான்.

''சாமா சார்! அந்தப் பேச்சுக்கே இடமில்லே. என் மனசு நீங்க நினைக்கிற மாதிரி அவ்வளவு சுலபமா மாறிவிடாது. நான் இந்த முடிவுக்கு வந்ததற்கு வேறே ஒரு முக்கியமான காரணமும் உண்டு'' என்றான்.

''நான் ஏதோ தமாஷுக்குச் சொன்னேம்பா! நீ வித்தியாசமா நினைக்காதே!''

ஆனந்தன் அதைக் காதில் வாங்கிக்கொள்ளாமல், ''சுந்தரத்துக்கு இப்பவே முப்பது வயசு ஆகிறது. ஏறக்குறைய அவனும் ஒரு குடியும் குடித்தனமுமா வாழ வேண்டாமா? எவ்வளவு காலம்தான் இந்தக் குடும்பத்தின் பளுவைச் சுமந்து கொண்டிருப்பான், பாவம்! ஞானகி மூலமா அந்தக் குடும்பத்தோடு எனக்கு இப்படி ஒரு உறவு ஏற்பட்டுவிட்டா அப்புறம் அந்தப் பொறுப்பு என்னுடையதாகிவிடும். நாலு டியூஷன்லே கிடைக்கிற ஐம்பது அறுபது ரூபாயை வச்சுண்டு சுந்தரம் ஒண்டிக் கட்டையா சிரமப்படறதைப் பார்த்துண்டுதான் வரேன். அவன் கஷ்டம் எனக்குப் பொறுக்கல்லே, சார்... அதோ எதிரிலே இருக்கிற ரங்கண்ணா சாட்சியா சொல்றேன். மியூசிக் ஸ்கூல்லே கிடைக்கிற வரும்படி முழுவதையும் அவனே அனுபவிக்கணும். இனிமேலாவது அவன் கொஞ்சம் சௌகர்யமா வாழணும்னுதான் நினைக்கிறேன்.'' அவனுக்கு அழுகை வெடித்துக் கொண்டு வந்தது. சிரமப்பட்டு அடக்கிக் கொண் ான்.

சுந்தரத்தின் கண்கள் கலங்கி நின்றதையும் கவனித்தேன். இப்போதுதான் அவன் முதல் தடவையாக ஆனந்தனின் உள்ளத்தைப் புரிந்து கொள்ளுகிறானோ?

ஆனந்தன் என்னையும் சாமாவையும் மாறி மாறிப் பார்த்து, ''சொல்லுங்கோ, சார்.... நான் செய்கிறது தவறா? நீங்க அப்படி



''இதற்கு முன் இருந்த மானேஜர் ரொம்ப நல்லவர்ஸார்; எனக்குப் பசிக்கிறது என்று சொன்னால் போதும். உடனே ஸ்வீட், காரம் காப்பி வரவழைத்துக் கொடுத்து விடுவார்!''

நினைக்கிறதாயிருந்தால் என் எண்ணத்தைக் கைவிடத் தயார்'' என்றான் உணர்ச்சியுடன்.

சுந்தரம் நடுங்கிய குரலில், ''உன் முடிவை நான் மனப்பூர்வமா ஏற்றுக்கொள்கிறேன். நானே உடனிருந்து நடத்தி வைக்கிறேன். நீ வருத்தப்படாதே'' என்றான் ஆனந்தனின் கைகளைப் பற்றிக் கொண்டு.

ஆனந்தன் சுந்தரத்தைக் கனிவோடு நோக்கி, ''நான் ஏதோ தியாகம் செய்ய முன் வந்ததா இவர்களெல்லாம் சொல்கிறார்களே... நீமட்டும் என்ன சாமான்யமா? ரங்கண்ணா காரியங்களெல்லாம் முடிந்தவுடன் ஞானகியின் அம்மாவிடம் நீ என்ன சொன்னாய் என்பது எனக்குத் தெரியும்...'' என்று கூறி என்னைப் பார்த்துத் தொடர்ந்து சொன்னான்: '' 'உங்கள் பெண்கள் இரண்டு பேரையும் நல்ல இடத்திலே கல்யாணம் செய்து கொடுக்கிறவரை நான் ஒண்டிக் கட்டையாகத்தான் இருப்பேன், கவலைப் படாதீர்கள்' என்று ரங்கண்ணா மீது ஆணையிட்டு வாக்களித்தான் சார், இவன்! எனக்குத் தெரியாதுன்னு இவனுக்கு நினைப்பு. உண்மையா அப்போது எனக்குத் தெரியாதுதான். ஆனால் பின்னாடி தெரிய வந்ததும், அவன் பொறுப்பைக் குறைக்க உடனடியா ஏதாவது செய்தாகணும்னு நான் முடிவு செய்தேன்!'' என்றான். கண்களில் உண்மையொளி சுடர்விட அவன் நின்ற காட்சி என் நெஞ்சைத் தொட்டது.

சுந்தரத்தின் கண்கள் குளமாகி விட்டன.

ரங்கண்ணா அகாலத்தில் மரணமடைய நேர்ந்தது துர்ப்பாக்கியம்தான். எனினும் அவரது வலது கண்ணும் இடது கண்ணுமாக அவருக்குச் சுந்தரமும் ஆனந்தனும் சீடர்களாக அமைந்ததை எண்ணியதும் அந்த வருத்தமே பறந்து விடுகிறது. ரங்கண்ணாவுக்காகப் போட்டி போட்டுக் கொண்டு தியாகம் செய்ய முன் வரும் சுந்தரமும் ஆனந்தனும் சாதாரண மனிதப் பிறவிகளா?

# வட்ட மேஜை

★ அமெரிக்கப் பாடம்
★ அவதிக்கு எல்லையில்லை
★ சர்க்காரும் பிரம்மச்சாரிகளும்

**ஆ**க்கிய கதையுடன் காட்சி யளிக்கும் ஹெம்பி பீமனை மேலட்டையில் தாங்கி வரும் புத்தாண்டு கல்கி இதழ் மிகவும் பிரமாதமாக இருக்கிறது. லஞ்சத்தையும், பஞ்சத்தையும், பீதியையும், பகையையும் விரட்டும் பாவத்துடன் நிற்கிறார் பீமசேனர்.

'ராஜாஜியின் கருத்துக்கள்' பகுதியில் வெளியாகியிருக்கும் சேலம் மாவட்டம் ஆப்பனூர் கே. ராமசாமியின் கடிதம் நூற்றுக்கு நூறு உண்மை.

மாதாந்திர மைதா, சர்க்கரை கோட்டா கேட்கப் போகும் ரொட்டிக் கடைக்காரர், மக்கடைக்காரர் எவரையும் தாசில்தார் விடுவதில்லை. ஒரு கிராம் தங்கம் பதினைந்து ரூபாய் என்று கணக்கிட்டுப் பணமாக வசூலித்து, பின்பு காங்கிரஸ் கட்சியிலிருக்கும் ஒரு பொற் கொல்லரைக் கொண்டு தங்கம் தருவித்து ஈடு செய்து கொள்கிறார்கள். இந்தக் கெடுபிடிக்குப் பயந்து சில மக்கடைக்காரர்கள் சர்க்கரை பர்மிட் வாங்குவதைக் கூட விட்டு விட்டதாகத் தெரிகிறது.

இவ்விதமெல்லாம் கெடுபிடி செய்து தங்கம் வசூலித்து அதை ஒரு விழா வைத்து முதல் மந்திரியைக் கூப்பிட்டு ஜில்லா கலெக்டர்கள் கொடுக்கிறார்கள். மந்திரிகளும் அதைப் பெற்றுக் கொண்டு, "மக்கள் மனமுவந்து தங்கப் பத்திரத்தில் முதலீடு செய்வதைக் கண்டு சந்தோஷிப்பதாக"ச் சொல்லி வைக்கிறார்கள்.

இதே மாதிரி நெருக்கடி அமெரிக்காவுக்கும் 1936ம் ஆண்டில் ஏற்படத்தான் செய்தது. அப்பொழுது ஜனாதிபதியாக இருந்த ரூஸ்வெல்ட் அதிக விலை கொடுத்துத் தங்கம் வாங்கித் தங்கள் குறைபாட்டைச் சரிக்கட்டினார். அதுபோல் ஜனநாயக சோஷலிஸம் பேசும் காங்கிரஸ் ஆட்சியாளர்களும் செய்யலாம். அல்லது தங்கக் கட்டுப்பாடு சட்டத்தை ரத்துச் செய்து விடலாம்.

திருவண்ணாமலை
30-12-65 — கே. வி. ராமதுரை

ஃ ஃ ஃ

**ஒ**வ்வொரு தமிழ்க் குடும்பத்திலும் ஒரு வேளைப் பொழுதுக்குத் தலைக்கு ஒரு கட்டோரி (சிறிய கிண்ணம்) சோறுகூடச் சாப்பிட முடிவதில்லை. முக்காலே அரைக்கால்வாசி குடும்பங்களிலும் இரு வேளையும் ரொட்டியும் ஜவாரியாலான பாக்ரியும்தான் சாப்பிடுகிறோம். இதை வயது வந்தவர்களால் கடித்துச் சாப்பிட முடிவதில்லை. இருக்கும் கொஞ்ச நஞ்ச அரிசியைக் கைக் குழந்தைக்குக் கூடத் தினப்படி போட முடியவில்லை.

ஆடுமாடுகளுக்கும், கோழிக்கும் கொடுக்கும் குறுணை அரிசியை (பொடி அரிசி) தருகிறார்கள் சில சமயம். இப்பொழுது அதுவும் இல்லை. இரண்டு வாரம், மூன்று வாரம் என்று ரேஷனில் தருவதை ஒரேயடியாகத் தராமலே இருக்கிறார்களே.

நாக்பூர் தென்னிந்தியர்கள் படும் அவஸ்தை கொஞ்ச நஞ்சமல்ல! ஜனவரி 2ந் தேதி கல்கி இதழில் 'ஆரம்ப சாதனை' என்ற தலைப்பின் கீழ் ஒரு நேயர் எழுதியதைப் படிக்கும் போது, 'வீணாகிப் போன 3337 மூட்டை அரிசியும், ரேஷனில் கிடைக்கும் ஒரு கட்டோரி சோறும்' என்று ஒப்பிட்டுப் பார்க்கத் தோன்றுகிறது.

நாக்பூர்
4-1-66 — அனுராதா, காமாட்சி, கமலா, சுந்தரி

ஃ ஃ ஃ

**ம**ணமாகாதவர்கள் வருமான வரி அதிகம் கொடுக்க வேண்டுமாம்! ஏனெனில் அவர்களுக்குத் தொல்லைகள், சிக்கல், பிடுங்கல்கள் அதிகமில்லையாம்! மணமானவர்களுக்காவது தன் குழந்தை குட்டிகளுடன் கூடிய சிறிய குடும்பத்துடன் தொல்லைகள் முடிவடைகின்றன. ஆனால் பிரமச்சாரிகளோ, அண்ணன், தம்பி, அப்பா, அம்மா, தாத்தா, பாட்டி என எல்லோரையும் அணைத்துச் செல்ல வேண்டிய 'தனருக்கிளைத்த பிள்ளையார்கோவில் ஆண்டிகளாக' இருக்க வேண்டியிருக்கின்றது. "உனக்கு என்னப்பா, 'பேச்சிலர்' தானே!" எனக் கூறி எல்லோரும் அலட்சியம் செய்கிறார்களே ஒழிய எங்களுக்குள்ள சிரமங்களை உணர்வதில்லை. பிரும்மச்சாரிகளாக இருந்தாலும், அவர்களைச் சார்ந்து வாழ்பவர்கள் இருந்தால் அத்தகைய பிரும்மச்சாரிகளுக்கும் வரிச் சலுகை தரப்பட வேண்டும்.

ரூர்கேலா,
5-1-66 — எஸ். பார்த்தசாரதி

ஃ ஃ ஃ

**ஜ**னவரி 9-ந் தேதி இதழில் பல்சுவைப் பக்கத்தில் கார்பாலிக் அமிலம் என்பதற்குப் பதிலாக கார்பாலிக் அமிலம் என்று போட்டு விட்டீர்களே! 'கார்பாலிக் அமிலம்' ஒரு கிருமி நாசினி. கொடிய விஷமும் கூட. ஒரு சிறிய அளவுக்கு மேல் உட்கொண்டால் மரணம்தான் தெரியுமா? அது எப்படிச் சோடாவாக முடியும்?

சென்னை-6 — க. கங்காதரன்
7-1-66 — பி. எஸ்மணி. (பார்மணி)

**இ**ரசாயனப் பெயர்களில் தவறு வந்தால் அச்சுப் பிழை என்று தப்பித்துக்கொள்ளக் கூடாது. ஏனெனில் இரசாயனத்தில் அச்சுப் பிழை செய்யும் பிழை அதைவிட மோசமானது.

சென்னை-33 — பா. கோ. சேஷன்
6-1-66 — நா. க. சேதுராமச்சந்திரன்

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

உங்களுடைய கேசம் ஆரோக்யமாகவும்
பளபளப்புடனும் விளங்கும்

# பிரில்க்ரீம்

தடவி நேர்த்தியாக தலையை வாரிக்கொண்டால்!




பிரில்க்ரீம் மட்டுமே

- அதிக எண்ணெய்ப்பற்று இல்லாமலும், தாறுமாறாக உரோமம் கலையாமலும் நேர்த்தியாக தலையை வார உங்களுக்கு உதவுகிறது.
- மிகவும் சிக்கனமானது—ஒருமுறை தடவி வாரிக்கொண்டால் நாள் முழுவதும் உங்கள் தலை கலையாது அழகாக தோற்றமளிக்கும்.
- உரோமம் உதிர்ந்து வழுக்கை விழாமல் தடுக்கக்கூடிய, ஆரோக்யமான உரோம வளர்ச்சியைத் தூண்டக்கூடிய, நேர்த்தியான கலவை வாய்ந்தது.
- உங்களுடைய கேசத்தின் இயற்கையான வண்ணத்தைப் பாதுகாக்கிறது.

எனவே இனிமேல் பிரில்க்ரீமையே உபயோகியுங்கள்!

உலகமுழுவதிலும் லக்ஷக்கணக்கான நேர்த்தியான மனிதர்கள் இதையே உபயோகிக்கிறார்கள்

*B/P/1/P/1/65 TM*

